கழக வெளியீடு : கூ0அ

உயர்தரக்

# கட்டுரை இலக்கணம்

[இரண்டாம் பாகம்]



சேலம் நகராண்மைக் கல்லூரித் தமிழ்த்திணைக்களத் தலைவர்
பண்டித புலவ வித்துவ
**ஞா. தேவநேயன், எம். ஏ.,**
இயற்றியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# முகவுரை

இந்நூலின் முதற்பாக முகவுரையில் கூறியுள்ளபடி, **மரபியலும், கட்டுரையியலும்** இவ்விரண்டாம் பாகமாக வெளிவருகின்றன.

இவ்விலக்கணம் கட்டுரைக்கென்றே எழுதப்பெற்ற தாகலின், கட்டுரைப் பாகுபாடு முதன் முறையாக முழு நிறைவாகச் செய்யப்பெற்று, பதினான்கு போலிகை (மாதிரி)க் கட்டுரைகளும் தரப்பெற்றுள்ளன.

செய்யுள் மதிப்பீடு (Appreciation of Poetry) இந் நூலுக்கு வேண்டாமையின், அது விடப்பட்டுள்ளது.

இவ்விரண்டாம் பாகத்திற் கூறப்பட்டுள்ளவை யெல் லாம், எல்லா மாணவர்க்கும் உரியன.

சேலம்,
23—8—1951

ஞா. தே.

# உள்ளடக்கம்

உயர்தரக்

# கட்டுரை இலக்கணம்

[இரண்டாம் பாகம்]



## II. மரபியல்

### 1. வழக்கியல் வகை

சொற்களும் சொற்றொடர்களும் வழங்கிவருவது வழக்கு.

அது, இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என இருபாற்படும்.

**இயல்பு வழக்கு:**

(1) இலக்கணமுடையது,

(2) இலக்கணப்போலி,

(3) மரூஉ,

என மூவகைப்படும்.

இலக்கணந்தவறாத சொல்லும் சொற்றொடரும் இலக்கணமுடைய (இலக்கண) வழக்காம்.

எ-டு. *யானை, யானை மலையில் வாழும்.*

இலக்கணம் சிறிது தவறியும் இலக்கணமுடையது போல வழங்கும் சொல்லும் சொற்றொடரும், இலக்கணப் போலி வழக்காம்.

எ-டு. விசிறி - சிவிறி (எழுத்துமுறை மாற்று)
கோவில் - கோயில் (உடம்படுமெய்ம் மாற்று)
நகர்ப்புறம் - புறநகர் (சொன்முறை மாற்று)

சொற்களும் சொற்றொடரும் மருவி வழங்குவது மரூஉ வழக்காம். மருவுதலாவது சிதைதல் அல்லது குறுகுதல்.

எ - டு. வாழ்நன் - வாணன்.
திருச்சிராப்பள்ளி - திருச்சி.

தகுதி வழக்கு :

(1) இடக்கரடக்கல்,
(2) மங்கலம்,
(3) குழூஉக்குறி,

என மூவகைப்படும்.

அவையில் சொல்லத்தகாத இடக்கரான பொருளை அல்லது கருத்தை அடக்கி (அதாவது மறைத்து)ச் சொல்வது, இடக்கரடக்கல் வழக்காம்.

எ - டு. 'பன்றியொடு சேர்ந்த கன்றும் பவ்வீ தின்னும்.'

அமங்கலமான கருத்தை மங்கலச் சொல்லாலும் சொற்றொடராலும் குறிப்பது, மங்கல வழக்காம்.

எ - டு. துஞ்சினன்
இறைவன் திருவடி நிழலடைந்தான்
இயற்கை எய்தினன்
திருநாடலங்கரித்தான்
பெரும்பிறிது (சாவு) உற்றான்
(செத்தான்)

பிறர்க்குப் புலனாகாதவாறு, ஒரு குழுவார் மட்டும் தமக்குள் மறைபொருளவாக வழங்கும் குறிகள் அல்லது சொற்கள், குழூஉக் குறியாம்.

எ - டு. கருந்தலை ($\frac{1}{4}$)
இரு குரங்குக்கை (முசுமுசுக்கை)

குறிப்பு : ஒரு நாட்டில் ஒரு பகுதிக்கே சிறப்பாயுரிய திசைவழக்கையும், உயர்ந்தோரல்லாதார் வழங்கும் இழி

வழக்கையும், அயன்மொழி தழுவிய அயல்வழக்கையும், கட்டுரைகளிலும நூல்களிலும் வழங்குதல் கூடாது.

திசை வழக்கு :

| | | |
|---|---|---|
| எ-டு. தஞ்சை | வடார்க்காடு | கோவை |
| கெட்டுப் போயிற்று | தாரைவார்ந்து போயிற்று | கூடப்போயிற்று (காணமற் போயிற்று) |

திசைவழக்கு அவ்வவ்விடத்திற்கு ஏற்கும்; நாடு முழுமைக்கும ஏற்காது.

இழி வழக்கு :

வெளுத்துவாரிவிட்டான், கம்பியை நீட்டிவிட்டான், அந்தப்பருப்பு இங்கே வேகாது.

அயல் வழக்கு :

| பிழை | திருத்தம் |
|---|---|
| விளையாட்டில் நன்றாய்ச் செய்தார்கள். | நன்றாய் விளையாடினார்கள். |
| பயிற்சியெடுக்கவேண்டும். | பயிற்சி செய்யவேண்டும். |
| கூட்டத்திற் பங்கெடுத்துக் கொள்ளுங்கள். | கூட்டத்தைச் சேர்ந்து நடத்துங்கள். |

இங்குக் கூறிய அயல்வழக்கு ஆங்கிலமொழியைத் தழுவியது.

சில சொற்கள், உலகவழக்கில் ஒருவகைப் பொருளும செய்யுள் வழக்கில் ஒருவகைப் பொருளும தரும். கட்டுரைகளில், இடத்திற்கேற்ப இருவகையுளொன்றைத் தழுவலாம.

எ-டு. நாற்றம் = தீநாற்றம (உலக வழக்கு)
,, = நறுநாற்றம் (செய்யுள் வழக்கு)

## 2. பெயர்ச்சொல்

### 1) பண்புப்பெயர்கள் :

நுமை = பெருமை, வலிமை, பழைமை, கொடுமை, கீழ்மை, தீமை.
கருங்கண் = கண்ணேறு (திருஷ்டிதோஷம்).

கருங்கந்து=நெற்களத்தில் பொலிக்கு அடுத்து விழும் பதர்.
கருங்கறி=வளமான சதை.
கருங்காடு=சுடுகாடு.
கருங்காய்=இளம்பாக்கு, கொஞ்சங்குறைய முற்றிய காய்.
கருங்குணம்=தீக்குணம்.
கருங்கூத்து=இழிதரக் கூத்து, அநாகரிகக் கூத்து.
கருங்கை=வேலையில் அடிப்பட்டுக் கருத்த கை, வலிய கை, கொல்லுங்கை.
கருஞ்சரக்கு=கூலம் (தானியம்), சாராயம்.
கருஞ்சார்=இடுப்புப்பொருத்து (Hip-joint)
கருஞ்செய்=நன்செய்.
கருஞ்சேவகம்=பெருவீரச்செயல்.
கருந்தமிழ்=கருகலான தமிழ்.
கருந்தரை, கருநிலம்=பாழ்நிலம், பயன்படாத நிலம்.
கருந்தலை=போரில் இறக்கும் தலை, முடிவு.
கருந்தனம்=பெருஞ்செல்வம், பொன.
கருந்தாள்=அறுபட்ட தாளடி.
கருந்திட்டை, கருந்திடர்=பெரிய மேடு.
கருந்தொழில்=உறுதியான வேலைப்பாடு, கடுவுழைப்பு, கொலைத்தொழில்.
கருநடம்=இழிதர நடம்.
கருநாக்கு=தீயநாக்கு.
கருநாக்கன்=கஞ்சன், தீயன்.
கருநாடகம்=இழிதர நாடகம், அநாகரிக நாடகம்.
கருநாழிகை=இரவு.
கருநாள்=அமங்கலநாள், தீநாள்.
கருநீலப்பிறப்பு=நரகநிலைக்குச் சிறிது மேற்பட்ட பிறவி.
கருநூல்=சூனிய (செய்வினை) நூல்.
கருப்பு=பேய், பஞ்சம்.
கரும்பாடு=வரியில் அல்லது குளத்தில் கரைக்கும் நீருக்கும் இடையிலுள்ள நிலம்.
கரும்பிறப்பு=நரகப்பிறவி.
கருமகள்=சண்டாளி.
கருமகன்=சண்டாளன், கொல்லன்.
கருமானம்=சூனியவித்தை.
கருமேனி=பொருளுடம்பு, (தூலசரீரம்).
கருவலி=மிகுந்த பலம்.
கருவாளி=மதிநுட்பன்.
கருவினை=பாவம், தீவினை.
கருவூலம்=பொக்கிஷவறை.

கார்வினை=பாவத்தொழில், தீச்செயல்.
காரறிவு=மயக்கம் பொருந்திய அறிவு.
செம்மை=செவ்வை, நேர்மை, ஒழுங்கு, துப்புரவு, அழகு, பெருமை, சிறப்பு, நன்மை.
செங்களம=போர்க்களம்.
செங்காய=பழுக்கும் பருவக்காய்.
செங்காய்ப்புண=பழுக்காத புண்.
செஙகுணக்கு=நேர்கிழக்கு.
செஙகுத்து=நேர் குத்து.
செங்கை=கொடைக்கை.
செஙகோடு=செங்குத்தான மலை.
செங்கோல்=நேர்மையான ஆட்சி, நேரான கோல்.
செஞ்ச, செஞ்செசெவே=நேராக, முழுதும்.
செஞ்சம், செஞ்சு=நேர்மை, சரிமை (Correctness), முழுமை.
செஞ்செயல்=நேர்மையான செயல்.
செஞ்செவியா=செல்வர்.
செஞ்செழிப்பு=பெருஞ்செழிப்பு, ஏராளம்.
செஞ்சொல்=திருந்தியசொல், வெளிப்படைச்சொல்.
செஞ்சோறு=அரசன் தன்பொருட்டுப் போரில் இறக்கக் கருதிய வீரனுக்குக் காலமெல்லாம் அளிக்கும் சோறு.
செஞ்ஞானி=சிறந்த ஞானி.
செந்தட்டு=அந்தரத்தட்டு, தன்மேல் விழும் அடியைத் தடுக்கை, ஏவின காரியத்தைத் தட்டுகை.
செந்தமிழ்=இலக்கணத்தமிழ், தூயதமிழ்.
செந்தலிப்பு=செழிப்பு.
செந்தூக்கு=நேராகத் தூக்குகை.
செந்தொடை=மோனையெதுகையில்லாத யாப்பு.
செந்நடை=செவ்வியநடை.
செந்நிறுவுதல்=நன்னெறியில் நிறுத்துதல்.
செந்நெறி=செவ்வியவழி, நன்னெறி.
செந்நிலம்=போர்க்களம்.
செம்பத்தி=உண்மையான அன்பு.
செம்பாகம், செமபாதி, செம்பால்=நேர்பாதி.
செம்புண்=ஆறும் நிலையிலுள்ள புண்.
செம்பொருள்=நேர்பொருள், உண்மைப்பொருள், சிறந்த பொருள், கடவுள், அறம்.
செம்மல்=தலைமை, வலிமை, தலைவன், இறைவன்.
செம்மாத்தல்=இறுமாத்தல், மிகமகிழ்தல்.
செம்மொழி=நற்சொல், திருந்தியமொழி.

நீலம்

நீலன்=கொடியவன்.
நீலி=கொடியவள்.

பசுமை=இளமை, ஈரம், குளிர்ச்சி, அழகு, இனிமை, புதுமை, வேகாமை.

பச்சுடம்பு
பச்சையுடம்பு } =பிள்ளைப்பேற்றால் இளந்தவுடம்பு.
பச்சை=இடக்கர், வெளிப்படை.
பச்சைப்பேச்சு=இடக்கர்ப்பேச்சு, மறையாப்பேச்சு.
பச்சைக்கள்ளன்=பெருந்திருடன்.
பச்சைக்குறவன்=பெரும்பாசாங்குக்காரன்.
பச்சைக்கொல்லன=வேலைத்திறமையற்ற கொல்லன்.
பச்சைப்பதம்=கூலத்தின் முற்றாப்பருவம், நன்றாய் வேகாத நிலை.
பச்சைப்புண்
பசும்புண் } =ஆறியிராதபுண், புதுப்புண்.
பச்சைப்புளுகன்=பெரும்பொய்யன்.
பச்சைப்பூ=பால்குடிக்கிற குழந்தை.
பச்சைப்பொய்=முழுப்பொய்.
பச்சைப் பசும்பொய்=பெரு முழுப்பொய்.
பச்சைமண்=இளங்குழந்தை.
பச்சைவெட்டு=பக்குவம் செய்யப்படாதநிலை, பழுக்காதநிலை.
பச்சைவெட்டுக்கல்=சுடாத செங்கல்.
பசுங்குடி=யோக்கியமானகுடி, உழவன்.
பசுந்தமிழ், பைந்தமிழ்=இனிய தமிழ்.
பசும்பை=வணிகர் தோளில்மாட்டிக்கொள்ளும் நீண்டபை.
பைங்கூழ்=இளம்பயிர்.
பைஞ்சேறு=சாணம்.

பொன்மை=பொலிவு, அழகு, விளக்கம்.
பொற்ப=பொலிவுபெற.

வெண்மை=வெறுமை, வெளிப்படை, அறிவின்மை, கள்ளமின்மை, உள்ளீடின்மை.
வெண்கடன்,
வெண்ணிலைக்கடன் } ஈடுகாட்டாது வாங்கும் கடன்.
வெண்காவல்=வெறுங்காவல் (Simple imprisonment)
வெண்கை=தொழில்செய்து பழகாத கை.
வெண்சோறு=வெறுஞ்சோறு.
வெண்டேர்=கானல் (Mirage).
வெண்ணிலம்=வெறுந்தரை, மணல்தரை.

வெண்ணோவு,
வெண்ணோக்காடு } = பிள்ளைப்பேற்றிற்குமுன் உண்டாகும் வெறு வேதனை.
வெண்பதம் = இளஞ்சூட்டுப்பதம்.
வெண்பாட்டம் = முன்பணமின்றி விடும் குத்தகை.
வெண்புழுக்கல்,
வெண்புழுக்கு,
வெண்புழுங்கல் } = இளம்புழுக்கல், இளம்புழுக்கலரிசி.
வெண்மட்டக்கருத்து = மேலெழுந்த வாரித்தீர்மானம் (Superficial judgement).
வெண்மட்டம் = மேலெழுந்தவாரி, நுணுக்கமின்மை.
வெண்மட்டவேலை = நுணுக்கமில்லாதவேலை, மேலெழுந்தவாரியாகச்செய்யும் வேலை.
வெள்வீச்சு = ஆடம்பரப்பேச்சு.
வெள்வெடி = குண்டு இல்லாத தோட்டா.
வெள்ளந்தி = கள்ளங்கவடற்றவன்.
வெள்ளடி = சாதாரணம்.
வெள்ளடிவெருட்டு = வெட்டைமிரட்டு.
வெள்ளவெளி = பரவெளி.
வெள்ளறிவு = அவிவேகம்.
வெள்ளிடி = கோடையில் மழைபெய்யாது இடிக்குமிடி, எதிர்பாராது திடுமெனவரும் துன்பம்.
வெள்ளிடை,
வெள்ளிடைமலை } = மிகத்தெளிவாயிருப்பது.
வெள்ளிது = வெளிப்படையானது.
வெள்ளிலை = வெற்றிலை.
வெள்ளுயிர் = தூயஆன்மா.
வெள்ளுருட்டு = வெற்றச்சுறுத்தம்.
வெள்ளுழவு = சிறிது ஈரமுள்ள நிலத்தில் உழும் உழவு.
வெள்ளெழுத்து = எழுத்து விளக்கமாய்த் தெரியாமைக்கேதுவான பார்வைக்குறை (Long sight).
வெள்ளென = அதிகாலையில், இருட்டுமுன், குறித்தகாலத்திற்கு முன்பே.
வெள்ளேடு = வெற்றேடு.
வெள்ளேறன் = பழுதான இரும்பு (Scrap iron).
வெள்ளை = கள்ளமற்றவன்.
வெள்ளைக்கவி = பொருட்செறிவில்லாத பாட்டு.
வெள்ளைக்கோட்டி = பயனில்பேச்சு, பயனிலபேசும் அறிவிலார் கூட்டம்.
வெள்ளைச்சொல் = எளியசொல், திருந்தாச்சொல்.
வெள்ளைத்தமிழ் = எளியநடைத்தமிழ்.
வெள்ளைத்தனம் = கள்ளமின்மை.

வெள்ளைநோக்கு=கள்ளமற்றபார்வை.
வெள்ளைப்புண்=ஊன்வெளுத்து எளிதிலாறாத புண்.
வெள்ளைப்பூசு=தவற்றை மறைக்கை.
வெள்ளைப்பேச்சு=வெளிப்படையான பேச்சு, கள்ளமற்ற பேச்சு.
வெள்ளைபூசுதல்=தவற்றை மறைத்தல்.
வெள்ளைமகன்=மூடன்.
வெள்ளைமதி=அறியாமை, அறிவுக்குறைவு.
வெள்ளைமழை=சிறுமழை.
வெள்ளைமனம்=கவடற்றமனம்.
வெள்ளொக்கல்=குற்றமற்ற இனம், செல்வமுள்ள கிளைஞர்.
வெள்ளோக்காளம்=உமிழ்நீரை மட்டும் வெளியேற்றும் குமட்டல்.
வெள்ளோட்டம்=புதுத்தேரை முதன்முதலாக ஓட்டிப்பார்த்தல், பயன்படுத்துவதற்கு முந்திய நோட்டம் (பரீட்சை).
வெள்ளோலை=எழுதப்படாத ஓலை.

(2) மரபுப்பெயர்கள் :

i ஆண்பாற்பெயர் :

| உயிரினப்பெயர் | ஆண்பாற்பெயர் |
|---|---|
| யானை, பன்றி | களிறு |
| குரங்கு | கடுவன், திம்மன் |
| எருமை | கண்டி |
| பன்றி | கேழல் |
| புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம், யானை, பன்றி, எருமை. | ஒருத்தல் |
| அரிமா, பன்றி, புல்வாய்[1], உழை[2], கவரி, எருமை, மாடு, மரை, சுறு | ஏறு |
| அரிமா, புலி, குரங்கு, பனை | ஏற்றை |
| மாடு, எருமை, புலி, மரை, புல்வாய், சுறு, முதலை, இடங்கர்[3], கராம்[4], வரால், வாளை, மயில், புல்லூறு | போத்து |

1, 2. புல்வாய், உழை மான் வகைகள்.
3, 4. இடங்கர், கராம் என்பன முதலைவகைகள்.

| உயிரினப்பெயர் | ஆண்பாற்பெயர் |
|---|---|
| புல்வாய் | இரலை |
| புல்வாய், உழை, முசு | கலை |
| ஆடு | மோத்தை, தகர், உதள், அப்பர், மேழகம் (ஏழகம்), செச்சை. |
| பறவைகள், குதிரை | சேவல் |
| குதிரை, மாடு, புல்வாய் | சே |
| மாட்டுக்கன்று, எருமைக் கன்று | சேங்கன்று |
| ஆடு, மாடு, எருமை | கடா |
| மாடு, எருமை, யானை | பகடு |
| மாடு | காளை, எருது |

ஆண்பாற்குச் சிறப்புப்பெயர் பெறாத உயிரினங்களின் ஆண்பாலெல்லாம், ஆண் என்னும் அடைமொழி பெற்ற பொதுப்பெயரால் குறிக்கப்பெறும்.

எ - டு. ஆண்கரடி, ஆண்பல்லி.

ii. பெண்பாற்பெயர் :

| உயிரினப்பெயர் | பெண்பாற்பெயர் |
|---|---|
| யானை | பிடி |
| ஒட்டகம், குதிரை, கழுதை, மரை | பெட்டை |
| பறவைகள் | பெட்டை, பெடை, பேடை |
| கோழி, கூகை, மயில் | அளகு |
| புல்வாய், நவ்வி[1], கவரி | பிணை |
| பன்றி, புல்வாய், நாய் | பிணா, பிணவு, பிணவல் |
| கரடி | பிணவு |
| மாடு, எருமை, மரை | ஆ, ஆன் |
| மாடு, எருமை, மரை, நந்து (சங்கு) | நாகு |
| ஆடு | மூடு, கடமை, மறி |
| பன்றி, நாய், நரி | பாட்டி |
| குரங்கு, முசு[2], ஊகம்[3] | மந்தி |
| மாடு, எருமை | கிடேரி |

1. நவ்வி ஒருவகை மான்.
2, 3. முசு, ஊகம் என்பன குரங்கு வகைகள்.

பெண்பாற்குச் சிறப்புப்பெயர் பெறாத உயிரினங்களின் பெண்பாலெல்லாம், பெண் என்னும் அடைமொழி பெற்ற பொதுப்பெயராற் குறிக்கப்பெறும்.

எ - டு. பெண்மடங்கல், பெண்பல்லி.
மடங்கல்=சிங்கம்.

### iii. இளமைப்பெயர் :

| உயிரினப்பெயர் | இளமைப்பெயர் |
|---|---|
| பறவைகள், ஊர்வன | பார்ப்பு, பிள்ளை |
| பறவைகள், நண்டு, மீன், தேள் | குஞ்சு |
| காக்கை, கிளி, கீரி | பிள்ளை |
| மூங்கா, வெருகு | குட்டி, பறழ் |
| அணில் | குட்டி, பறழ், பிள்ளை |
| எலி | குட்டி, குஞ்சு |
| பன்றி, புலி, முயல், நரி | குருளை, குட்டி, பறழ், பிள்ளை |
| நாய் | குருளை, குட்டி, பறழ் |
| ஆடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய், மான், அழுங்கு | மறி |
| குரங்கு | குட்டி, மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு |
| ஆடு, குதிரை, மான் | குட்டி |
| யானை, குதிரை, கழுதை, கடமை, ஆன், எருமை, மரை, கவரி, கராம், ஒட்டகம் | கன்று |
| யானை, ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் | குழவி |
| அரிமா, ஓநாய் | குருளை, குட்டி |
| மாந்தன் | குழவி, மகவு, பிள்ளை, சேய், குழந்தை, பாப்பா |
| ஆளி | அணங்கு |
| யானை | கயந்தலை, களபம், கன்று |
| கரடி | குடாவடி, குட்டி |
| காசறை (கத்தூரிமான்) | கரு |

| | |
|---|---|
| நாவி (புனுகுப்பூனை) | பிள்ளை |
| உடும்பு, ஓணான், பாம்பு | குட்டி |
| மாடு, எருமை | கன்று |
| பூனை, வாவல் (வெளவால்) | குட்டி |
| பேன் | செள் |
| பயிர்கள், செடிகள் | நாற்று |
| மரங்கள் | கன்று |
| தென்னை | பிள்ளை |

பொதுவாக, முட்டையிடுபவற்றின் இளமைப்பெயர் குஞ்சு என்பதும், நேரடியாக ஈனுபவற்றின் இளமைப் பெயர் குட்டி என்பதுமாகும்.

பிள்ளைகுட்டி கடைக்குட்டி முதலிய வழக்குகளில், குட்டி என்னும் பெயர் மக்கட்கும் உரியதாகும்.

சில உயிரினங்களின் இளமைப்பெயர், ஏதேனும் ஓர் அடைமொழிபெற்ற பொதுப்பெயராகவே வழங்கும்.

எ - டு. நரிக்கெளிறு, அரைத்தவளை, குட்டிவிளா, பிள்ளை விளாத்தி.

iv. சினைப்பெயர் :

| | முதற்பெயர் | சினைப்பெயர் |
|---|---|---|
| இலைப்பெயர்: | தென்னை, பனை முதலியவை | ஓலை |
| | சோளம், கரும்பு, முதலியவை | தோகை |
| | நெல், புல், முதலியவை | தாள் |
| | வாழை, மா, முதலியவை | இலை |
| பிஞ்சுப்பெயர்: | தென்னை, பனை, | குரும்பை |
| | மா | வடு |
| | பலா | மூசு |
| | வாழை | கச்சல் |
| வித்துப்பெயர்: | மிளகாய், கத்தரி முதலியன | விதை |
| | நெல், சோளம் முதலியன | மணி |

| | | |
|---|---|---|
| | ஆமணக்கு, வேம்பு முதலியன | முத்து |
| | பலா, மா, முதலியன | கொட்டை |
| உள்ளீட்டுப்பெயர்: | நெல், கம்பு, முதலியன | அரிசி |
| | அவரை, துவரை முதலியன | பருப்பு |
| | வாழை, மா முதலியன | சதை |
| | பலா, சீத்தா முதலியன | சுளை |
| | முருங்கை, கற்றாழை முதலியன | சோறு |
| தலைப்பெயர்: | மா, புளி, முதலியன | கொத்து |
| | முந்திரி, ஈந்து, முதலியன | குலை |
| | வாழை | தாறு |
| | நெல், சோளம், முதலியன | கதிர் |

இங்ஙனமே, பிற சினைப்பெயர்களையும் மரபுப்படி வழங்குக.

v. ஆடையணிப்பெயர் :

| ஆடவர்க்குரியன | பெண்டிர்க்குரியன |
|---|---|
| வேட்டி | சேலை, புடைவை |
| உத்தரீப்பு | மாராப்பு (மார்யாப்பு) |
| கடுக்கன் | கம்மல் |
| கழல் | சிலம்பு |

vi. மேய்ப்பன்பெயர் :

| விலங்குப்பெயர் | மேய்ப்பன்பெயர் |
|---|---|
| ஆடு | இடையன், ஆட்டுக்காரன் |
| மாடு | இடையன், மாட்டுக்காரன் |
| குதிரை | பாகன், தோட்டி |
| யானை | பாகன் |

பிற விலங்குகளின் மேய்ப்பரைக்குறித்தற்கு, விலங்குப் பெயருடன் 'காரன்' என்னும் பின்னொட்டையாவது 'மேய்ச்சி' என்னும் பெயரையாவது, சேர்த்துக்கொள்க.

எ - டு. பன்றிக்காரன், பன்றிமேய்ச்சி.

## 3. வினைச்சொல்

### (1) இசைக்கருவி வினைகள் :

தோற்கருவிகள் : கஞ்சிராத்தட்டினார், மத்தளம் (மிருதங்கம்) தட்டினார், தவல் அடித்தார், பறையறைந்தார், தப்பு அடித்தார், முரசு அறைந்தார், கொட்டுகொட்டினார்.

துளைக்கருவிகள் : குழல் ஊதினார்; நாதசுரம் ஊதினார், இசைத்தார்; சங்கு ஊதினார், வாய்வைத்தார், குறித்தார்; கொம்பு ஊதினார், வாய்வைத்தார், குறித்தார்.

நரம்புக்கருவிகள் : கின்னரி (Fiddle) இழுத்தார், இசைத்தார், எழுவினார்; யாழ் (வீணை) எழுவினார், உளர்ந்தார், முரன்றார், இசைத்தார்; தம்புரா மீட்டினார்; கோட்டு எழுவினார், இசைத்தார்; சித்தார் இசைத்தார், எழுவினார்.

கஞ்சக்கருவிகள் : சாலர் அடித்தார், தட்டினார்; முகர்சிங்கு அடித்தார்; சப்பளாக்கட்டை அடித்தார், தட்டினார்; கிறிக்கட்டை அடித்தார்.

பலவகைக் கருவிகள் :

இயம் இயம்பினார்; இசைக்கருவிகளை இசைத்தார், இயக்கினார்.

### (2) உண்டி வினைகள் :

உண்பன : சோறு உண்டார், சாப்பிட்டார்; சாப்பாடு சாப்பிட்டார்; உணவு உண்டார்.

தின்பன : பலகாரம் தின்றார், சிற்றுண்டி அருந்தினார்.
பருகுவன : தண்ணீர் குடித்தார்; காப்பி குடித்தார்; மோர் குடித்தார், உறிஞ்சினார்.

காப்பிசாப்பிட்டார், தண்ணீர்சாப்பிட்டார் எனக் கூறுதல் வழுவாம்.

**(3) மழை வினைகள் :**

மழைதூறினது, மழைபெய்தது, மழைபொழிந்தது, (சொரிந்தது) மழைகொட்டினது, (ஊற்றினது).

இவ்வினைகள், முறையே, மென்மேலும் வலிதாய்ப் பெய்யும் நிலைகளைக் குறிக்கும்.

**(4) சினை வினைகள் :**

i. அடி வினைகள் :

அடிக்கீழ்ப்படுதல்=ஒருவன் இன்னொருவனுடைய ஆணைக்குள்ளாதல்.
அடிசாய்தல்=அடியில் நிழல்சாய்தல்.
அடித்திரும்புதல்=அடியில் நிழல்சாய்தல், உச்சிமேற் கதிரவன் மேற்குநோக்கிச்சாய்தல்.
அடிதொடுதல்=பிறர்பாதந்தொட்டு ஆணையிடுதல்.
அடிநகர்தல்=இடம்விட்டுப் பெயர்தல்.
அடிப்படுதல்=கீழ்ப்படிதல்.
அடிபிடித்தல்=அடிச்சுவடு பற்றிப்போதல், தொடருதல், துப்பறிதல்.
அடிபார்த்தல்=நிழலளந்து பொழுதறிதல்.
அடிபிழைத்தல=நெறிதவறிநடத்தல்.
அடிபிறகிடுதல்=பின்வாங்குதல், தோற்றோடுதல்.
அடிபெயர்தல்,
அடிபெயாத்தல் } =காலெடுத்துவைத்தல்.
அடியிரட்டித்தல்=முன்செல்லாமல் நின்ற இடத்திலேயே காலைத்தூக்கிவைத்தல்.
அடியிலேயுறைதல்,
அடியுறைதல் } =வழிபடுதல், அடிநிழலில் நிற்றல், ஒருவனுடைய பாதுகாப்பிற்குள்ளாதல்.
அடியொற்றுதல்=பின்பற்றுதல்.
அடிவிளக்குதல்=பாதங்கழுவியுபசரித்தல்.

ii. கண் வினைகள் :

கண்கலத்தல்=ஒருவரையொருவர் பார்த்தல், எதிர்ப்படுதல்.
கணகளவுகொள்ளுதல்=தான் பிறனைப்பார்ப்பதை அவன் காணாதவாறு தான் அவனைப் பார்த்தல்.

கண்கனலுதல்=கோபத்தாற் கண் சிவத்தல்.
கண்காட்டிவிடுதல்=கண்சாடையால் ஏவிவிடுதல்.
கண்கெடச்செய்தல்=அறிந்திருந்து தீமைசெய்தல்.
(எ - டு. வேட்டைக்காரன் தன் கூட்டாளியைக் கண்கெடச் சுட்டான்.)
கண்கெடப்பேசுதல்=கண்டொன்று சொல்லுதல்.
கண்சாத்துதல்=அன்போடு பார்த்தல்.
கண்சாய்தல்=அறிவுதளர்தல், அன்புகுறைதல்.
கண்சுருட்டுதல்=அழகினால் வசீகரித்தல், ஒருவனுக்குத் தூக்கமயக்கமாதல்.
கண்சுழலுதல்=விழிசுழன்று மயங்குதல்.
கண்செறியிடுதல்=முழுதும் பரவி அடைத்துக்கொள்ளுதல்.
கண்டுகழித்தல்=வெறுப்புண்டாகும்வரை நுகர்ந்து விலக்குதல், தானே சமைத்துச் சுவை அல்லது உண்ணும் ஆவலும் கெடுதல்.
கண்டுகாணுதல்=கவனமாய்ப்பார்த்தல்.
கண்டுபாவித்தல்=ஒருவினையைப் பின்பற்றிச்செய்தல் (To imitate an action).
கண்ணகற்றுதல்=துயில்நீங்கி விழித்தல்.
கண்ணடைதல்=பயிரின் குருத்து வெளித்தள்ளாமல் நின்றுபோதல், பால் முதலியன வேறுபட்டுக்கெடுதல்.
(எ - டு. கண்ணடைந்தபால்.)
கண்ணழித்தல்=பதவுரை கூறுதல்.
கண்ணறுதல்=அன்புகுறைதல், நட்புக்குலைதல், நீங்குதல்.
கண்ணூற்சுடுதல்=கண்ணேறு (திருஷ்டி) படப்பார்த்தல்.
கண்ணாவித்தல்=கண்ணுக்கு இன்பமூட்டுதல்.
கண்ணிற்றல்=எதிர்நிற்றல்.
கண்ணுக்குக்கண்ணாதல்=மிக அருமையான உறவாதல்.
கண்ணூறுகழித்தல், கண்ணெச்சில்கழித்தல் } =திருஷ்டிதோஷம் போக்குதல்.
கண்ணெறிதல்=கடைக்கண்ணாற் பார்த்தல்.
கண்ணொட்டுதல்=கண் தூக்கநிலையடைதல்.
கண்ணோடுதல்=விரும்பியபொருள்மேற் பார்வை செல்லுதல், இரங்குதல்.
கண்திறத்தல்=உருவச்சிலைகட்கு விழியமைத்தல், பருகுமாறு இளநீரைச் சீவுதல், சிலந்தி அல்லது கொப்புளம் நுனியில் உடைதல், வானம் வெளிவாங்குதல், அறிவு உண்டாகுதல், கல்வி கற்பித்தல்.
கண்தெறித்தல்=பெருவெளிச்சத்தாற் கண்ணொளிமழுங்குதல்.
கண்பசத்தல்=துன்பத்தாற் கண்ணின்நிறம் மாறுதல்.

v. கால் வினைகள் :

கால்கிளாதல்=ஓடுதல், படையெடுத்துச் செல்லுதல்.

கால்கெஞ்சுதல்=கால் ஓய்ந்து மேற்கொண்டு நடக்கமுடியாதிருத்தல்.

கால்கொள்ளுதல்=விழாவிற்குத் தொடக்கம் செய்தல், சில செதுக்கக் கற்கொள்ளுதல், பரவி இடத்தை யடைத்தல்.

கால் சாய்தல்=கெடுதல், அழிதல்.

கால் சீத்தல்=கோடு போற காலாற் கீறுதல், துடைத்துப் போக்குதல்

கால் தாங்குதல்=காலையிழுத்து நடத்தல்.

கால் பின்னுதல்=நோயினாற் கால்கள் ஒன்றுக்கொன்று குறுக்காதல், முட்டிக்கால் தட்டுதல்.

கால் முளைத்தல்=குழந்தை நடக்கத் தொடங்குதல்

(எ-டு. குழந்தைக்குக் கால் முளைத்துவிட்டது.)

கால் வாங்குதல்=கால் வழுக்குதல், உயிர்மெய் நெடிற்குறி வரைதல்.

கால் வார்த்தல்=கொடிக்காலில் ஆடி மாதம் அகத்தி விதையை ஊன்றுதல்.

கால்விடுதல்=தலைவுறவு நீங்குதல்.

கால விழுந்துபோதல்=பக்கவாதத்தாற் கால் அசைவற்றுப் போதல்.

காலாட்டுதல்=கெசவுத்தொழில் செய்தல்.

காலாடுதல்=முயற்சியாற் செல்வஞ் சிறந்திருத்தல்.

(எ-டு. அவனுக்கு இன்று காலாடுகின்றது.)

காலாணி யறுதல்=உள்ளங்கால் உரங்கெடுதல், வலிமை செல்வம் முதலியன குறைதல்.

காலாறுதல்=நடை ஓய்ந்து இளைப்பாறுதல், காலில் அரத்தவோட்டம் உண்டாக உலாவுதல்.

காலிறங்குதல்=மழைக்காலிறங்குதல், அரையாடையின் அடிவிளிம்பு தாழ்தல்.

காலூறுதல்=வழிப்போக்குக் குறியாகக் காலில் தினவுண்டாதல், பிள்ளைகட்கு ஓடிபாட விருப்புண்டாதல், கணவனுக்குப் பணம்வரற் குறியாக மனைவிக்குக் காலில் தினவுண்டாதல்.

காலூன்றுதல்=பந்தற்கால் நட்டுதல், மழைக்காலிறங்குதல், நிலைபெறுதல்.

காலைச் சுற்றுதல்=தொடர்ந்து பற்றுதல்.

காலொட்டுதல்=குறைவைச் சரிப்படுத்துதல்.

காலோடுதல்=ஒரு காரியத்தில் முயற்சியுண்டாதல்.

அகலக்கால் வைத்தல் = அளவுக்குமிஞ்சிய இடங்களைக் கைப்பற்றுதல் அல்லது கொள்ளுதல்.

## vi. கை வினைகள் :

கைக்கோரணி காட்டுதல் = இறக்குந்தறுவாயிலிருத்தல்.
கைகலத்தல் = தழுவுதல், கூடுதல், சண்டையிடுதல்.
கைகவிதல் = கைச்சாடையால் அடக்குதல், அபயமளித்தல்.
கைகாட்டுதல் = திறமை காட்டுதல்.
கைகாணுதல் = அனுபவத்தில் அறிதல்.
கை கெடுதல் = வறுமையடைதல்.
கைகொடுத்தல் = துன்பத்தில் உதவிசெய்தல், கைகுலுக்கக் கை நீட்டுதல்.
கைகோத்தல் = நட்புச்செய்தல்.
கைசசுப்பபடுதல், கைசசுட்டாதல் = சரியாக விதையாமையால் பயிர் சிலவிடத் திற் கூட்டமாக வளர்தல்.
கைசலித்தல் = கொடை ஓய்தல், மேவாண்மை (உபசாரம்) ஒழிதல்.
கைசோர்தல் = கைவிட்டுப்போதல், வறுமையடைதல்.
கை தலை வைத்தல் = பெருந்துயரடைதல்.
கைதளாதல் = வறுமையடைதல்.
கைதருதல் = துன்பத்தில் உதவுதல்.
கைதாங்குதல் = கையால் தாங்குதல், கேடடையாமல் காத்தல்.
கைதாழ்தல் = செல்வநிலை தளாதல்.
கைதிருந்துதல் = கையெழுத்து வினைத்திறமை முதலியன திருந்துதல்.
கைதீண்டுதல் = அடித்தல், தீயநோக்கொடு தொடுதல்.
கைதுடைத்தல் = விட்டு நீங்குதல்.
கைதூக்கிவிடுதல் = நீரில் அழுந்துவோரை எடுத்துக் காத்தல், வறுமையில் அல்லது துன்பத்திற் காத்தல்.
கைந்நிறுத்துதல் = நிலைநிறுத்துதல், அடக்குதல்.
கைநிமிர்தல் = வளர்ந்து பருவமடைதல்.
கைநீட்டுதல் = அடித்தல், கொடுத்தல், இரத்தல், திருடுதல்.
கைநீளுதல் = அடிக்கவோ கொடுக்கவோ, திருடவோ கை நீளுதல்.
கைநனைத்தல் = பிறர் வீட்டில் பசியாற்றிக்கொள்ளுதல்.
கைநாட்டுதல் = கையெழுத்திடுதல்.
கைநெகிழ்தல் = கைதவறவிடுதல்.
கைநொடித்தல் = செல்வநிலை கெடுதல்.
கைநொடு நொடுத்தல் = கண்டதெல்லாவற்றையும் தொடுதல்.
கைப்பாடுபடுதல் = கையால் உழைத்தல்.
கைப்பிடித்தல் = மணஞ்செய்தல்.

கைப்பிடியாய்ப் பிடித்தல்=நேரிற் கையாற் பிடித்தல், கையுங் களவுமாய்ப் பிடித்தல்.
கைபார்த்தல்=உதவி நாடுதல்.
கைபூசுதல்=உண்ட கையைக் கழுவுதல்.
கைபோட்டுக் கொடுத்தல்=கைபோட்டு ஒப்பந்தத்தை உறுதிப் படுத்தல்.
கைம்மறித்தல்=கையால் தடுத்தல், கைகவித்து விலக்குதல்.
கைம்மிகுதல்=அளவுகடத்தல்.
கைமுகிழ்த்தல்=கைகூப்புதல்.
கைமாறுதல்=ஒருவர் கையினின்று மற்றொருவர் கைக்குச் செல்லுதல், வேலையாள் மாறுதல், கட்சி மாறுதல், ஒழுக்கம் மாறுதல்.
கையடித்தல்=கையடித்து உறுதி தருதல்.
கையடிப்படுதல்=ஒருபொருள் பலகை கடந்து செல்லுதல்.
கையடைத்தல்=பிறர்கையில் ஒப்புவித்தல்.
கையமர்த்துதல்=கையிற் சைகை காட்டி அமைதியாயிருக்கச் செய்தல், கையாற் சைகைகாட்டி ஆட்களை அமர்த்துதல்.
கையயர்தல்=கைசோர்தல், நிலைமை தாழ்தல்.
கையரிக் கொள்ளுதல்=வாரி அரித்துக்கொள்ளுதல்.
கையழிதல் } =செயலற்று வருந்துதல்.
கையறுதல் } =ஒன்றுஞ் செய்யாமல் வருந்துதல்.
கையளித்தல்=ஒப்படைத்தல்.
கையிளைத்தல்=செல்வநிலை தளர்தல்.
கையுண்ணுதல்=பிறர் கையில் உண்டு வாழ்தல்.
கையைக் கட்டுதல்=ஒன்றும் செய்யாதபடி தடுத்தல்.
கையைக் கடித்தல்=நட்டமாதல்.
கையைக் குறுக்குதல்=செலவைக் குறைத்தல், கஞ்சனாதல்.
கையோடுதல்=வேகமாக எழுதுதல்.
கையுதிர்க்கொள்ளுதல்=விட்டு விலகும்படி கையசைத்துக் குறிப்பிடுதல்.
கைவற்றுதல், கைவறளுதல் } =பொருளறுதல், கொடை ஓய்தல்.
கைவருதல்=ஒன்றைச் செய்யக் கைபழகுகை, தேர்ச்சி பெறுதல்.
கைவாரங் கொள்ளுதல்=அதிகாரத்தை மேற்கொள்ளுதல், கூத்தை நிறுத்தும்பொருட்டுக் கையை உயரவெடுத்து வீசுதல்.
கைவிதிர்த்தல்=மறுப்பு, அச்சம் முதலியவற்றைக் குறித்துக் கையசைத்தல்.
கைவிரித்தல்=இன்மை குறித்தல், கொடை மறுத்தல்.

### vii. செவி வினைகள் :

செவிக்கேறுதல்=கேட்டற்கினியதா யிருத்தல்.
செவிக்கொள்ளுதல்=கேட்டல்.
செவிசாய்த்தல்=இணங்கிக்கேட்டல்.
செவி தின்னுதல்=மறைபொருளாக ஓதுதல்.
செவிப்படுதல்=கேட்கப்படுதல்.
செவிமடுத்தல்=கேட்டல்.
செவியடித்தல்=யானைபோலக் காதாட்டுதல்.
செவியறிவுறுத்துதல்=நல்லறிவு புகட்டுதல்.

### viii. தலை வினைகள் :

தலைக்கட்டுதல்=அன்பாய் நடத்துதல், பாதுகாத்தல், ஒப்புவித்தல்.
தலைக்கூடுதல்=ஒன்றுசேர்தல், நிறைவேறுதல்.
தலைக்கேறுதல்=பித்தவேகம் தலைக்கேறுதல், செருக்கு முதிர்தல்.
தலைக்கை தருதல்=கையால் தழுவி அன்பு காட்டுதல்.
தலைச்செல்லுதல்=சென்று கூடுதல்.
தலைசிறத்தல=மிகத் தலைமையாதல்.
தலைசுற்றியாடுதல், தலைசுற்றுதல் = இறுமாப்புக் கொள்ளுதல், செருக்குண்டாதல்.
தலைதடுமாறுதல்=கலக்கமடைதல், சீர்குலைதல்.
தலைதுலுக்குதல்=உடன்பாடு இகழ்ச்சி முதலியவற்றைக் குறிக்கத் தலையசைத்தல்.
தலைதொடுதல்=தலையைத்தொட்டு ஆணையிடுதல்.
தலைநின்றொழுகுதல்=தலைமையாக நின்று அல்லது அணுகி நின்று பணிசெய்தல்.
தலைப்படுதல்=கூடுதல், எதிர்ப்படுதல், மேற்கொள்ளுதல், தலைமையாதல், தொடங்குதல்.
தலைப்போகுதல்=முடிவுவரை செல்லுதல்.
தலைமயங்குதல்=ஆள்நெருங்குதல், கலந்திருத்தல்.
தலைமேற்கொள்ளுதல=மிகச் சிறப்பாயேற்றல், பொறுப்பேற்றல்.
தலையரங்கேறுதல்=தன் கல்வித்திறமையை முதன் முதல் அவையோர்க்குக் காட்டுதல்.
தலையளி செய்தல்=முகமலர்ந்து இன்சொற் சொல்லுதல், சிறந்த அன்பு செய்தல்.
தலையைத் தடவுதல்=வஞ்சித்தல், ஏமாற்றிப் பொருள்பெறல்.
தலைவழித்தல்=தலைச்சவரம் பண்ணுதல், அளக்கும்படியின் தலையைத் தட்டுதல்.

### ix. நாக்கு (நா) வினைகள் :

நாக்குச்சாதல் = நாக்குச் சுவையுணர்ச்சியை இழத்தல்.
நாக்குத் தட்டுதல் = திக்கிப்பேசுதல், பூட்டின் நாக்குக் கெடுதல்.
நாக்குத் தடித்தல் = நாமரத்துப்போதல்.
நாக்குத் தாளம்போடுதல் = உணவுகொள்ள ஆவலாயிருத்தல், அளவுகடந்து நகையாடுதல் (பரிகசித்தல்).
நாக்குத் திருந்துதல் = உச்சரிப்பு திருத்தமாயிருத்தல்.
நாக்குத்தெறிக்கப் பேசுதல் = பெரியோரைப் பழித்தல்.
நாக்கு நீட்டுதல் = அளவுகடந்து பேசுதல்.
நாக்கு நீளுதல் = அடக்கமின்றிப் பேசுதல்.

(எ - டு) அவனுக்கு நாக்கு நீள்கின்றது.)
நாக்குப் புரளுதல் = சொல் தவறுதல்.
நாக்கு வளைத்தல் = பழித்தல்.
நாக்கு வாங்கிப் போதல் = இறும்பூதினால் (அதிசயத்தினால்) பேசமுடியாதபடி நா உள்ளிழுக்கப்படுதல், தாகத்தால் நா வறளுதல்.
நாக்கு வாங்குதல் = நாவை உள்ளிழுத்தல், களைத்துப்போதல். களைக்கப் பண்ணுதல்.
நாக்கு விழுதல் = நாக்கு திமிர்வாதப்படுதல்.
நாக்கொட்டுதல் = நா வறளுதல்.
நாவசைத்தல் = பேசுதல்.
நாவடைத்துப்போதல் = பேசமுடியாமற் போதல்.
நாவுழற்றுதல் = பொறாமைப்பட்டுப் பேசுதல்.

### x. பல் வினைகள் :

பல்லுப்படுதல் = வசைமொழி அல்லது சாபம் பலித்தல்.
பல்லைக் கடித்துக்கொண்டு செய்தல் = கட்டாயத்திற்காக ஒன்றை வெறுப்புடன் செய்தல்.

### xi. மண்டை வினைகள் :

மண்டை துள்ளுதல் = செருக்கு மிகுதல்.
மண்டை வறளுதல் = எண்ணெய் முழுக்கில்லாமல் தலையெரிதல், மதிகெடுதல்.

### xii. முக வினைகள் :

முகங்காட்டுதல் = காட்சி கொடுத்தல்.
முகங் காணுதல் } = கட்டி உடைவதற்குமுன் முனை வைத்தல்.
முகங் கொள்ளுதல் }
முகம் குறுவுதல் = துன்பத்தால் முகம் பொலிவிழத்தல்.

முகஞ்சின்னம் போதல்=வெட்கத்தால் முகங் கருகுதல்.
முகஞ்செய்தல்=நோக்குதல், தோன்றுதல், முன்னுதல்.
முகத்திலருப்ப மிறங்குதல்
முகத்திலரும்புதல்
முகத்திற் கரிக்கோடிடுதல் } =மீசை முளைத்தல்.
முகந்தருதல்=பட்சங் காட்டுதல்.
முகந்திருத்துதல்=வாட்டந் தவிர்த்தல்.
முகம்புகுதல்=அருமைக்காக எதிரசென்று நிற்றல்.
முகம் வழித்தல்=முகச்சவரம் செய்தல்.
முகமறுத்தல்=கண்ணோட்டமின்றிப் பேசுதல்.
முகமாதல்=உடன்படுதல்
முகமுகம் பார்த்தல்=முகத்தை முகம் பார்த்தல்.
முகமுறிதல்=கண்ணோட்டங் கெடுதல், வெறுப்படைதல்.
முகமோட்டுதல்=சேவல்களைச் சண்டைக்கு எதிர்முகமாக்குதல்.

xiii. வயிற்று வினைகள் :

வயிற்றிலிட்டுக்கொள்ளுதல்=பெருந்துயரால் உடம்பு நலியச் செய்தல்.
வயிற்றைத் திறத்தல்=கருக்கொள்ளுமாறு கடவுள் அருளுதல்.
வயிற்றைப் பெருக்குதல்=உண்ணும் அளவை அதிகப்படுத்துதல், நிரம்ப வுண்ணுதல்.
வயிறடைத்தல்=உண்ணும் விருப்பம் இல்லாதிருத்தல், மலடாயிருத்தல், கருத்தரிக்கும் தன்மையற்றுப்போதல்.
வயிறு கடித்தல்,
வயிறு கிண்டுதல்,
வயிறு கிள்ளுதல் } =பசிநோவு மிகுதல்.
வயிறு கழுவுதல்=அரும்பாடுபட்டு உணவுதேடிப் பிழைத்தல்.
வயிறு வாய்த்தல்=மகப்பெறுதல்.
வயிறு வாழ்தல்=வேண்டிய உணவு உடையவனாதல், உயிர் வாழ்தல்.

xiv. வாய் வினைகள் :

வாய் திறத்தல்=புண்கட்டி உடைதல், பேசத்தொடங்குதல்.
வாய்போக்குதல்=எளிதில் வாக்குக் கொடுத்தல்.
வாய்மடுத்தல்=உட்கொள்ளுதல்.
வாய் மலர்தல்=பேசுதல்.
வாய்முட்டுப் போடுதல்=மறைபொருளை வெளியிடாதிருக்குமாறு கையூட்டுக் கொடுத்தல்.
வாய்மூத்தல்=பேச்சிற் சிறத்தல், பேசமுந்துதல்.
வாய்மூழ்த்தல்=வாய்மூடுதல், பேசாதிருத்தல்.

வாய்மொழிதல்=அபிமந்திரித்தல்.
வாய்வழங்குதல்=உண்ணுதல்.
வாய்விடுதல்=ஒலித்தல்.
வாயாலி போக்குதல்=கொட்டாவி விடுதல், வீண்பேச்சுப் பேசுதல்.
வாயிலே போடுதல்=பேசவொட்டாது குறுக்கிட்டுப் பேசித் தடைசெய்தல்.

## 4. ஒருபொருட் பல சொற்கள்

ஒரே பொருள்பற்றிப் பல சொற்கள் வழங்கலாம்; அல்லது வழங்குவதாகத் தோன்றலாம். அவையெல்லாம் பருப்பொருளில் ஒத்தனவேயன்றி, நுண்பொருளில் ஒத்தனவல்ல. அவற்றின் நுண்பொருளறிந்து அவ்வப் பொருளில் வழங்குதல் வேண்டும்.

எ - டு. கொசு என்பது, கட்டுக்கடை நீரிலும், இனிப்புப் பொருள்களிலும் மொய்த்துக்கொண்டிருந்து, மக்களைக் கடிக்காத ஒரு சிற்றீ வகை. ஓலுங்கு என்பது, சாக்கடையிலும் சதுப்பு நிலங்களிலுமிருப்பதாய், கொசுவினும் நீண்டு பருத்ததாய், மக்களின் குருதியை உறிஞ்சிக் குடிக்கும் ஒரு சிற்றீ வகை.

வாவல் (வௌவால்) என்பது, மரங்களில் தொங்கிக் கொண்டிருந்து கனிகளையுண்டு வாழும் பெரு வௌவால். துரிஞ்சில் என்பது, சந்துபொந்துகளிற் புகுந்திருந்து, இரவில் ஊருக்குள் பறந்து திரிந்து, சிறு பூச்சிகளைப் பிடித்துத் தின்னும் சிறு வௌவால்.

சொல்லுதலைக் குறிக்கப் பல சொற்கள் உள. அவற்றின் நுண்பொருள் வருமாறு:—

**சொல்லுதல்** ஒருவனிடம் பொதுவாகவொன்றைத் தெரிவித்தல்.

**பேசுதல்** ஒரு மொழியைக் கையாளுதல்.

**கூறுதல்** ஒன்றைக் கூறுபடுத்தி அல்லது வகைப்படுத்திச் சொல்லுதல்.

**சாற்றுதல்** முக்கியமான செய்தியைப் பொதுமக்கட்கறிவித்தல்.

**மொழிதல்** ஒவ்வொரு சொல்லையும் தெளிவாய்ச் சொல்லுதல்.

**என்னுதல்** ஒருவன் கூற்றைத் தெரிவித்தல்.

**கிளத்தல்** ஒரு பொருளைக் குறிப்பிட்டுச் சொல்லுதல்.

**பன்னுதல்** பல பொருள்களுள் ஒவ்வொன்றையும் தனித்தனி குறித்துச் சொல்லுதல்.

**நுவலுதல்** நூற்பொருளை நுணுக்கமாகச் சொல்லுதல்.

**உரைத்தல்** நூலுக்கு உரை கூறுதல் அல்லது ஒன்றை விளக்கிச் சொல்லுதல்.

**நவிலுதல்** ஒரு சொல்லை அல்லது சொற்றொடரைப் பலகாலும் ஓதிப் பயிலுதல்

**பகர்தல்** ஒரு பொருளின் விலையைச் சொல்லுதல்.

**நொடித்தல்** கதை அல்லது வரலாறு சொல்லுதல்.

**செப்புதல்** ஒரு வினவிற்கு விடை சொல்லுதல்.

**அறைதல்** ஒன்றை உரக்க அல்லது வலியுறச் சொல்லுதல்.

**மாறுதல்** உரையாட்டில் மாறி மாறிச் சொல்லுதல்.

**விள்ளுதல்** ஒன்றை வெளிவிட்டுச் சொல்லுதல்.

**விளம்புதல்** ஒன்றைப் பலர்க்கு அறிவித்தல்.

**புகலுதல்** ஒன்றை விரும்பிச் சொல்லுதல்.

**இசைத்தல்** ஒன்றைக் கோவைபட அல்லது ஒழுங்குபடச் சொல்லுதல்.

**கழறுதல்** கடிந்து சொல்லுதல்.

**இயம்புதல்** இன்னிசையுடன் சொல்லுதல்.

**கரைதல்** அழுதுகொண்டு அல்லது இரங்கிச் சொல்லுதல்.

இங்ஙனமே ஏனைச் சொற்களின் நுண்பொருளையும் அறிந்து கடைப்பிடிக்க.

## 5. இணைமொழிகள் (Words in Pairs)

அக்கம் பக்கம் பார்த்துப் பேசு: அக்குத் தொக்கு இல்லாதவன் (அகதி): அகடவிகடமாய்ப் பேசுகிறான்; அஞ்சிலே பிஞ்சிலே அறியவேண்டும்: அடக்கவொடுக்கமா யிருக்கிறான்; அடங்கியொடுங்கி யிரு: அடாடி படாடியாய் (கடும்போராய், பெருங் குழப்பமாய்)க் கிடக்கிறது; அவன் இவனுக்கு அடிதண்டம் பிடிதண்டம் (முற்றிலும் அடிமைப பட்டவன); அடுகிடை படுகிடையாய்க் கிடத்தல்; (நினைத்த தைப் பெறுமளவும் ஒருவனது வீட்டின்முன் படுத்துக் கிடத்தல், பாயும் படுக்கையுமாய்க் கிடத்தல்.) அடிப்பும் அணைப்புமா யிருக்கவேண்டும்; அடுப்பும் துடுப்புமாய் (சமைத்துக்கொண்டு) இருக்கிற நேரம்; அடையலும் விடிய லும் குருடருக்கில்லை: அண்ட பிண்டம் ஒத்த இயல்புடை யன; அண்டை வீடு அடுத்த வீடு பகையாயிருக்கக்கூடாது: அண்டை யயலெல்லாம தேடிப் பார்த்தேன்; அந்தியுஞ் சந்தியும் பூசை நடக்கிறது: அயர்த்தது மறந்ததை எடுத்துக் கொண்டுபோ; அரதேசி (அகதேசி) பரதேசிகட்கு உணவளிக்க வேண்டும்; அரிசி தவசி விலையேறிவிட்டது; அருவுருவாகிய இறைவன்; அவனுடைய அருமை பெருமை தெரியவில்லை; வேலையை அரைகுறையாய் நிறுத்திவிட்டான்; அல்லுஞ் சில்லுமாய் (சிறு சிறு தொகையாய்)ப் பணம் செலவாகி விட்டது: அல்லும் பகலும் பாடுபடுகிறான்; அல்லல் தொல்லை யெல்லாம் தீரவேண்டும்: அலுங்கிக் குலுங்கிப்போயிற்று; அலுங்கிக் குலுக்கிக் கொண்டுவந்தான்: அலுத்துப் புளித்து வந்திருக்கிறான்; அலைந்துக் குலைந்துக் கெடுத்துவிட்டான்; அழிந்தொழிந்து போயிற்று; அழுகையுங் கண்ணீருமாய் வந்து சேர்ந்தான்; அழுங்கிப் புழுங்கி (பொறாமைமிக்கு)ச் சாகிறான்; அழுத்தந் திருத்தமாய்ப் படித்திருக்கின்றான்; அள்ளாடித் தள்ளாடி நடக்கின்றான்; அழுது தொழுது வாங்கி விட்டான்; அற்ற குற்றம் (கேடு பாழது) பார்க்க ஆளில்லை; அறமறம் அறிந்து ஒழுகவேண்டும்: அறுகப் பொறுக்கப் பாடுபட்டும் குடிக்கக் கஞ்சியில்லை; அடுந்து மடுந்துக் கேட்கவேண்டும்.

ஆக்கமுங்கேடும் அனைவர்க்கும் உண்டு; ஆக்கியளித்துப் போடுகிறவள் மனைவி; ஆட்டும்பாட்டுமாயிருக்கிறது அவன் வீடு; ஆடல்பாடல் கண்டுங் கேட்டுங் களித்தான்; காதை ஆட்டி அலைந்து வருகிறாள்; தூணை ஆட்டியசைத்துப் பார்த்தேன்; ஆடிப்பாடிச் சென்றால் அவன் பரிசளிப்பான்; ஆடியசைந்து நடக்கின்றான்; ஆடையணியலங்காரமும் வேண்டும்; ஆடைக்கும் கோடைக்கும் வற்றாத கிணறு; ஆண்டான் அடிமை என்ற வேறுபாடில்லை; ஆதாளிபாதாளியாய் (ஆரவாரமாய்) இருக்கிறது; ஆதியந்தம் இல்லாதவர் கடவுள். ஆய்ந்தோய்ந்து பார்த்து நட்புச்செய்யவேண்டும்; நேற்றிரவு கவுண்டருக்கு ஆயிற்றுப் போயிற்று என்று கிடந்தது; அவன் ஆயிற்று போயிற்று என்று அரட்டினான்; ஆலேபூலே என்று அலப்பிக்கொண்டிருக்கின்றான்; ஊர்முழுதும ஆழும்பாழுமாய் (அழிந்து)க் கிடக்கின்றது; ஆளும் தேளும் அற்ற இடம்; அவனை ஆற்றித்தேற்றி வை; ஆறஅமர (பொறுமையாய்)க் காரியஞ் செய்யவேண்டும; ஆனைக்கும் பூனைக்கும் உள்ள தூரம்.

இசகு பிசகாய் நடக்கின்றான், அகப்பட்டுக் கொண்டான்; இண்டும் இடுக்கும் கைவிட்டுப் பார்த்தான்; இயங்குதிணை நிலைத்திணை (தாவர சங்கமம்) ஆகிய இருவகைச் சொத்தும் உண்டு; இயலும் செயலும் ஒத்திருக்கும்; இழுப்பும் பறிப்புமாயக் கிடக்கின்றது; இளைத்துக் களைத்துப் போனான்; இன்னார் இனியார் என்று அவனுக்கில்லை.

ஈகை யிரக்கம் (ஈவிரக்கம்) இருக்கவேண்டும்; ஈடும் எடுப்பும (ஒப்பும உயர்வும்) அற்றவன்; ஈடுசோடு இல்லாதவன்; ஈயெறும்பு மொய்க்கும்.

உடைநடையால் உயர்வு தாழ்வு அறியப்படும்; உண்டியுறையுள் வசதி இங்குண்டு; உண்டுடுத்து வாழவேண்டும்; உருட்டும் புரட்டும் என்னிடம் பலிக்காது; உருண்டு திரண்டிருக்கும் உருளைக்கிழங்கு, உருவும் திருவும் ஒத்த காதலர்; உள்ளது உரியதெல்லாம் விற்றுவிட்டான்; உற்றார் உறவினர் உதவுவர்.

ஊண் உடை சிறக்கவேண்டும்; ஊண் உறக்கம் ஒழிந்து வேலைசெய்தான்; ஊதியமும் இழப்பும் வணிகத்திற்கியல்பு.

எக்கச்சக்கமாய் (ஏறமுடியாமல்) இருக்கிறது மரம்; எக்கச்சக்கமாய் (தப்பமுடியாதபடி) மாட்டிக்கொண்டான்; எக்காளமும் ஏடாசியுமாய் (பரிகாசமாய்)ப் பேசுகிறான்: எய்படை எறிபடை (அஸ்திர சஸ்திரம்) கொண்டு பொருதார்கள்.

ஏங்கித் தேங்கித் தவிக்கிறான்; ஏட்டிக்குப் போட்டியாய்ச் செய்கிறான்; ஏடாகோடம் (ஏறுமாறு) பண்ணுகிறான்: ஏமமும் சாமமும் கூத்தாடுகின்றனர்; ஏழை பாழை பிழைக்க வேண்டும்; ஏற்றத்தாழ்வு சமுதாயத்தில் இருக்கக்கூடாது; ஏற்றந் தாழ்ச்சியாயிருக்கிறது விட்டம்; ஏறஇறங்கப் பார்க்கின்றான்.

ஒட்டி யுலர்ந்து போயிற்று வயிறு; ஒட்டு உறவு அற்றுப்போய்விட்டது; ஒண்டிசண்டியாய்க் காட்டுவழி போகக் கூடாது; ஒன்றாய் மன்றாய் (வேறுபாடின்றிக் கலந்து)க் குடியிருக்கிறார்கள்.

ஓட்டமும் நடையுமாய்ப் போய்ச் சேர்ந்தோம்; ஓட்டை உடைசல் போட்டுவைக்கும் அறை; ஓட்டை சாட்டை யிருந்தால் கொடு; ஓடியாடித் திரிகிறான்; ஓய்வு சாய்வு ஒருநாளும் எனக்கில்லை.

சரக்கு கங்குகரையற்றுக் கிடக்கின்றது; கஞ்சிதண்ணீர் அவனுக்குச் செல்லவில்லை; கட்டியு முட்டியுமாய் உழைத்து போட்டிருக்கின்றான்; மாதற்கும ஒரு கட்டுமட்டு (அளவு) வேண்டும்: கடாவிடைகளால் பொருளை விளக்கினார்: கண்டது கடியதெல்லாம் சொல்லக்கூடாது; கண்டவன் கடியவனெல்லாம் வந்து சாப்பிட்டான்; கணக்குவழக்கில்லாமல் கொண்டுபோனான்: கண்டதுண்டமாய் நறுக்கிவிடுவேன்; கண்ணீருங் கம்பலையுமாய்க் காலங்கழிக்கிறோம்; கண்ணுங் கருத்துமாய்ப் பேணவேண்டும்; கத்திக்கதறிச் சொன்னேன்; கந்தல் கூளமாய் (கந்தரகோலமாய்)க் கிடக்கின்றது; கப்புங்கவருமாய்க் கிளைத்திருக்கின்றது; கந்தலும்

பொந்தலும் உடுத்திக்கொண்டு திரிகின்றான்; கரடு முரடான துணி; கரை துறை தெரியவில்லை; கல்லுங் கரடுமான வழி; கல்லுங் கரம்புமாய்க் கிடக்கின்ற நிலம்; கல்வி கேள்விகளிற் சிறந்தவன்; கலியாணங் காட்சிக்குப் போகமாட்டான்; கைகால்கள் கழுக்கு மொழுக்கென்று (பருத்துக் கொழு கொழுத்து) இருக்கின்றன; களங்கமளங்கமற்றுப் பேச வேண்டும்; கள்ளங்கவடில்லாதவன்; கறபும் பொற்பும் உடையவள்; கற்றோர்க்கும் மற்றோர்க்கும் விளங்கும் நடை; கன்று கயந்தலை (பிள்ளைகுட்டி); கன்றுகாலி வரும் நேரம்; கனவோ, நனவோ?

காக்கனும் போக்கனும் (அயலானும் வழிப்போக்கனும்) கொள்ளைகொண்டு போனார்கள்; பிள்ளைகள் காச்சுப்பூச் சென்று (காச்சுமூச்சென்று) கத்திக்கொண்டிருக்கிறார்கள்; எங்கு பார்த்தாலும் காடுஞ் செடியுமாய் இருக்கின்றது காடுமேடாய் அலைந்து திரிகின்றான்; காதிலே கழுத்திலே ஒன்றுமில்லை; காமா சோமா (கன்னாபின்னா) என்று கத்திக் கொண்டிருக்கின்றான்; பயிர்கள் காய்ந்து கருகிவிட்டன; காரசாரமற்ற (மதிகேடான) பிள்ளைகள்; கானுன் கோனுன் என்று நாதாங்கிக் கடுக்கன் தொங்குகின்றது.

கிட்டத்தட்ட (ஏறக்குறைய); கிட்டமுட்ட அவனை வர விடாதே; கிண்டிக் கிளறி (கிண்டிக் கிளைத்து) வைத்துவிட்டது; கிணறு கெட்டையிருந்தால் குளிக்கலாம்; கிழங் கெட்டை (கிழடுகெட்டை) விட்டிலிருப்பது நல்லது;

ஆடு கீரைகுழை தின்னும்; கீரியும் பாம்பும் போலப் பகை.

குஞ்சுங் குழுவானுமாய் இருக்கிறது அவன் குடும்பம்; குட்டி குறுமான் எல்லாம் வந்துவிட்டன; குண்டக்கமண்டக்கமாய அவனைக் கட்டித் தூக்கிக்கொண்டு போனார்கள்; தரை குண்டுங் குழியுமாய் இருக்கின்றது; குணங்குற்றம் யாருக்குமுண்டு; குணங் குறிகளைக் கண்டுபிடிக்க வேண்டும்; காதில குத்தலுங் குடைச்சலுமாய் இருக்கின்றது; அரிசியைக் குத்திக்கொழித்து ஆக்கவேண்டும்; வீடுவாசல் குப்பை

கூளமாய்க் கிடக்கிறது; கும்பக்குழியா அளந்தான்; கும்பிக் கொதித்து நிற்கிறாள் மனைவி; குமபிட்டுக் கூத்தாடி வாங்கினான்; குலங்கோத்திரம் பார்த்துப பெண்கொளவர்; குலமுங் குணமும் ஒத்த காதலர்: குழந்தை குட்டி பெருத்தவன; குளங் குட்டையில் தண்ணீரில்லை; குற்றங் குறைகள் இருந்தால் பொறுத்துக்கொள்ள வேண்டும; குற்றநற்றம் பார்க்கக்கூடாது; குறுக்கும் நெடுக்கும் சரிகைத்தரை யிருக்கின்றது; குறுக்கும் மறுக்கும் திரிகிறான்.

கூட்டநாட்டம் இப்போது நடக்கிறதில்லை: கூட்டிக் குமித்து வைததான்: கூட்டிக் குறைத்துப் பேசுவான்; கூடக் குறைய இருந்தால் சொல்: கூடமாட வேலைசெய்; கூடிக் குலாவித் திரிகின்றனர்.

கெஞ்சிக் கெதறிக் கேட்டான்.

கேட்பார் கேள்வியில்லை; கேட்பாரும் மேய்ப்பாருமற்றுத் திரிகின்றான்; கேள்விமுறை யில்லை; "கேளுங் கிளையும் கெட்டார்க்கில்லை."

கையுங்களவுமாய்ப் பிடிக்கப்பட்டான்; கையுங்காலும் வைத்துக்கொண்டு சும்மாயிருக்கமாட்டேன் என்கிறான்; கையுங் காலுமாய் (ஒன்றுமில்லாத வறியவனாய்) வந்து சேர்ந்தான்; கையுமெய்யுமாய்க் கண்டுபிடிக்கப்பட்டான்.

கொக்கு குருவி யெல்லாம் போய்விட்டன; கொஞ்சிக் குலாவிப் பேசுகின்றனர்; கொஞ்சநஞ்சமாவது மீத்துவைக்க வேண்டும்; கொட்டுகுழல் இல்லாமல் சடங்கு நடந்தது; கொடிவழியில் கலியாணஞ் செய்வர்; கொடுக்கல் வாங்கல் (கொடை வாங்கல்) நிரம்ப இருக்கின்றது; கொண்டான் கொடுத்தான் இடத்திலே நெடுநாள் தங்ககூடாது; கொண்டு கொடுத்து வாழவேண்டும்; வறியவர் கொத்தடிமை குலவடிமையாய் வாழநேர்ந்தது; காயைக் கொத்திக் குதறி வைத்திருக்கின்றான்; கொத்தோடே குலையோடே கொண்டு போனான்; மரம் கொப்புங் குழையுமாய்த் தழைத்திருக்கின்றது; கொள்வனை கொடுப்பனை அவர்களிடையில்லை.

கோட்டைகொத்தளமெல்லாம் காவல் செய்யப்பட்டன; தெருக்கள் கோணல்மாணலாயிருக்கின்றன; கோயில் குளம் கடவுளை நம்பாதவனுக்கில்லை; கோலுங் கொடுக்குமாய்க் கட்டிக்கொண்டு திரிகின்றான்; கோள்குண்டுணி சொல்கிறவனை நம்பக்கூடாது.

சட்டதிட்டங்கட்கு உட்பட்டு நடக்கவேண்டும்; சண்டு சருகு அரிக்கின்றனர்; சண்டை சச்சரவு இருக்கக்கூடாது; சண்டை சல்லியத்திற்கு (சண்டைசாடிக்கு)ப் போகமாட்டான்; சந்தி சதுக்கங்களிற் சிலை நிறுத்தப்பெறும்; சந்துபொந்தெல்லாம் தேடிப் பார்த்தான்; சப்புஞ்சவறும் வாங்கிக்கொண்டு வந்திருக்கின்றான்; தோல் சவண்டு துவண்டு கிடக்கின்றது; மா(மாவு) சளித்துப் புளித்துப் போயிற்று; சழிவு நெளிவு இல்லாத பெட்டியாய் வாங்கு.

சாக்குப்போக்குச் சொல்லக்கூடாது; அவன் சாகப் பிழைக்கக் கிடந்தான்; அவன் குற்றஞ் செய்தாலும் சாடைமாடையாய் விட்டுவிடு; சுவர் சாய்ந்து சரிந்து கிடக்கின்றது; வேலையைச் சாயலாய் மாயலாய் (சாலாமாலா)ச் செய்து வைத்திருக்கின்றான்; அவனைச் சாவிழவு தள்ளிவைத்திருக்கின்றது.

சிக்கடிமுக்கடியாய்க் கிடக்கிறது நூல்; உடம்பெல்லாம் சிக்குஞ் சிரங்குமாய் இருக்கின்றது; சிட்டி சிரட்டையெல்லாம் தண்ணீர் ஊற்றிவைத்திருக்கின்றது; சோற்றைச் சிந்திச்சிதறிச் சீரழிக்கின்றான்; சிந்துமணி சிதறுமணியெல்லாம் பொறுக்கிக்கொண்டாள்; சிறுதனம் சீராட்டு (சீதனம் சீராட்டு) அவளுக்கு நிரம்பக் கிடைத்தது; சின்னது சிறியதிற்கு ஒன்றுங் காட்டக்கூடாது; வண்டி சின்னபின்னமாய்ச் சிதைந்து கிடக்கின்றது.

சீட்டுநாட்டுப் போட்டு வைத்திருக்க வேண்டும்; சீத்துப் பூத்தென்று சீறினது பாம்பு; அவனைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தார்கள்; சீரியர் பூரியர் (மேலோர் கீழோர்); சீருஞ் சிறப்புமாய் வாழ்ந்திருந்தான்; சீருஞ்செட்டுமாய்ப் பிழைக்கவேண்டும்; சீவிச்சிக்கெடுத்துச் சடைபின்னினாள்; சீவிச் சிங்காரித்து வருகின்றாள்; சீறிச் சினந்து விழுந்தான்.

சுள்ளி சுப்பல் பொறுக்கி எரிக்கின்றாள்; படுக்கையைச் சுற்றிச் சுருட்டிக் கொண்டுபோய்விட்டான்; சுற்றுமுற்றும் பார்த்தான்.

செடிகொடி போட்டால் காய் காய்க்கும்; செடிசெத்தையெல்லாம் அகற்றவேண்டும்.

சொத்து சுகம் அவனுக்கு ஒன்றுமில்லை; சொள்ளை சொட்டை ஏதாவது சொல்லுவான்.

தட்டாமல் தடுக்காமல் (நட்டாமல் முட்டாமல்) தாராளமாய் வாசல்வழி கொண்டுபோக முடியுமா? மட்கலங்களைத் தட்டிக்கொட்டி வாங்கவேண்டும்: தட்டுந்தடங்கலின்றிப் பேசினான்; தட்டுத்தடுமாறி விழுந்தான்: தட்டுத்தடையின்றிப் பேசுகிறான்; தட்டுமுட்டு வாங்கவேண்டும்: தடுத்து மடுத்துச்சொல்ல ஆளில்லை: தடை விடை (ஆட்சேப சமாதானம்) நிகழ்ந்தன: தண்ணீர் வெந்நீர் கொடுக்க ஆள் வேண்டும்; தத்தித் தொத்திச் சுவரில் ஏறினான்: தப்பித்தவறி இந்தப் பக்கம் வாராதே: தப்புந் தவறுமாய்ப் பேசுகிறான்: தடங்கல் மடங்கலின்றிச் செல்லலாம்.

தாங்கித் தடுக்கி அவளைக் கூட்டிக்கொண்டு வந்தான்: தாய் பிள்ளை (உறவினர்) ஒருவரும் வரவில்லை: தாயும் சேயும் நலம்.

திண்டு தலையணை போட்டுப் படுத்துக்கொண்டான்: திண்டு முண்டு (தில்லுமுல்லு) பண்ணுகின்றான்; கொம்பு திருகல்முறுகலாய் இருக்கின்றது.

துட்டுத்துக்காணி கையிலிருக்க வேண்டும்; மரம் துண்டு துணுக்காக இருக்கின்றது; மேசையினின்று விழுந்த துண்டு துணிக்கைகளை நாய் தின்றது: போர்க்களத்தில் துண்டுந் துணியுமாக உடல்கள் கிடந்தன: துணிமணிகளைப் போற்றி வைக்கவேண்டும்; பையன் சுடுமணலில் துள்ளித் துடித்துவிட்டான்.

தூசிதுப்பட்டை (தூசி துரும்பு); நெற்களத்தைத் தூர்த்துத் துடைத்துவிட்டார்கள்.

நேக்கித்தெவிட்டிப் போனார்கள் விருந்ினரெல்லாம்; ஆட்டைத் தேடியோடிப் பிடிக்கவேண்டும்; தேர் திருவிழாவிற்கு ஏராளமானபேர் வருவார்கள்; சந்தனக்கட்டை தேய்ந்து மாய்ந்து போய்விட்டது.

நொசுத்தும் வருத்தும் சொல்லவேண்டும்; நொடுத்து மடுத்துச் செய்துமுடிக்க வேண்டும்.

தோட்டந்துரவு ஏராளமாக அவனுக்குண்டு; தோலும் எலும்புமாய்ப் போனான்

நகைநட்டு அணிந்திருந்தால் மதிப்பார்கள்; நங்கை நாத்தூனாள் குறைசொல்லாதபடி நடந்துகொள்ள வேண்டும்; நச்சும் பிச்சும் எனக்கு வேண்டாம்; நயபயந்தால் ஆளவேண்டும்; நரைதிரை வருமுன்னமே நல்வினை செய்ய வேண்டும்; நல்லது பொல்லது நடந்தால் நாலுபேர்க்குச் சாப்பாடு கிடைக்கும்; நலம் பொலம் இரண்டும் அனுபவிக்க வேண்டும்; நலிந்தும் வலிந்தும் பொருள்கொள்ளக் கூடாது; நன்னியுங் குன்னியும் (நன்னி குன்னி) நிறைய வந்திருந்தன.

நாட்டிலும் காட்டிலும் மக்கள் வாழ்கின்றனர்; நாடித் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்; நாடுநகரெல்லாம் இதே பேச்சு; நாணிக்கோணி நடக்கின்றாள்; நாயும் பேயும் போன்ற தியமக்கள்; நாளுங்கிழமையும் பார்த்துச் செய்தாலும் வருவது வந்தே தீரும்; நாளுங் கோளும் நம்மை என்ன செய்யும்?

நிரந்து கலந்துபேசி முடிவு செய்யுங்கள்; நிலபுலம் அவனுக்கு நிரம்பவுண்டு; நீட்டி நிமிர்ந்து சாய்ந்துகொண்டான்.

நீக்குப்போக்கு (இடைவெளி, ஒய்வு ஒழிவு;) இல்லை.

நெட்டை கட்டை (கூடுதல் குறைதல்) இருந்தாலும் சரியென்று போகவேண்டும்.

நேருங் கூருமாய் (நெட்டையுங் குட்டையுமாய்)க் காயை அறுத்துப்போட்டிருக்கின்றது.

நைந்து பிய்ந்துபோய்விட்டது துணி; இஞ்சியை நைய நறுங்கக் கட்டிப்போடு.

நொண்டி சண்டிக்கு (நொண்டி நடத்திற்கு) உதவ வேண்டும்.

நோய் நொம்பலம் (நோவு நொடி) வந்தால் கவனிக்க ஆளில்லை

பங்கு பாகம் கேட்கின்றான்: பட்டது கெட்டதெல்லாம் சொன்னான்; பட்டம் பதவிகட்கு ஆசைப்படுகின்றான்; பட்டிதொட்டியெல்லாம் சுற்றிப்பார்க்க வேண்டும்; பட்டினியும் பசியுமாய்க் கிடந்து வருந்துகின்றான்; பட்டுப் பருத்தி தெரியவேண்டும்; பம்பை பறட்டையாய்த் தலையை வைத்துக் கொண்டிருக்கின்றனர்; பம்மிப் பதுங்கித் திரிகின்றான்; பயறு பச்சை நன்றாய் விளைந்திருக்கின்றன; பயிர் பச்சை நன்றாய் விளையவில்லை; மக்களினம் பல்கிப் பெருகி வருகின்றது; பழக்க வழக்கம் நன்றாயிருக்க வேண்டும்; பழிபாவங்கட்கு அஞ்சவேண்டும்; கொடி பற்றிப் படர்ந்து செல்கின்றது.

பாங்கு பரிசனை (நன்னடை) யறிந்து ஒழுகவேண்டும்; எந்நேரமும் பாட்டும் படிப்புந்தான்; பாயும் படுக்கையுமாய்க் கிடக்கின்றான்; பாலும் தேனும் ஓடும் தேசம்; பாலும் பழமும் உண்டு வளர்ந்தவன்.

பிய்த்துப் பிடுங்கிவிடுவார்கள்: பிள்ளைகுட்டியில்லாதவன், பிறப்பு வளர்ப்பு வெவ்வேறானவர்: செடியுங் கொடியும் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன.

புல் பூண்டு மழைக்காலத்தில் முளைக்கும்.

பூச்சி பொட்டு (பூச்சிபொட்டு) வழியிலிருந்தாலும் இருக்கும்: பூவும் பிஞ்சுமாயிருக்கிறது பீர்க்கு.

பெண்டு பிள்ளைக்குத் தேடிவைக்கவேண்டும்; பெற்றது பிறந்தது பிற்காலத்தில் உதவும்.

பேரும் புகழும் நாடெங்கும் பரவியுள்ளது.

பொக்கும் பொடியும் காற்றில் பறந்துவிடும்; பொங்கிப் பொரித்துப் போடுவது யார்? பொட்டுப் பொடியெல்லாம் நீக்கிவிடவேண்டும்; சோலை முழுதும் பொந்தும் புதருமாய் இருக்கின்றது; பொய்யும் புலையும் (பொய்யும் புளுகும்) சொல்லித் திரிகின்றான்.

போக்கிரி சாக்கிரியுடன் சேரக்கூடாது; அவனுக்குப் போக்கு புகல் ஒன்றுமில்லை; அவனைப் போற்றிப் புகழ்ந்து பேசினார்கள்.

மக்கி (மங்கி) மழுங்கிப்போன கத்தி; மட்டு மதிப்பு இருக்கவேண்டும்; மண் மனையெல்லாம் விற்றுவிட்டான்; வீடு மண்ணும் மதிலுமாய்க் கிடக்கின்றது; மந்திர தந்திரம் வல்லவன்; மயங்கித் தியங்கி நிற்கின்றான்; மயக்கமும் தியக்கமுமாய்க் கிடக்கின்றான்; மரமட்டை யிருந்தால் எரிக்கலாம்; மருந்து மாயம் தெரிந்தவன்; மலைக்கும் மடுவுக்குமுள்ள தூரம்; மழை தண்ணீர் அங்கு உண்டா? இங்கு மழையுந் தண்ணீருமாய் இருக்கின்றது.

மாசு மறு அற்றவன்; மாடு கன்று வைத்திருக்கின்றான். மானம் ஈனம் சிறிதும் அவனுக்கில்லை.

மிச்சம் மீதியைச் சேர்த்துவை; மினுக்கித் தளுக்கித் திரிகின்றாள்.

முக்கலும் முனங்கலும் எதற்கு? முக்கித் தக்கி மூட்டையைத் தூக்கிவிட்டான். யானை முட்டி மோதிக் கதவை முறித்துவிட்டது; விறகு முண்டும் முடிச்சுமாய்க் கிடக்கின்றது; குழந்தையை முத்தி மோந்து அணைத்துக்கொண்டாள்; நிலத்திலே முள்ளுங் குருக்கும் முளைத்துவிட்டது; காடெங்கும் முள்ளும் முடையுமாய்க் கிடக்கின்றது; முற்ற முடிய இருந்து சொற்பொழிவைக் கேட்கவேண்டும்.

மூச்சுப் பேச்சு இல்லை; மூலை முடங்கியிற் போய் உறங்குகின்றான்; மூலை முடுக்கெல்லாம் தேடிப் பார்த்தேன்; ஆயுதங்களெல்லாம் மூளியுங் காளியுமாய்க் கிடக்கின்றன.

வகைதொகையாய்ப் பேசவேண்டும்; வந்தது போனதைப் பூசவேண்டும்; வந்தனை வழிபாடு நடந்துவருகின்றது; வம்பு தும்பு வேண்டாம்; வழிதுறை தெரியவில்லை; வழிவகை சொல்லிக்கொடு; குளம் வற்றி வறண்டு போய்விட்டது.

வாட்டஞ்சாட்டமா யிருக்கிறான் பையன்; அங்கணம் வாட்டஞ்சாட்டமாயிருக்கவேண்டும்; கதிரை வாட்டி வதக்கித் தின்றார்கள்; வலியவர் எளியவரை வாட்டி வதைத்து வருகின்றனர்; மலர் வாடி வதங்கிப்போய்விட்டது; அவன் நிலத்திற்கு வாய்க்கால் வரப்பு இல்லை; வருவது வாய்க்கும் கைக்கும் எட்டவில்லை; வாய்க்குங் கைக்குமாயிருக்கிற நேரம்; வாரி வகிர்ந்து உச்சியெடுக்க வேண்டும்; வாழ்விலும் தாழ்விலும் கணவன் மனைவியர் பிரிதல் கூடாது; வானகமும் வையகமும் அதற்கு ஈடல்ல.

விட்டகுறை தொட்டகுறை முடிக்கவேண்டும். விடேன் தொடேன் என்று தொடர்ந்தான்; விண்ணுக்கும் மண்ணுக்கு முள்ள தூரம்; விதிவிலக்கு அறிந்து ஒழுகவேண்டும்; விருந்து வேற்று வந்தால் வேளாண்மை செய்யவேண்டும்; விருப்பு வெறுப்பு இல்லாமல் ஒரு பொருளை ஆராய வேண்டும்; வீடுங் குடித்தனமுமாய் அவனை இருக்கவைத்தார்கள்; வீடும் விளக்குமாய் இருப்பது நல்லது; விகாரமாயப் பேசினான்.

வெட்கி விறைத்துப் போனான்; வெட்டுங் குத்துமாய்க் கிடக்கின்றது; வெட்டுப்பழி குத்துப்பழி நேர்ந்துவிடும்; சோறு வெந்து விரிந்துவிட்டது; வெள்ளையுஞ் சொள்ளையுமாய்ப் போகவேண்டும்.

வேரும் தூரும் கறையான் அரித்துவிட்டது; வேர்த்துப் புழுத்து (வேர்த்து விறுவிறுத்து) ஓடிவந்தான்; வேலைவெட்டி யில்லாதவன்.

## 6. மரபுத் தொடர்மொழிகள்
## (Idiomatic Phrases and Expressions)

அகத்து மகிழ்ச்சி முகத்து நிகழ்ச்சியாக, அகப்பற்று புறப்பற்றுக்களை அறவே ஒழித்து, அடக்கு

வாரற்ற கழுக்காணியாய், அடிதண்டம் பிடிதண்டமாய் அடிமைப்பட்டு, அடிதலை தடுமாறி, அடிமுதல் முடிவரை, அடிமைமுதல் அரசன்வரை, அடியற்ற மரம்போல் படிமேல் விழுந்து, அடுப்பங்கரையில் ஆம்பிப்பூப்ப, அண்டபிண்ட அனைத்துப் பொருள்களும் (அனைத்துயிர்களும்,) அமிழ்தினுமினிய தமிழ்(மொழி), அரிதுணர் பொருளவற்றை எளிதுணர் பொருளவாக்கி, அரைக்காசிற்கும வழியில்லாமல், அழுதபிள்ளையும் வாய் மூடும அதிகாரம், அன்புள்ள அரசனும் அறிவுள்ள அமைச்சனும், அறமுதல் நான்கும் திறமுற ஆற்றி.

ஆக்சவழிப்பாற்றல் (சாபானுக்கிரக சக்தி) அடைந்து, ஆக்கவும் அழிக்கவும் வல்லவராய், ஆசைகாட்டி மோசஞ் செய்து, ஆகாயத் தாமரையும் ஆமை மயிர்க்கம்பலமும், ஆடையணி யலங்காரனாய்; "ஆடையின்றி வாடையின் மெலிந்து கையதுகொண்டு மெய்யது பொத்திக் காலது கொண்டு மேலது தழீஇ," ஆண்டிமுதல் அரசன்வரை, ஆண்டில் இளையனாய் அறிவில் முதியனாய், ஆருமற்ற அத்த வனக்காடு, ஆலமுண்ட நீலகண்டன், ஆளுக்கேற்ற வேடமுங் காலத்திற்கேற்ற கோலமும், ஆற்றில் ஒருகால் சேற்றில் ஒருகால் வைத்து.

இட்டடி நோக எடுத்தடி கொப்புளிக்க, இடம் பொருள் ஏவல், இட்டது சட்டம் வைத்தது வரிசை, இந்திரன் முதலிய இறையவர் பதமும் அந்தமிலின்பத்தழிவில் வீடும், இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பயப்பதாய், இம்மை மறுமை நற்கதிகள் (வீடு), இயன்றவரை முயன்று, இருகையினுமேந்தித் தலையில் தாங்கிக் கண்ணிலொற்றி, இருதோணியிற் கால்வைத்து, இருபாகட்டொரு சகடு, இருமையால் நேர்ந்து (உபயானு சம்மதமாய்), இருவினையொப்பு மலபரிபாகம், இல்வுசாத்த கிளிபோல் ஏமாறி, இலைமறை காய்போல் மறைந்துகிடந்த, இலக்கண விலக்கியம் விளக்கமாய்க் கற்று, இறைவனுக்கே வெளிச்சம், இறுதிவரினும் உறுதிகூறி, இன்னோரன்ன.

ஈர்ங்கை விதிராத இவறி (உலோபி).

உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை, உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், உடல்கரண வுலகவின்பங் கள் (தனுகரண புவனபோகம்), உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்புவித்து, உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்யாமல், உப்பிட்டவரை உள்ளளவும் நினைந்து, உப்புக் கும் உதவாமல் ஊர்சுற்றித் திரிந்து, உயிர் ஒடுங்கி உடல் நடுங்கி, உயிருக்குயிராய், உரபயியுங்களைத்தும் எடுத்தும் ஒலிக்கின்ற (வடமொழி யெழுத்துக்கள்), உருவுந்திருவுங் குலமுங் குணமும் ஒத்தவராய், உலகவழக்கு செய்யுள் வழக்கிற்கொப்ப, உலகமெல்லாம் ஒருகுடைக்கீழ் ஆண்டு, உவர்க்கடலன்ன செல்வர், உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற, உள்ளங்கை நெல்லிக்கனிபோல், உள்ளதைக் கொண்டு நல்லதைப்பண்ணி, உள்ளும் புறம்பும் ஒத்து, உள்ளொன்று புறம்பொன்று பேசாமல், உற்றுநோக்கி ஊகித்தறிந்து, உற்றோர் மகிழ மற்றோர் புகழ, உள்மதம் இல்மதம (ஆஸ்திகம் நாஸ்திகம்)

ஊறுறக்கமொழிந்து, ஊரார் உடைமைக்குப் பேராசைகொண்டு, ஊரார் உடைமைக்குப் பேயாய்த் திரிந்து, ஊரார் பகைக்கும் தீராப் பழிக்கும் ஆளாய், ஊருக்குழைத்து ஊதாரியாய்ப் பிழைத்து.

எங்கெழிலென் ஞாயிறெமக்கு என்றிருந்து, எச்சிற் கையாற் காக்கை விரட்டாதவன், எட்டாத பழத்திற் குக் கொட்டாவிவிட்டு, எடுத்த காரியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு, எடுப்பார் கைப்பிள்ளையாய், எட்டிரண்டும் அறியாத, எண்சாணுடம்பு ஒருசாணைக் குன்றி, எண்ணத்தொலையாது ஏட்டிலடங்காது, எண்ணுக் கும் எட்டா இறைவன், எந்நாட்டினுமினிய தென்னாட்டில், எல்லார்க்கும் நல்லவனாய், எல்லாம்வல்ல இறைவன், எழு மையும் வழுவாத உழுவலன்பு, என்றித் தொடக்கத்தார்.

ஏராளமாயும் தாராளமாயும், ஏழாம் நரகிற்கும் கீழாம் நரகம், ஏழை பாழைகளை வயிற்றிலடித்து வாயில் மண்ணைப்போட்டு, ஏனோதானோ என்றிராமல்.

ஐயந்திரிபறக் கற்று.

ஒட்டிய வயிறும் உலர்ந்த உதடுமாய், ஒரு கண்ணில் எண்ணெயும் ஒரு கண்ணிற் சுண்ணாம்பும் தடவாமல், ஒரு பக்கம் பாலும் ஒருபக்கம் நீரும் ஒழுக, ஒல்காப் பெருமைத் தொல்காப்பியர், ஒன்றாக்கும் பற்றுத நாயேன்.

ஓடும் பொன்னும் ஒப்ப நினைக்கும், ஒல்உடன் ஆடிப் பால் உடன் பருகி.

கடன்மடை திறந்தாற்போலக் கவிபாட வல்லவராய், கட்டியணைத்து உச்சிமோந்து, கடைந்தெடுத்த கழிபெருமடையன், கடன்வாங்கி உடன்வாங்கி உடலைத்தேற்றி, கண்கண்ட தெய்வம், கணைகவர் கவின்பெறு கட்டடம், கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று, கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும், கண்ணாற் கண்டதைக் கையாற் செய்து, கண்ணீர்வார மெய்ம்மயிர் சிலிர்ப்ப, கண்ணீர்விட்டுக் கதறி யழுது, கண்ணுக்குக் கண்ணாகவும் உயிருக்குயிராகவுமிருந்து, கண்ணைக் கவர்ந்து பார்வையைப் பறித்து உள்ளத்தைக் கொள்ளைகொண்டது, கண்மணிபோற் காத்து, கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப்போக, கண்மூடித்தனமாய்க் காலங்கழித்து, கதிரவனுந் திங்களுமுள்ள காலமெல்லாம், கயல்விழியுங் குயில் மொழியும், கரி பரி தேர் கால் முதலியன (ரத கஜ துரக பதாதி), கருவிலே திருவுடையார், கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்து, கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்கு விளங்காமல்.

காடிடையிட்டும் நாடிடையிட்டும், காடு வாவென விடு போவென, காமவெகுளி மயக்கங்கள், காரியத்திற் கண்ணுங் கருத்துமாயிருந்து, காலாலிட்டதைக் கையாற் செய்து, காலாலிட்டதைத் தலைமேற்கொண்டு, காற்றினுங் கடுகிச்சென்று, காலனும் அஞ்சும் கடுங்கண் மறவர்

குடிக்கக் கூழுக்கும் கட்டக் கந்தைக்கும் வழியற்று, குண்டுங்குழியுங் திண்டுந் திருசும், குமரிமுதல் இமயம் வரை, குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்,

குற்றத்தைத் தள்ளிக் குணத்தைக்கொண்டு, குறுகுறு நடந்து குதலைமொழிந்து.

கூரிய அறிவும சீரிய ஒழுக்கமும், கூற்றினும் கொடிய வர், கூற்றத்தைக் கையால் விளிக்கும் கொடுமறவர்.

கெட்டுக் கீழை வழியாகி.

கைகட்டி வாய் புதைத்து, கைக்கெட்டினது வாய்க் கெட்டாமல், கைம்மாறு கருதாமல்.

கொடாக்கண்டனுக்கு விடாக்கண்டன், கொடியாரை நீக்கி அடியாரைக் காத்தல், கொடுப்பாரும் அடுப்பாரு மின்றி, கொண்டைமேற் காற்றடிக்க (கவலையின்றி), கொல் லத்தெருவில் ஊசி விற்கிறவன்.

கோடாகோடிச் சூரியவொளியுள்ள, கோடியுந்தேடிக் கொடிமரமும் நட்டி.

சட்டங்கள் கற்றும் பட்டங்கள் பெற்றும, சதுர வேதனைப்பட்டுச் சம்பாதித்து, சந்தன களபகாசறை (கஸ் தூரி), சம்பளமும் உம்பளமும் பெற்று.

சாதுரியமாயும் மாதுரியமாயும் பேசி.

சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாகலின், சிறு கக்கட்டிப் பெருக வாழ்ந்து, சின்னைட் பைபிணிச் சிற்றறி வினர்.

சுவையொளி யூறோசை நாற்றம்.

செய்வன செய்து தவிர்வன தவிர்ந்து.

சொற்சுருக்கமும் பொருட்பெருக்கமும், சொற் சுவை பொருட்சுவைகளிற் சிறந்து, சொன்மதியும் தன் மதியும் (சொற்புத்தியும் சுயபுத்தியும்) இல்லாமல், சொன் னயமும பொருணயமும், சொன்னோக்கும் பொருணோக் கும தொடைநோக்கும் நடைநோக்கும, சோறுக்குச் செலவும் பாருக்குப் பாரமுமாய்.

தட்டுக்கெட்டுத் தடுமாறி, தட்டுத் தடையின்றித் தாராளமாய்ப் பேசவல்ல, தட்பவெப்ப நிலை (சீதோஷ்ண ஸ்திதி), தமிழ்நாடு செய்த தவப் பயனைத் தோன்றி, தலையால் வந்ததைக் காலால் தள்ளி, தலையுங் காலுந் தெரியாது தம்முள் மயங்கி, தவிடுபொடியாய்த் தகர்த்தெறிந்து, தவித்த முயலை அடிப்பவன், தளர்நடை நடந்து மழலை மொழிந்து, தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன், தன்னுயிர்போல் மன்னுயிரென்றுந் தண்ணளியான்.

தான்றோன்றித் தபபிரான்.

திறம்படவும் தெம்படவும் பேசி.

துணைக்குத் துணையாய்த் தொண்டைக் குழிக்கு வினையாய், துரும்பைத் தூணாக்கிப் பேனைப் பெருமாளாக்கி, துள்ளித் திரிகின்ற காலத்தில் துடுக்கடக்கிப் பள்ளிக்கு வையாமல்.

தெற்கு வடக்குத் தெரியாதவன், தென்றல் வீசித் தேன்சொரிந்து வண்டு பாடும் வளமரக்கா.

தேனினுமினிய திருசொல், தேனினுமினிய தென்மொழி.

தொகுத்தும் வகுத்தும் விரித்தும் (தொகை வகை விரியாய்), தொடக்கம் நிலைநிறுத்தி, தொல்காப்பியத்தும் சொல்காப்பியத்தும் பல்காற் பயின்று, தொல்காப்பியத்தைப் பல்காற்பயின்று.

தோன்றாத் துணையாயிருந்து.

நடையுடை பாவனை, நரை திரை மூப்பு, நல்லதைக் கொண்டு அல்லதைத் தள்ளி, நம்பா மதம் (நாஸ்திகம்) பேசி நாத்தழும்பேறி.

நாட்டுக்கு நாற்காதம், நாடலைத்துக் கேடுசெய்து, நாடியைப் பிடித்து நல்ல சொற்சொல்லி, நாத்தளர்ந்து வாய் குழறி, நாநயமும் நாணயமும், நாவொன்று சொல்

லப் பேயொன்று சொல்ல, நால்வேதம் ஆறு சாத்திரம் பதினெண் புராணம் அறுபத்துநான்கு கலைஞானம், நாளைக்கொரு திறமும் வேளைக்கொரு நிறமும், நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமும்.

நின்று நெளித்து நீட்டி நிமிர்ந்து

நீர்சூழ்ந்த நிலவுலகம், நீறுபூத்த நெருப்பு.

நுண்மாண் நுழைபுலம், நுனிப்புல் மேய்ச்சலாய்.

நூன்மதி துய்ப்பிற்கு (சுருதியுக்தி யனுபவங்கட்கு)ப் பொருந்த.

நெஞ்சாரப் புகழ்ந்து வாயார வாழ்த்தி, நெடுஞ்சாண் கிடையாய் நிலத்தில் விழுந்து, நெற்றியின் வேர்வை நிலத்தில்விழப் பாடுபட்டு.

நோயும் நொடியும் பாயும்படுக்கையுமாய்க் கிடந்து.

பகலென்றுமில்லாமல் இரவென்றுமில்லாமல் பாடுபட்டு, பகை நட்பு அயல் என்னும் முத்திறத்தும் ஒத்து, பட்டபாடும் கெட்டகேடும், பட்டிமாடுபோற் கட்டுக்காவலின்றிச் சுற்றித்திரிந்து, படைநாலும் புடைசூழ, படைப்புக்காப் பழிப்பு, பணத்தைப் பணமென்றும் காசைக் காசென்றும் பாராமல், பருத்தமேனியுங் கருத்த கண்களும், பருந்துங் கிளியும் பாங்காய் வாழ, பல்லுடன் உற்றுச் சொல் உடன்கற்று, பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்டமாட்டி.

பார்த்த கண்ணும் பூத்துப்போய்.

பிறப்புப் பிணிமூப்புச் சாக்காடு.

புலவர்க்கும விளங்காப்பொருள், புலனைந்தும் பொறி கலங்கி, புலியும் மானும் ஒருதுறை யுண்ண, புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை.

பொய்யும் புலையும் புனைசுருட்டும்,
'பொல்லாப் புழுமலி நோய்ப்புன் குரம்பை,'

பொல்லாரை நீக்கி நல்லாரைக் காத்தல் (துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம்), பொன்னே பூவே கண்ணே கனியே

என்று புகழ்ந்து, பொன்னொரு தட்டிலே பூவொரு தட்டிலே வைத்துப்போற்றி.

மகத்துவம் பொருந்திய அகத்திய முனிவர், மணிமந்திர மருந்து, மயிலாடக் குயில்பாட மணங்கமழும் மலர்ச்சோலை, மலையிலக்கு, மலைவிழுங்கி மகதேவன், மனமொழி மெய்கள் (மனோவாக்குக் காயங்கள்), மன்னுயிரைத் தன்னுயிர்போல் எண்ணி, மனம்போன போக்கெல்லாம் போய்.

மாடமாளிகை கூடகோபுரம், மானங்கெட்ட மழுங்கல்.

முயற்கோடும் குதிரைக்கொம்பும், முன்னுக்குப்பின் முரண்பட.

மேலெழுந்தவாரியாகப் படித்து.

மொட்டைத் தலைக்கும் முழங்காற்கும் முடிபோட்டு.

யாருக்கு வந்த விருந்தோ என்றிருந்து.

வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவராய், வடிகட்டிய முட்டாள், வயிறொட்டி வாய்புலர்ந்து, வரம் வாங்கி வந்தவன், வழிதுறை தெரியாமல், வழிமேல் விழிவைத்து

வாய்க்கெட்டினது வயிற்றுக்கெட்டாமல், வாழ்நாளை வீழ்நாளாக (வீணாளாக)க் கழித்து, வாழையடி வாழையாய் வந்த, வானுறவோங்கி வளம்பெற வளர்ந்து.

விண்ணோர் புகழ மண்ணோர் மகிழ, விதித்தன செய்து விலக்கியன ஒழித்து, விலாப்புடைக்க உண்டு.

வெட்டவெளிச்சம் பட்டப்பகலாய் விளங்க, வெண்சாமரை வீசி ஆலவட்டம் பரிமாறி, வெள்ளிடைமலை, வெள்ளிடை மலைபோல் தெள்ளிதில் தெரிய, வெறுவாய்ச் சொல்வீரர்.

வேதாகம புராணேதிகாசங்கள்.

---

*

# III. கட்டுரையியல்

## (Written Composition)

## 1. குற்றங்களும் குணங்களும்

பல சொற்றொடர்களைப் பொருட்கோவைபடத் தொடுத்து, உரையாடும் கடிதமும் ஆவணமும் (பத்திரமும்) கதையும் கட்டுரையும் நூலுமாகப் பல்வகை எழுத்தீடுகளை வரையும்போது, பத்துவகைக் குற்றங்களையும் நீக்கிப் பத்துவகை அழகுகளையும் அமைத்து வரைதல் வேண்டும்.

பத்துவகைக் குற்றங்களாவன :—

(1) **குன்றக்கூறல்** - குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டிய சொற்களினுங் குறைவுபடச் சொல்லுதல், குறித்த பொருளைப் பற்றிக் கொஞ்சமாகக் கூறுதல்.

(2) **மிகைபடக்கூறல்** - குறித்த பொருளை விளக்குதற்கு வேண்டும் சொற்களினும் மிகுதியாகச் சொல்லுதல், குறித்த பொருளைப்பற்றி அதிகமாக (அளவுக்குமிஞ்சி)க் கூறுதல்.

(3) **கூறியது கூறல்** - சொன்ன பொருளையே திரும்பச் சொல்லுதல்.

(4) **மாறுகொளக்கூறல்** - முன்னுக்குப்பின் முரண்படச் சொல்லுதல்.

(5) **வழூஉச்சொற் புணர்த்தல்**-குற்றமுள்ள (தவறான) சொற்களை யமைத்தல்.

எ - டு. எம்பழது, எஷோ, குதவளை, தவக்களை, நேழ்மை, ரெம்ப.

(6) **மயங்கவைத்தல்**-பொருள் தெரியாமல் மயங்கவும், பொருள் இதுவோ அதுவோ என ஐயுறவும் வைத்தல்.

(7) **வெற்றெனத் தொடுத்தல்** - பொருட் செறிவில்லாமல் வெறுமையாகச் சொற்களையமைத்து இடத்தை நிரப்புதல்.

(8) **மற்றொன்று விரித்தல்** - சொல்லத் தொடங்கிய பொருளைப்பற்றிச் சுருக்கமாகவும் வேறொரு பொருளைப் பற்றி விரிவாகவும் சொல்லுதல்.

(9) **சென்றுதேய்ந்திறுதல்** - சிறப்பாகத் தொடங்கிப் போகப்போகச் சொற்சுவை பொருட்சுவை குறைதல்.

(10) **நின்று பயனின்மை** - ஒரு சொல்லோ தொடரோ பகுதியோ ஒரு பயனுமின்றி நிற்றல்.

பத்துவகை அழகுகளாவன :—

(1) **சுருங்கச் சொல்லல்** - சொற்களை விருகப் பெருக்காது பொருள் விளங்குமளவில் சுருக்கமாகச் சொல்லுதல்.

(2) **விளங்கவைத்தல்** - ஐயந்திரிபிற்கு (சந்தேக விபரீதங்கட்கு) இடமில்லாதவாறு பொருள் தெளிவாய்த் தெரியவைத்தல்.

(3) **நவின்றோர்க்கினிமை** - படிப்பவர்க்குப் பொருட்சுவையால் இன்பமூட்டுதல்.

(4) **நன்மொழி புணர்த்தல்**-குற்றமற்றனவும் பொருத்தமுடையனவுமான சொற்களையமைத்தல்.

(5) **ஓசையுடைமை** - இன்னோசை கொண்டிருத்தல்.

(6) **ஆழமுடைத்தாதல்** - ஆராயுந்தோறும் ஆழ்ந்த கருத்துக்களையுடையதாயிருத்தல்.

(7) **முறையின் வைப்பு** - அதிகாரம் இயல் கருத்து முதலியவற்றை ஏரணவொழுங்குபட அல்லது இயற்கைத் தொடர்ச்சியாய் அமைத்தல்.

(8) **உலக மலையாமை** - உயர்ந்தோர் வழக்கொடு மாறுபடாமை.

(9) **விழுமியது பயத்தல்** - சிறந்த பயனை அடைவித்தல்.

(10) **விளங்குதாரணத்ததாகுதல்** - எல்லார்க்கும் விளங்கக் கூடிய எடுத்துக்காட்டுக்களைக் கொண்டிருத்தல்.

குறிப்பு: உலகமலையாமையில், இடமலைவு காலமலைவு கலைமலைவு உலகமலைவு நியாயமலைவு ஆகமமலைவு என்னும் அறுவகை மலைவு விலக்கும் அடக்கப்பெறும்.

ஓரிடத்திற்குரிய பொருளை வேறோரிடத்திற்குரியதாகக் கூறுவது இடமலைவு; ஒரு காலத்திற்குரிய பொருளை வேறொரு காலத்திற்குரியதாகக் கூறுவது காலமலைவு; ஒரு கலைக்கு மாறாகக் கூறுவது கலைமலைவு; உலகியற்கு அல்லது உயர்ந்தோர் வழக்கிற்கு மாறாகக் கூறுவது உலகமலைவு அல்லது உலகியல் மலைவு; ஏரணத்திற்கு (தருக்க நூலுக்கு) அல்லது பகுத்தறிவிற்கு மாறாகக் கூறுவது நியாயமலைவு; அறநூலுக்கு மாறாகக் கூறுவது அறமலைவு அல்லது ஆகமமலைவு.

## 2. பாகியமைப்பு (Paragraph Structure)

எப்பொருளைப்பற்றி யெழுதினாலும், அப்பொருளைப் பற்றிய கருத்துக்களையெல்லாம் சேர்வைபட அமைத்துக் கொண்டு, ஒவ்வொன்றையும் பற்றி இயன்ற அளவு அல்லது வேண்டுமளவு, தனித்தனிப் பகுதியாக ஒவ்வொரு வாக்கியத்தொகுதி வரைவது **பாகியமைப்பு** அல்லது **பாகிவரைவு** ஆகும்.

கடிதம் கட்டுரை ஆவணம் (பத்திரம்) முதலியன பாகியமைப்பையே பாகுபாடாக் கொண்டிருக்கும். நூலாயின், அதிகாரம் இயல் முதலிய பிரிவுகளாக வகுக்கப்பட்டு, அவற்றுள் ஒவ்வொரு சிறு பிரிவும் பாகியமைப்புடையதாகவிருக்கும்.

பாகியமைப்புடன் எழுதப்பட்ட எவ்வகை எழுத்திலும், படிப்பதற்கு வசதியாகவும் பொருள் எளிதாய்

விளங்குவதற்கு ஏதுவாகவும் பார்வைக்கு நன்றாகவும் இருப்பதால், உரைநடையில் எழுதும் எல்லாவற்றையும் பாகியமைப்புடனே எழுதுதல்வேண்டும்.

ஒரு பாகியின் இறுதி முழுவரியாகவும் இருக்கக் கூடுமாதலால், ஒரு பாகிக்கும் இன்னொரு பாகிக்கும் இடையிடை பார்த்தவுடன் தெளிவாய்த் தெரியுமாறு, ஒவ்வொரு பாகியின் முதல் வரியும் சற்று வலமாகத் தள்ளித் தொடங்கப்பெறும்.

## பாகியமைப்பு நெறிமுறைகள் (Principles of Paragraph Structure)

பாகியமைப்பானது, கருத்தடைவு பற்றிய ஏரண முறைப்பட்டதேயன்றி, அவரவர் விருப்பம்போலச் செயற்கை முறையாய்ப் பகுத்துக்கொள்வதன்று. ஆகையால், பாகியமைப்புப் பற்றிய சில திட்டமான நெறிமுறைகள் தெரிந்துகொள்ளல் வேண்டும். அவையாவன :

### 1 ஒருமைப்பாடு (Unity)

ஒரு வாக்கியம் ஒரே உண்மையை அல்லது விதியைப் பற்றியிருத்தல்போல, ஒரு பாகியும் ஒரே பொருளை அல்லது பொருட்கூறாகிய கருத்தைப்பற்றியிருத்தல் வேண்டும். இது **பாகியொருமைப்பாடு** எனப்படும்.

எப்பொருளாயினும், பல கருத்துகளைத் தழுவினதாக அல்லது உள்ளடக்கினதாகவேயிருக்கும். அவற்றுள் ஒவ்வொன்றையும் பற்றி ஒவ்வொரு பாகி வரைதல் வேண்டும். ஒரு கருத்து பல உட்கருத்துக்களைக் கொண்டதாயின, அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பாகியமைத்தல் வேண்டும்.

### 2. ஒழுங்கு (Order)

பாகியமைப்புப் பற்றிய இரண்டாவது நெறிமுறை கருத்தொழுங்காகும். இது **பாகியொழுங்கு** எனப்படும்.

இது அகவொழுங்கு புறவொழுங்கு என இரு திறத்தது. ஒரு பாகிக்குள்ளே யமைந்திருக்கும் கருத்தொழுங்கு அகவொழுங்கும், அதற்குப்புறமாக முன்னும் பின்னும் அமைந்திருக்கும் கருத்தொழுங்கு புறவொழுங்கும் ஆகும்.

முதலாவது, ஒரு கட்டுரையின் பல பாகிக்கருத்துக்களும், முன்பின் முறை பிறழாது ஏரணத் தொடர்ச்சியா யிருத்தல்வேண்டும். இரண்டாவது, ஒவ்வொரு பாகியி னுள்ளும் அமைந்திருக்கும் வாக்கியங்கள், அவ்வப் பாகிக் கருத்தைப்பற்றி ஏரணத் தொடர்பு பூண்டிருத்தல் வேண்டும்.

பொதுவாக, ஒரு பாகியின் முதல்வாக்கியம் பாகிக் கருத்தைத் தொடங்கல்வேண்டும். அதன் இறுதி வாக்கியம் அதை முடித்தல்வேண்டும். இடையிலுள்ள வாக்கியங்களெல்லாம், பொருள் தொடர்ச்சி குலையாது பாகிக் கருத்தை விளக்கவோ விரிக்கவோ வற்புறுத்தவோ வேண்டும். பாகிக் கருத்து அமைந்திருக்கும் வாக்கியம், கருத்து வாக்கியம் (Topical Sentence) அல்லது திறவு வாக்கியம் (Key Sentence) எனப்படும். இது பாகியின் முதலிலாவது இடையிலாவது இறுதியிலாவது இருக்கலாம். முதலிலிருப்பது தலையாயது. இடையிலிருப்பது இடையாயது; இறுதியிலிருப்பது கடையாயது. முதல வாக்கியம் படிப்பவர் உள்ளத்தைக் கவர்ந்து அவரது ஆர்வத்தைப் பெறுவதாயும், இடை வாக்கியங்கள் அவ்வார்வத்தை மேன்மேலும் வளர்ப்பனவாயும், இறுதி வாக்கியம் அதைச் சால்பு (திருப்தி) படுத்துவதாயும், இருத்தல்வேண்டும். பிஞ்சு தோன்றிக் காயாய்ப் பருத்துக் கனியாய்ப் பழுத்தாற்போல, பாகிக் கருத்தும் முன்பு தோன்றி முறையே வளர்ந்து முடிவில் முதிரவேண்டும்.

பாகிப் பொருள் ஒரு வரலாறாயின், பாகி வாக்கியங்கள் அவ்வரலாற்று நிகழ்ச்சிகளை முறை பிறழாது தொடர்ந்து கூறுதல்வேண்டும்.

### 3. வகைப்பாடு (Variety)

பாகியமைப்பின் மூன்றாம் நெறிமுறை வகைப்பாடு. அதாவது, பாகிகளெல்லாம் ஒரு கோவையின் அல்லது மாலையின் செய்யுட்களைப்போல் ஒரே யளவாயிராது, குறிதும் நெடிதுமாக வெவ்வேறளவாயிருத்தல். இது **பாகி வகைப்பாடு** எனப்படும். ஒரு பாகியின் அளவு அதன் கருத்தைப் பொறுத்திருத்தலால், பாகிகளெல்லாம் தாம் கூறும் கருத்தின் ஒடுக்க விரிவிற்கேற்றவாறு குறுகியும் நீண்டுமிருக்கும். ஒரு பாகி ஒரு வாக்கியத்திலும் அமையலாம்; பல வாக்கியங்களிலும் அமையலாம். அதன் சிற்றெல்லையே யன்றிப் பேரெல்லை திட்டமாக வகுத்தற்குரியதன்றாயினும், அது ஒரு பக்கத்திற்கு மிகாதிருத்தல் நல்லதாம். மிக விரிவுபட்ட பாகிப் பொருள் பல கருத்துக்களாகப் பிரித்துக் கொள்ளுதற்கு இடந்தருமாதலின், ஒரு பக்கத்திற்கு மேற்படும் கழி நெடும் பாகியைப் பல சிறு பாகிகளாகப் பிரித்துக்கொள்வது நன்று. பாகியமைப்பின் பயன் படிக்கை வசதியும் பொருள் தெளிவுமாதலின், அப்பயன் கெடுமாறு பாகிகளை வரைகடந்து நீட்டுதல் தகாது.

ஒரு பாகியின் இடையில் மேற்கோட் செய்யுள் வருமாயின், அதைத் தனித்து வரைதல்வேண்டும். அதாவது, செய்யுள் வடிவு கெடாமல் புதுவரியில் தொடங்கி, ஒவ்வோர் அடியையும் அல்லது அடிப்பகுதியையும் தனி வரியாய் வரைதல்வேண்டும். ஒரே அடி அல்லது அடிப் பகுதியாயின், பாகியொடு சேர்த்தும் வரையலாம்.

இதுகாறுங் கூறியவற்றின் தொகுப்பு:

பாகியமைப்புப் பற்றிய முக்கிய நெறிமுறைகள், (1) உள்தள்ளித் தொடங்கல், (2) கருத்தொருமை, (3) கருத்தொழுங்கு, (4) அளவு வேறுபாடு, (5) மேற்கோட் செய்யுளின் தனி வரைவு என ஐந்து.

**கவனிப்பு:** மாணவர், வீட்டிலும் வகுப்பறையிலும் எழுதும் எவ்வகை வரைவுப் பயிற்சியையும் எழுத்திட்டை

யும், இறுதியில் ஒருமுறை பார்த்தலும் பிழை திருத்தலும் வேண்டும். பிழை மலிந்திருப்பின், முழுவதையும் மீண்டும் திருத்தமாய் வரைதல் வேண்டும். இயலுமிடமெல்லாம், முதலில் கரட்டு வரைவு (Rough draft) வரைந்து கொண்டு பின்பு அதைச் செவ்வைப்படி (Fair copy) செய்து கொள்வது நன்று. மேற்கூறிய பாகியமைப்பு விதிகளை விளக்கும் எடுத்துக்காட்டுகள் சில வருமாறு :—

(i) அகவொழுங்கைக்காட்டும் தனிப்பாகிகள்

1. "இனி, இசைக்குரிய பாடல்கள் எம்மொழியில் இருக்கவேண்டும் என்பதைப்பற்றிச் சில கூற விரும்புகின்றேன். இஃது ஏதுக்கள் இன்றியே எளிதில் உணரத்தக்கதொன்று. மக்களுக்குரிய நாட்டுமொழியில் இருப்பது இன்றியமையாதது. வேற்று மொழியில் அமைந்த பாடல்களைக் கேட்டெய்தும் இன்பம், இசையின் தனிநிலையில் எய்தும் இன்பத்தினும் சிறந்ததாகாது. வேற்று மொழிப் பாடல்களும், சாகித்திய சம்பந்தமில்லாத இசையும், இசைக் கருவிகளின் மூலம் கேட்கப்படும் கீதமும், ஒத்த தன்மையனவேயாம். சுவைக் கருத்துக்களைத் தன்மயமாக உணர்ந்து அனுபவிப்பதற்குத் தாய்மொழிப் பாடல்களே ஏற்றனவாம். கேட்கும் மக்களுட் பலர் தமக்குரிய மொழிப்பாடற் கருத்துக்களை உணர்தற்கே தகுதியில்லாதவராயிருக்கும் இக்காலத்தில், சிறிதும் பொருள் விளங்காத வேற்றுமொழிப் பாடல்கள் அவர்க்கு எவ்வாறு பயன்படும்? சில இசையரங்குகளில், பொருள் விளக்கமில்லாத வேற்றுமொழிப் பாடல்களைக் கேட்டுத் தலையசைக்கும் குழுவைக் காண்கின்றோம். அக்குழுவிற் பலர், இசையின் இயல்பையோ பாடற்பொருளையோ அறியும் தகுதியுடையாராக இருக்கமாட்டார். ஏதோ இசைக் கலையில் தமக்கு அறிவுண்டென்று பிறர் மதிக்கவேண்டும் என்னும் குறிக்கோளே, அன்னார் தலைநடுக்கத்திற்குக் காரணமாகும்.''

கதிரேசச் செட்டியார்.

இது, இசைப்பாட்டு தாய்மொழியிலிருத்தல்வேண்டும் என்னும் கருத்துப் பற்றியது. இதன் முதல் வாக்கியம், ஒரு வினாவின் வாயிலாக அறிவேட்கையைத் தூண்டி ஆர்வத்தை எழுப்புகின்றது. இடை வாக்கியங்கள், அவ்வினாவிற்கு விடையும் அவ்விடைக்கு ஏதுவும் விளக்கமுங் கூறுகின்றன. இறுதி வாக்கியம், வேற்றுமொழிப் பாட்டு நுகர்ச்சியின் போலித்தன்மையை எடுத்துக்காட்டி, பாகிக் கருத்தை வற்புறுத்துகின்றது.

2. "இந்தக் காட்சிகளை எங்கோ நாடகத்தில் கண்டதாக எண்ணவேண்டாம். தொல்காப்பியத்தில், தமிழில் உள்ள இலக்கிய இலக்கணங்களின் வகைகளைச் சொல்லும் பகுதியில், தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஆறுதல் கூறும் செவிலித்தாய் உபயோகப்படுத்தும் இலக்கியங்கள் இன்னவை என்ற விஷயம் சில சூத்திரங்களில் சொல்லப்படுகின்றன. அவற்றிலும் அவற்றின் உரைகளிலும் உள்ள செய்திகளை ஊன்றிக் கவனிக்கும்போது, மேலே சொன்ன காட்சிகளை நம் அகக்கண்ணில் காண்கிறோம். ஆனைக்கதை போன்ற கதைகளுக்கு, 'பொருளொடு புணராப் பொய்ம்மொழி' என்றும்; சிரிப்பு மூட்டும் கதைகளுக்கு, 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்றும்; விடுகதைகளுக்கு, 'பிசி' என்றும்; நாடோடிப் பாட்டுக்களுக்கு, 'பண்ணத்தி' என்றும் பெயர்கள் பழங்காலத்தில் வழங்கினவென்று தெரிகிறது. 'தலைமகளை வற்புறுத்தும் செவிலியர் உரைத்து நகுவித்துப் பொழுதுபோக்குதற்குரிய'வை இவை என்று உரையாசிரியர் எழுதுகிறார்."

கி. வா. ஜகந்நாதன்.

இது, தொல்காப்பியம் கூறும் செவிலித்தாய் கூற்று வகைகளைப் பற்றியது. இதன் முதல் வாக்கியம், படிப்போர் மனத்தைப் புதிதாய் ஓரிடத்திற்குக் கவர்ச்சியுடன் திருப்புகின்றது. இடை வாக்கியங்கள், அத்திருப்பப்பட்ட இடமாகிய தொல்காப்பியத்திற் கூறப்பட்டுள்ள சில செய்திகளைக் கூறுகின்றன. இறுதி வாக்கியம், அவற்

றைப் பற்றிய உரையாசிரியர் விளக்கக் கருத்தைக் கூறிப் பாகிக் கருத்தை அழகுபெற முடிக்கின்றது.

3. "தேள்கள் இரவில் இன்புற்று வாழ்ந்த வீட்டின் மேற்கூரையாகும் கல்லே மறுநாட்காலையில் புரட்டினால், அங்கே பெண் தேள் மட்டிலும் காணப்படும். ஒருவேளை ஆண் தேளின் காலோ கையோ அல்லது வேறு ஏதாவது உறுப்போ, துண்டுதுண்டாகக் காணப்படினும் காணப்படலாம். ஆண்தேள் ஆட்டியபடியெல்லாம் ஆடிக்கொண்டு ஒன்றும் செய்யாது சும்மாவிருந்த பெண்தேளானது, ஏதோ ஒரு குறிப்பிட்ட காலத்தில், மேல் நடக்கவேண்டிய வீட்டுக் காரியங்களையெல்லாம் புருஷத் துணையின்றித் தானே நடத்தவேண்டும் என்று தீர்மானித்துவிட்டது போல் தோன்றுகிறது. முதற்படியில், தன் புருஷனையே விடியற்காலைச் சிற்றுண்டியாகத் தயார் செய்து காலைப் போஜனத்தை முடித்துக்கொள்ளுகிறது. ஏதாவது எஞ்சியிருந்தால்தான், நாம் ஆண்தேளின் உடலின் சின்னங்களைச் சிலவேளைகளில் காண நேருகிறது. தன்னுடைய கையை இறுகப் பற்றியிருந்த ஆண்தேளைப் பெண்தேளானது எப்படித் தாக்கித் தோல்வியுறச் செய்து கொல்லுகிறது என்பது தெரியவில்லை. எனினும், மணம்புரிந்த மறுநாட்காலைக்குள், ஆண்தேள் பிணமாகிப் பெண் தேளுக்கு இரையாய் விடுகிறதென்பதில், சிறிதும் ஐயமேயில்லை. மண அறை பிண அறையாக மாறுகிறது. உலகத்தில் நடைபெறும் அற்புதங்களுள் இதுவும் ஒன்று."

பெ. நா. அப்புஸ்வாமி.

இது, ஆண்தேள் மணம்புரிந்தபின் அடையும் நிலைமையைப் பற்றியது. இதன் முதல் வாக்கியம், படிப்போர் மனத்தில் ஒரு சிறு கலக்கத்தையுண்டுபண்ணி அறிவேட்கையைக் கிளப்புகின்றது. இடைவாக்கியங்கள், நிகழ்ந்ததைச் சொல்லி அவ்வேட்கையைத் தணிக்கின்றன. இறுதி வாக்கியம், படிப்போர்க்கு இயல்பாய் எழும் வியப்புணர்ச்சியோடொத்த கூற்றாக நின்று, பாகிப்பொருளை உணர்ச்சியுற முடிக்கின்றது.

4. "எறும்பானது கிடையாத காலத்துக்கு உதவுமாறு, கிடைத்த காலத்தில் உணவிற்கு உரியவற்றைச் சேர்த்து வைத்துக்கொள்கின்றது. வெய்யிற்காலத்தில் பயிர் பச்சைகளுக்கு ஆகும்படி, மாரிகாலத்தில் ஏரிகுளங்களை நீர் நிரப்பிவைத்துக் கொள்ளுகிறோம். ஓடுகிற ஆறு ஓடிக்கொண்டே இராது. ஓடம் விட்ட ஆற்றிலும் அடிசுடும். ஆபத்தும் சம்பத்தும் ஆருக்கும் உண்டு. ஆகவே, மனிதனானவன் கார்காலத்தில் இன்புற்று வாழ்வதற்கு ஆவனவற்றைக் கோடைகாலத்தில் தானே தேடிவைத்துக் கொள்ளவும், இரவில் சுகமாக உண்டுறங்குவதற் கின்றியமையாதனவற்றைப் பகற்காலத்தில் தானே சம்பாதித்து வைத்துக்கொள்ளவும், முதுமைப் பருவத்தில் முட்டுப்பாடின்றி உண்டு உயிர்வாழ்வதற்கு வேண்டுமவைகளை இளமைப் பருவத்தில் தானே ஈட்டிவைத்துக்கொள்ளவும், முயற்சி செய்யக்கடவன். "பொருடனைப் போற்றிவாழ்."

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்."

வருமுன் காப்பவன் புத்தியை வந்தபின் காப்பவன் தள்ளினதுபோல், சிலர், என்ன சொன்னாலும் கேட்காமல், முன்பின் பாராமல், 'ஊதாரிக்குப் பொன் துரும்பு' என்றபடி, கையிற் கிடைத்த பொருளையெல்லாம் செலவழித்து விட்டு, எய்ப்பில் வைப்பின்றி இடர்ப்படுவர். பிணியினாலேனும் முதுமையினாலேனும் வேறு இடையூறுகளாலேனும், பொருள் தேடும் வழி இல்லாதபொழுது, ஒரு காசு கிடைப்பது குதிரைக் கொம்பாகிப் பெண்டிர் பிள்ளைகளோடு இடருறுவர்."

T. செல்வக்கேசவராய முதலியார்.

இது, வருங்காலத்திற்குத் தேடிவைத்துக் கொள்வதைப் பற்றியது. இதன் முதல் வாக்கியம், நாம் பின்பற்ற வேண்டிய ஓர் உயிரியின் (பிராணியின்) செயலைக் கூறு முகமாக, நம் கவனத்தை இழுக்கின்றது. இடைவாக்கியங்கள், பின்பற்றும் முறையை எடுத்துக்காட்டும் ஏதுவுங்

கொண்டு விளக்குகின்றன. இறுதி வாக்கியம், பின்பற்றா விடின் நேரும் இடர்ப்பாட்டைக் கூறி எச்சரிக்கின்றது.

## (ii) புறவொழுங்கைக் காட்டும் தொகுதிப் பாகிகள்

### போலிகை (மாதிரி) 1

"கடைச்சங்க காலத்திலே, அஃதாவது கி. பி. 300-க்கு முன்னே, சோழநாட்டின் துறைமுகப்பட்டின மாகவும் தலைநகரமாகவும் இருந்தது **காவிரிப்பூம்பட்டினம்**. குடிவளம் செழித்துப் பொருள்வளம் பெருகி நாகரிகத்தில் சிறந்து உலகமெங்கும் புகழ்பெற்று விளங்கிய காவிரிப்பூம் பட்டினம் **புகார்ப்பட்டினம்** என்றும், **புகார்** என்றும், **பூம்புகார்** என்றும் பெயர் பெற்றிருந்தது. காவிரியாறு கடலில் கூடுகிற இடமாகலின் இந்நகரம் புகார் என்றும் பூம்புகார் என்றும் பெயர் பெற்றது.

> "தேறுநீர்ப் புணரியொடு யாறுதலை மணக்கும்
> மலியோதத்து ஒலி கூடல்."

என்று இந்த இடத்தைப் பட்டினப்பாலை (97-98) கூறுகிறது. இதற்கு உரை கூறுகிற நச்சினார்க்கினியர், "தெளிந்தகடல் திரையோடே காவிரி தலைகலக்கும் ஓதத்தினால் ஒலிமலிந்த **புகார்முகம்**," என விளக்குகிறார். எனவே, காவிரியாறு கடலில் புகுகிற இடமாகலின், இதற்குப் புகார் என்று பெயர் வந்தது என்பது தெளிவாகிறது.

"காவிரிப்பூம்பட்டினத்தை டாலமி என்னும் யவன ஆசிரியர் **சபரிஸ்** (Chabaris) என்று கூறுகிறார். பெரிப்ளஸ் என்னும் கிரேக்க நூலாசிரியர் இந்நகரத்தைக் **கமர** (Kamara) என்கிறார். இந்த ஆசிரியர்கள் கி. பி. 2-ஆம் நூற்றாண்டுக்கு முன்பு இருந்தவர்கள். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்துக்கு வந்த சீனநாட்டுப் பௌத்தராகிய யுவாங் - சுவாங் என்பார், இந்நகரத்தைச் சரித்ரபுரம் என்று கூறுகிறார். பாலி மொழியில் எழுதப்

பட்ட பழைய பௌத்த நூல்களிலே காவிரிப்பூம்பட்டினம் **கவீரபட்டினம்** என்று கூறப்பட்டுள்ளது.

“கி. பி. 2-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே இந்த நகரம், கடல் கொந்தளிப்பினாலும் வெள்ளப்பெருக்கினாலும் பெருஞ்சேதத்திற்குள்ளாயிற்று. இவ்வெள்ளச் சேதத்திற்குப் பிறகு, மீண்டும் இந்நகரம் பெருமையுடனும் செல்வச் சிறப்புடனும் விளங்கிற்று. முற்காலத்திலே உலகம் போற்றும் பெருமை வாய்ந்திருந்த இப்பட்டினம், கி. பி. 15-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு பெருமை இழந்து நாளடைவில் வளம் குன்றி இப்போது சிறு குக்கிராமமாக இருக்கிறது. சங்க காலத்திலும் அதற்குப் பிற்பட்ட காலத்திலும், மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் உடையதாய், குடிவளம் பெருகிப் பொருள்வளம் செழித்து நாகரிகத்துக்கு உறைவிடமாக விளங்கிய காவிரிப்பூம்பட்டினம், இப்போது இருக்கும் இடம் தெரியாமல் குக்கிராமமாகி ஒதுக்குண்டிருக்கிறது. பண்டைக்காலத்திலே, இந்தப் பட்டினத்தில் சோழமன்னர்களும் பெருங்குடி மக்களும் பெருமையுடன் வாழ்ந்திருந்தார்கள். கடைச் சங்க காலத்திலே, கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலே இருந்த சிலப்பதிகாரக் காவியத் தலைவராகிய கோவலனும் கண்ணகியாரும் இந்தப் பட்டினத்திலே வாழ்ந்திருந்தார்கள். ஆடல்பாடல்களில் பேர்போன மாதவி என்னும் கலைச்செல்வி வாழ்ந்திருந்த இடமும் இப்பட்டினமே. மாதவியின் மகளும் மணிமேகலைக் காவியத்தின் தலைவியுமாகிய, மணிமேகலையார் பிறந்து வாழ்ந்த இடமும் இந்நகரமே. சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் இரு பெருங் காவியங்களின் தலைவர்கள் பிறந்து வாழ்ந்த காவிரிப்பூம்பட்டினம், சிறந்த நகரமாகத்தானே இருக்க வேண்டும்? ஆகவே, காவிரிப்பூம்பட்டினத்தின் பண்டைய சிறப்பை ஆராய்வோம். அஃதாவது, கி. பி. 300 ஆண்டுகட்கு முன்பு இருந்த பட்டினம் எவ்வாறு அமைந்திருந்தது, தரையமைப்பு (Plan) எவ்வாறிருந்தது, தெருக்களும் முக்கிய கட்டிடங்களும் கோயில்களும் பூங்

கோட்டங்களும் துறைமுகமும் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை ஆராய்ந்து பார்ப்போம். இந்த ஆராய்ச்சிக்குப் பேருதவியாயிருப்பவை சிலப்பதிகாரம், மணிமேகலை, பட்டினப்பாலை, புறநானூறு, அகநானூறு, நற்றிணை ஆகிய இந்நூல்களேயாம். இந்நூல்களின் துணைகொண்டு, புகார்ப்பட்டினம் எவ்வாறு அமைந்திருந்தது என்பதைக் காண்போம்.’’

மயிலை சீனி. வேங்கடசாமி

முப்பாகிகளுள்ள இப்பகுதியில், முதற்பாகி காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தமிழ்நாட்டில் வழங்கும் பெயர்களையும், இடைப்பாகி அதற்குப் பிறநாடுகளில் வழங்கும் பெயர்களையும், கடைப்பாகி அதன் பெருமைகளையும், எடுத்துக் கூறுகின்றன. இவை மூன்றும் எண் முறையில் பொருட்கோவைப்பட்டிருப்பதையும், இடைப்பாகி முன்னும் பின்னும் உள்ளவற்றோடு தொடர்புண்டிருப்பதையும், ஒவ்வொன்றும் அதனதன் பொருட்பரப்பிற் கேற்றவாறு வெவ்வேறளவினதாயிருப்பதையும் நோக்குக.

## போலிகை 2

“தமிழ்வளர்ச்சியிற் பேரார்வமுடைய பாண்டிய மன்னர்கள் **தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம்** என்னும் மூன்று சங்கங்களை நிறுவிக் கல்விப் பணிபுரிந்த காலம் **‘சங்ககாலம்’** என வழங்கப்பெறும். அக்காலப் பகுதி இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும். மக்கள் தங்கள் தாய்மொழி வழியாக எல்லாக் கலைகளையும் வளர்க்க எண்ணி, அரசியல் ஆதரவிற் புலவர் பேரவையைக் கூட்டி அறிவினைப் பரப்பும் முறை, நாகரிக வளர்ச்சிக்கு இன்றியமையாததாகும். இத்தகைய புலமைத் தொண்டினை, நம் தமிழ் முன்னோர்கள் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னரே மேற்கொண்டிருந்தார்கள். அவர்களால் போற்றப்பெற்று வளர்ந்த முச்சங்கங்களின் வரலாறு, இறையனார் களவியலுரையிலும், **சிலப்பதிகார அடியார்க்கு நல்லாருரையிலும்** விளக்கப்பெறுகின்றது.

"நுண்ணறிவுடைய புலவர் பலரும் தமக்குள் மாறுபாடில்லாமல் ஒருங்குகூடித் தமிழாராய்ந்த புலவர் பேரவையே சங்கம் என வழங்கப்பெறுவதாகும். இதனை முன்னுள்ளோர் 'கூடல்' என்ற பெயரால் வழங்கினார்கள். மாங்குடி மருதனார் என்னும் புலவர் பெருமான், பாண்டியர் நிறுவிய தமிழ்ச்சங்கத்தினை 'நல்லாசிரியர் புணர்கூட்டு' என்ற தொடரால் குறிப்பிடுகின்றார். திருஞானசம்பந்தப் பிள்ளையார், மதுரையில் தமிழ் வளர்த்த சங்கத்தினை 'மதுரைத்தொகை' என ஒரு திருப்பாடலில் குறிப்பிடுகின்றார் இத்தொடரில் வந்த 'தொகை' என்பது சங்கம் என்ற பொருளைத் தரும் தமிழ்ச் சொல்லாகும்.

"தமிழ்க் கல்விச் சங்கமாகிய பாண்டியன் அவையம், தொல்காப்பியம் அரங்கேறிய காலத்திற்கு (2,500 ஆண்டுகளுக்கு) முன் தொடங்கிக் கி. பி இரண்டாம நூற்றாண்டு முடிய, நெடுங்காலம் நிலைபெற்றுத் தமிழ்ப்பணி புரிந்து வந்தது. பாண்டியர்களால் நிறுவப்பெற்ற தமிழ்ச்சங்கத்தைப் போலவே, தமிழ்நாட்டிலுள்ள பேரூர்தோறும் தமிழ் வளர்க்கும் புலவர் பேரவைகள தமிழ்மக்களால் நிறுவப் பெற்றிருந்தன சங்க காலத்தில் எத்தனையோ தமிழ் நூல்கள் புலவர் பெருமக்களால இயற்றப்பட்டன அவற்றுட்பெரும்பாலான, கடல்கோளாலும் தமிழர்களின் விழிப்பின்மையாலும் அழிந்துபோயின. அவை போக, இப்போது எஞ்சியுள்ளன சிலவே. இடைச்சங்கத்தில் வாழ்ந்த ஆசிரியர் தொல்காப்பியனாரால் இயற்றப்பெற்ற இயற்றமிழ இலக்கணமாகிய தொல்காப்பியமும், கடைச் சங்கத்துச் சான்றோர்களால் தொகுக்கப்பெற்ற பத்துப் பாட்டு, எட்டுத்தொகை என்பனவும், திருக்குறள், சிலப்பதிகாரம் முதலியனவும், சங்க காலத்தில் இயற்றப் பெற்றனவாக இப்பொழுதுள்ள தமிழ் நூல்களாம். இந்நூல்களை ஆராயுங்கால் சங்ககாலத் தமிழகத்தின் பரப்பும், அரசியலமைதியும், நாகரிக வாழ்வும், நன்கு புலனாம். அவை ஈண்டு உரைக்கப்படும்."

வித்துவான் திரு. க. வெள்ளைவாரணர்.

இப்பகுதியில், முதற்பாகி பாண்டியர் வளர்த்த சங்கங்களைப் பற்றியும், இரண்டாம் பாகி அச்சங்கங்களைக் குறிக்கும் தமிழ்ப்பெயர்களைப் பற்றியும், மூன்றும் பாகி அச்சங்கங்களால் இயற்றப்பெற்ற நூல்களைப் பற்றியும் கூறுகின்றன. இவையும், முன்னவைபோலப் பொருளொழுங்குபட்டும் வெவ்வேறளவு கொண்டு மிருத்தல் காண்க.

இனி, ஒரு பொருள்பற்றி மூன்றுக்கு மேற்பட்டு வரும் பாகிகளின் தொடர்பொழுங்கு அளவு வேறுபாடு முதலிய இயல்புகளை, அறிஞர் கட்டுரைகளிற் கண்டு தெளிக.

### (iii) ஒற்றைப் பாகி வரைவு (The writing of Single Paragraphs)

இதுகாறும் ஓர் இயலின் அல்லது கட்டுரையின் பகுதிகளான பாகிகள் வரைவதைப்பற்றிப் பார்த்தோம். இனி, ஒரு பொருள்பற்றி ஒற்றைப் பாகி வரைதலும், மாணவர்க்கு, சிறப்பாகக் கீழ்வகுப்பு மாணவர்க்குத் தெரிந்திருத்தல்வேண்டும். ஒற்றைப் பாகி என்பது பொதுவாய்ச் சிறு பாகியாகும்.

ஒரு பொருள்பற்றி ஒரே சிறு பாகி வரையப்படின், அது முன்பின் தொடர்ச்சியற்றுக் தன்னில் தானே முற்றுப்பெறும் ஒரு சிற்றுக் கட்டுரையாகும். மேற்கூறிய பல பல்பாகிகட்குரிய நெறிமுறைகளுள், வகைப்பாடொழிந்த பிறவெல்லாம் இதற்கும் உரியவாகும். இது மிகக் குறுகியதாயும் பெரும்பாலும் சிறு மாணவர்க்குரியதாயுமிருத்தலின், சிற்று வாக்கியங்கொண்ட எளிய நடையிலேயே எழுதப்படுதல்வேண்டும். மேல்வகுப்பு மாணவர் தேர்விலெழுதும் விடைகள் ஒற்றைப் பாகியாயமையுமாயின், அவற்றைத் தமக்கியல்பான நடையில் எழுதலாம். ஒற்றைப் பாகியின் முதல் வாக்கியம், கருத்து வாக்கியமாகவோ முகவுரை வாக்கியமாகவோ இருக்கலாம்.

ஒரு தனிப்பட்ட நிகழ்ச்சியை அல்லது குணத்தை அல்லது கருத்தைப்பற்றி ஒற்றைப் பாகிவரையும்போது, வேண்டாத நுணுக்கங்களையும் சிறு புன்னிகழ்ச்சிகளையும் விட்டுவிடுதல்வேண்டும். உயிருள்ள அல்லது உயிரில்லாத ஒரு பொருளைப்பற்றி வரைய நேரின், அதன் பல இயல்புகளில் ஒன்றையே தெரிந்துகொண்டு அதனைப்பற்றி வரைதல்வேண்டும்.

பாகி மிக நீளாதவாறு, மேற்கோள்கள், அணிகள் வேண்டாச் சொற்கள் முதலியவற்றை விலக்குதல் நல்லது. ஒற்றைப் பாகியின் பேரெல்லை நாற்பக்கம் அல்லது 16 வரி எனலாம்.

1. எறும்பு

எ-டு. இந்தியராகிய நாம், மேனாட்டாரின் ஒழுங்கையும் கட்டொழுங்கையும் (Discipline) அடிக்கடி வியக்கின்றோம். ஆனால், மேனாட்டாரும் வியக்கத்தக்க ஒழுங்கும் கட்டொழுங்கும் ஓர் அஃறிணைச் சிற்றுயிரினிடத்தில் அமைந்துள்ளன. அது எறும்பு என்பது உங்கட்குச் சொல்லாமலே தெரியும். எறும்பிற் பலவகையுண்டு. அவற்றுள் எதை நோக்கினும், இவ்வொழுங்கையும் கட்டொழுங்கையும் காணலாம். எறும்புகள் அவ்வக் காலத்திற் செய்யவேண்டிய வினைகளை அவ்வக்காலத்தே செய்துமுடிக்கின்றன. எங்குச் சென்றாலும் வரிசையாகவும் நேராகவும் செல்கின்றன; நெருக்கடியான சமயங்களிற் பல வரிசையாகவும், மற்றச் சமயங்களில் ஒரு வரிசையாகவும் செல்கின்றன. ஒற்றரை ஏவி முன்னதாக நன்மை தீமைகளை அறிந்துகொள்கின்றன. வரிசையில் முன் செல்லும் தலைவன், ஒற்றர் வாயிலாய்த் தீமையறிந்தவுடன், மற்ற எறும்புகளை வந்த வழியே விலக்கித் தீதற்ற வழிக்குள் செல்லுமாறு ஏவித் தானும் திரும்புகின்றது. அத்தோடு எல்லா எறும்புகட்கும் விரைந்து செய்தி தெரியுமாறு, அறிவிப்பாளராகப் பல எறும்புகளை வரிசை நெடுக அனுப்புகின்றது. இத்தகைய செய்திகள், மேனாட்டார்க்கு வியப்பையும் நமக்கு வெட்கத்தையும் விளைப்பனவாகும்.

இவ்வொற்றைப் பாகியிற் கூறப்பட்ட எறும்பின் இயல்பு ஒழுங்கு என்பது வெளிப்படை.

**2. ஒரு புகைவண்டித் துன்ப நேர்ச்சி :**

எ - டு. மக்களின் பொதுப்படை யூர்திகள் எல்லாவற்றுள்ளும் புகைவண்டி மிகப் பாதுகாப்பானது என்பது, எல்லாருக்கும் நம்பிக்கை. ஆனால், அதிலும் சில சமையங்களில் எதிர்பாராத பெருந்துன்பங்கள் நேர்ந்துவிடுகின்றன. 1937-ஆம் ஆண்டில் பெருமழை பெய்து வெள்ளம் வந்த மாரிநாளொன்றில், மாலை நேரத்தில், மணப்பாறைக்குத் தெற்கேயுள்ள அய்யலூர் அருகில், திருச்சியிலிருந்து மதுரைக்குச் சென்றுகொண்டிருந்த புகைவண்டியின் இயந்திரம் திடுமென்று நிலத்திற்குள் பாய்ந்துவிட்டது. அதனால், அதனையடுத்துள்ள சில கூண்டுகள் (Carriages) அதே நொடியில் சின்னபின்னமாகச் சிதைந்துவிட்டன. அவற்றிலிருந்த வழிப்போக்கர் பெரும்பாலும் மாண்டு உருத்தெரியாமல் போயினர். பிற கூண்டுகளிலிருந்த சிலருக்கும் காயம் ஏற்பட்டது. இக்கோரக் காட்சியைக் கண்டவர் சிலர், நெடுநாள் மதிமயங்கியிருந்தனர். இத்தகைய துன்பங்கள் மீண்டும் நிகழாதவாறு, அடிக்கடி தண்டவாளங்களைக் கவனிப்பதுடன், மாரிநாளிலும் கலகக் காலத்திலும் சிறந்த பாதுகாப்பமைத்து, புகைவண்டி வலவனையும் (Driver) விழிப்பாயிருக்கச் செய்வது, இருப்புப்பாதை யதிகாரிகளின் கடமையாகும்.

**3. பொய்யாமை :**

எ - டு. பொய்யாமை என்பது பொய் சொல்லாமை. பொய் சொல்வது, உண்மையை மறைத்தலும் உண்மை சொல்ல மறுத்தலும் என இருவகைப்படும். மனிதனுக்குத் தன்னலமும மானவுணர்ச்சியும் துன்பங்கண்டு தளர்தலும உள்ளவரை, அவன் பொய் சொல்லாமலிருத்தல் முடியாது. சில சமையம், பொய்யால் நன்மையும் மெய்யால் தீமையும் விளைகின்றன. நன்மை விளைக்கும் பொய்யையும் மெய்யாகக் கருதவேண்டும். ஆகவே, பொய் சொல்லாதிருத்தல் அரிதென்பதும், ஒருவருக்கும் ஒரு தீங்கும் விளைக்காத சொல்லைச் சொல்வதே மெய் என்பதும் அறியப்படும்.

மேற்காட்டிய மூன்று எடுத்துக்காட்டுகளும், முற்கூறிய ஒற்றைப் பாகி விதிகட்கேற்ப அமைந்திருத்தல் காண்க. அவற்றுள், முதலிரண்டும் காட்சிப்பொருள் பற்றியன. அவற்றின் முதல் வாக்கியங்கள் முகவுரை வாக்கியங்களாகவுள்ளன. இறுதியது, கருத்து அல்லது

சிந்தனைப் பொருள் பற்றியது. அதன் முதல் வாக்கியம் பாகிக் கருத்து வாக்கியமாகவுள்ளது.

### பயிற்சி

கீழ்க்காணும் பொருள்களைப்பற்றி ஒற்றைப் பாகிகள் வரைக :—

(1) நாய். (2) பூனை. (3) ஆவு. (4) தெருத்துன்ப நேர்ச்சி. (5) நில நடுக்கம் (பூகம்பம்). (6) வெள்ளச் சேதம். (7) அன்பு. (8) பொறாமை. (9) சினம். (10) நட்பு. (11) நற்பழக்கம். (13) பன்மொழியிற் பேசல். (13) கடல். (14) மலை. (15) ஆறு.

## 3. கடிதவரைவு (Letter - Writing)

கடிதவரைவு முறையைச் சிலர் முக்கியமாகக் கருதுவதில்லை. வேலைப்பேற்றிற் கேதுவான விண்ணப்பமும் பரிந்துரையும், பேரூதியத்திற்கேதுவான வணிக எழுத்துப் போக்குவரத்தும், பெருநன்மைக்கேதுவான எழுதப்பட்ட முறையீடும் பிற வேண்டுகோளும், கடிதவகைகளே. ஆங்கிலம்போன்ற அயன்மொழியிற் கடிதம் வரையும் முறையை எவ்வளவு கருத்தாகக் கவனிக்கின்றோமோ, அவ்வளவு கருத்தாகத் தாய்மொழியாகிய தமிழில் வரையும் முறையையுங் கவனித்தல் வேண்டும்.

ஒருவகையில், கடிதம் என்பது எழுதப்படும் பேச்சே. ஒருவருக்கு முன்னிலையிலிருந்து திறமையாகவும் தெளிவாகவும் முறைமையாகவும் இனிமையாகவும் பேசுவதாற் பெறக்கூடிய பயன்களை, தொலைவிலிருந்து அங்ஙனம் எழுவதாலும் பெறுதல் கூடும். சொல்வன்மை, கன் மனத்தையும் கனியவைத்து ஆகாதகாரியங்களையும் ஆக்குவிக்கும். அங்ஙனமே எழுத்து வன்மையும்.

கடிதவரைவு சிலரால் ஒரு கம்மியமாகவும் (Art) வளர்க்கப்பெற்றுள்ளது. கி. மு. முதலாம் நூற்றாண்டில் சிசரோ என்னும் அறிஞர் வரைந்த இலத்தீன் கடிதங்கள், இன்று கற்றோர் உள்ளத்திற்கு இன்ப விருந்தாகவுள்ளன;

ஆதலால், இலக்கியம்போற் போற்றப்பட்டு வருகின்றன. கற்றோரெல்லாம் இத்தகைய கடிதம் வரையப் பயிலவும், முயலவும் வேண்டும்.

## 1. கடித வடிவம் - (The Form of Letters)

கடிதங்கள் பலவகைப்படும். ஒவ்வொரு வகைக்கும் ஒரு தனி வடிவுண்டு. ஆயினும், கடிதவுறுப்புக்கள் எல்லாவகைக்கும் பொதுவாம். அவை,

(1) தலைப்பு (Heading),
(2) கொளு,
(3) விளி (Greeting or Salutation),
(4) செய்தி (Communication or Message),
(5) உறவுத் தொடர்மொழி (Subscription or Leave-taking),
(6) கைந்நாட்டு (Signature),
(7) முகவரி (Address or Superscription on the envelope),

என ஏழு.

இவற்றுள், விளியும் உறவுத்தொடர்மொழியும், அவ்வக்கடிதவகைக் கேற்ற முறையில், சிற்சில மரபுச் சொல்லாகவும் சொற்றொடராகவும் அமைவன. பிறவுறுப்புக்கள், வெவ்வேறு சொற்களாலும் சொற்றொடர்களாலும் அமையினும், ஒவ்வொரு பொதுவாய்பாட்டை அல்லது முறையைத் தழுவினவை.

(1) தலைப்பு :

எவ்வகைப்பட்டதாயினும் ஒவ்வொரு கடிதத்திலும், அது எழுதப்பட்ட இடமுந் தேதியும் குறிக்கப்பட்டிருத்தல்வேண்டும். உறவும் நட்பும் வணிகமும் பற்றியெழுதும் கடிதங்களிலெல்லாம், முதற்பக்க வலப்புற மேண்

மூலையில், இடம் மேலும் தேதி கீழுமாக எழுதப்பட்டிருத்தல் வேண்டும். இங்கு இடம் என்றது பெயர் (இயற்பெயரும் பதவிப்பெயரும்) ஒழிந்த முகவரியை.

எ - டு.
117, தம்புசெட்டித் தெரு,
சென்னை,
23 ஏப்பிரல், 1943.

மாதத்தையும் எண்ணாற் குறிப்பிடுவதே பெருவழக்கு.

எ - டு.
21-4-1943.

ஆங்கிலத் தேதிக்குப் பதிலாகத் தமிழ்த் தேதியையுங் குறிப்பிடலாம்.

எ - டு.
௪ ஆவணி, விகாரி.
ஆவணி ௪, விகாரி.
விகாரி, ஆவணி ௪.
விகாரி ௵ ஆவணி ௴ ௪-ஆம் ௳

தொழின்முறைக் கடிதங்களிலெல்லாம் ஆங்கிலத் தேதியே குறிக்கப்பெறுதல் வேண்டும்.

ஆவணங்களில் இருவகைத் தேதியுங் குறிக்கப் பெறும்.

எ - டு.
விக்ருதி ௵ புரட்டாசி ௴ ௧௦-ஆம் ௳-க்குச் சரியான ஆங்கிலம் 1950-ஆம் ௵, செப்டெம்பர் ௴ 26-ஆம் ௳.
1950-ஆம் ௵ செப்டெம்பர் ௴ 26-ஆம் ௳-க்குச் சரியான தமிழ் விக்ருதி ௵ புரட்டாசி ௴ ௧௦-ஆம் ௳.

விண்ணப்பங்களிலும் முறையீடுகளிலும் நற்சான்றிதழ்களிலும் சிலவகை முறிகளிலும், இடதேதி, இறுதிப் பக்க இடப்புறக் கீழ் மூலையில்தான் குறிக்கப்பெறும். இங்கு இடம் என்பது ஊர்ப்பெயர் மட்டுமே.

எ - டு.
சேலம்,
8—2—'49.

கையெழுத்தாகவுள்ள பற்றுச்சீட்டுக்களில், இடம் செய்தித் துவக்கத்திற் கூறப்பட்டுவிடுமாதலால், தேதி மட்டும் இறுதியில் கைச்சாட்டின்கீழ்க் குறிக்கப் பெறுவதுண்டு.

எ - டு. பொன்னையாப் பிள்ளை,
3—17—48.

இடவாரியாகவும் காலவாரியாகவும் கடிதங்களைப் பிரித்தற்கும், குறித்தகாலத்திற்குள் விடை விடுத்தற்கும், கடிதம் விடுத்தோரின் முகவரி யறிதற்கும், இடமுந்தேதி வரைவு உதவுமாதலால், அவற்றைத் தவறாது குறித்தல் வேண்டும்.

(2) கோளு :

தலைப்பிற்குச் சற்றுக்கீழாக, இன்னாரிடமிருந்து இன்னாருக்குச் சென்றவது, இன்னார் இன்னாருக்கு எழுதுவது என்றாவது, செய்தி தொடங்கு முன் வரையப்பெறும் முகவுரை கோளுவாகும்.

எ - டு. திருநெல்வேலி மாவட்டத் தண்டலாளர் (Collector) அவர்கட்கு, பாளையங்கோட்டைத் திரு. யோவான் (St. John's) உயர்நிலைப்பள்ளி 6-ஆம் படிவ மாணவன் அருளப்பன் எழுதுவது (முறையிடுவது, விண்ணப்பித்துக் கொள்வது, தெரிவிப்பது) :—

சென்னை மாகாணக் கல்வியமைச்சராகிய நான், இம் மாகாணத் தமிழாசிரியர்க்கு அறிவிப்பது யாதெனின் (எனவெனின்) —

சோழன் குலோத்துங்கன் விடுக்கும் ஓலை (திருமுகம், ஆணை), செஞ்சிகைவரி அத்திமல்லன் வீராண்டனை எதிரிலிச்சோழச் சம்புவராயன் காணக —

அருமை மகன் சீராளனுக்கு உன் அன்புள்ள அன்னை எழுதுவது :—

உறவாடற் கடிதங்களிலும் வணிகக் கடிதங்களிலும் உள்ள கொளு, சுருக்கம்பற்றி, கடிதம விடுப்போரைக் குறியாது கடிதம் விடுக்கப்பெறுவோரைமட்டும குறிப்ப துண்டு.

எ - டு. அருமை அத்தான் அவர்கட்கு எழுதுவது :—
அருமைத் தம்பி ஆவிடையப்பனுக் கெழுதுவது :—
திருவாளர் திருவரங்கம் பிள்ளை அவர்கட்கு —

நண்பருக்கும் அறிமுகமாகாதவர்க்கும் எழுதும் உறவாடற்கடிதங்கள், பெரும்பாலும் கொளுவில்லாமலே அமையும்.

(3) விளி:

கொளுவிற்குக் கீழாக, இடப்புறத்தில், தனியாய், கடிதம் விடுக்கப்படுவோரை விளிப்பது விளியாகும்.

உறவினர்க்கெழுதும் கடிதங்களில் உறவின்முறைப் பெயரே விளிக்கப்பெறும். அது உயர்வு குறிப்பின் உயர்வுப்பன்மைப் பெயராகவும், உயர்வு குறியாவிடின் ஒருமைப் பெயராகவும், இருக்கும்.

| எ - டு. | உயர்வு விளி | உயர்வில் விளி |
|---|---|---|
| | தந்தையீர், | தந்தாய், |
| | அன்னையீர், | அன்னாய், |
| | மாமனாரே, | மாமா, |
| | தமையனாரே, | தமைய, |
| | தம்பியீர், | தம்பீ, |
| | தமக்கையீர், | தமக்காய், |
| | தங்கையீர், | தங்காய், |

'மாமனீர்' 'தமையனீர்' முதலிய வடிவங்கள் இலக்கணத்தோடிசையுமேனும், வழக்கின்மையின் உரைநடைக்கேலா.

அவர்கள் என்னும் சொல்லை இறுதியில் சேர்த்தும், உயர்வுகுறித்த உறவின்முறைப் பெயர்களை விளிக்கலாம்.

எ - டு. மாமனார் அவர்களே,

ஆர்வங்குறித்தற்கு உறவின் முறைப்பெயர் விளிகள் அடையடுத்தும் வரும.

| எ - டு. | உயர்வு விளி | உயர்வில் விளி |
|---|---|---|
| | அருமைத் தந்தையீர், | அருமைத் தந்தாய், |
| | என் அருமைத் தந்தையீர், | என் அருமைத் தந்தாய், |
| | எந்தையீர, | எந்தாய். |

பெற்றோர் இருவரையும் ஒருங்கே விளிக்கும்போது, என் அருமைப் பெற்றோர்காள் என்றாவது, என் அருமைத் தாய் தந்தையீர் என்றாவது, விளிக்கலாம்.

கவனிப்பு :—உறவினர்க்கு எழுதும் கடிதங்களில் கொண்டு வரையப்படின், விளி பெரும்பாலும் விடப்பெறும்.

நண்பரை விளிக்கும் முறை வருமாறு :—

| உயர்வு விளி | உயர்வில் விளி |
|---|---|
| நண்பரீர், | நண்ப, |
| அன்பரீர், | அன்ப, |
| காதலரீர் | காதல |
| காதலியீர், | காதலி, |

ஆர்வங் குறித்தற்கு, நண்பரீர் என்னும் விளி அடையடுத்தும் வரும்.

| | உயர்வு விளி | உயர்வில் விளி |
|---|---|---|
| எ - டு. | அருமை நண்பரீர், | அருமை நண்ப, |
| | என் அருமை நண்பரீர், | என் அருமை நண்ப, |
| | அரும்பெறல் நண்பரீர், | அரும்பெறல் நண்ப, |

ஒத்தோரும் இழிந்தோருமாயுள்ள நண்பரையுங் காதலரையும், நெருங்கிய பழக்கம்பற்றியும் நிலைமையின் தாழ்வுபற்றியும், பெயர்சுட்டியும் விளிக்கலாம்.

எ - டு. அருமைக் கண்ணப்ப,
என் அருமை அங்கயற்கண்ணி,

பெருங்காதல் குறிக்க வேண்டின், முறைப்பெயரையும் உறவுப்பெயரையும் இயற்பெயரையுங் குறியாது, சிறந்தவொரு பொருட்பெயரை உவமையாக அல்லது உவமையாகுபெயராகக்கொண்டு விளிக்கலாம்.

எ - டு. என் அருமைக் கண்மணி,
ஆருயிரனையாய், ஆருயிரனையீர்,

உறவினரல்லாத பெரியோரைக் கீழ்வருமாறு விளித்தல் வேண்டும்.

| | ஆண்பால் விளி | பெண்பால் விளி |
|---|---|---|
| ஒருமை: | ஐய, ஐயா, | அம்ம, அம்மா, அம்மையீர், |
| பன்மை: | ஐயன்மீர், | ஐயைமீர், அம்மைமீர், |

அம்மையீர் என்னும் விளி உயர்வுப் பன்மையாக மட்டும் வரும்.

மேற்காட்டிய விளிகள், ஆர்வமும் வணக்கமுங்குறித்தற்கு அடையடுத்தும் வரும்.

எ - டு. அருமந்த ஐய,
அன்பார்ந்த ஐயா,
அருந்தமிழ் ஐய,
அரும்பெறல் ஐய,
என் பேரன்பிற்குரிய ஐயா,
கனம் பொருந்திய ஐயா,
கனமுங் கண்ணியமும் பொருந்திய ஐயா,
மாண்பு மிக்க ஐய,
மாண்பும் மதிப்பும் வாய்ந்த ஐயா,

ஆசிரியரைப் பின்வருமாறு விளிக்கலாம்.
ஆசிரியீர், ஆசிரியப் பெரியீர், ஆசிரியப் பெருந்தகையீர்,
அன்பார்ந்த ஆசிரியீர்,
அரும்பெறல் ஆசிரியர்காள்,
பேரறிவு சான்ற பெரியீர்,
அறிவுச் சுடரான ஐய,

மதிப்புமிக்க பெரியோரையும் தலைவரையும் பின்வருமாறும் விளிக்கலாம்.

ஆண்பால். பெரும, பெரியோய், பெருமானே, எமபெருமானே, எம்பிரானே, தலைவ, பெரியீர், தலைவீர், பெருந்தகையீர்,

பெண்பால்: பெருமாட்டி, எம்பெருமாட்டி, எம்பிராட்டி, பிராட்டி, பிராட்டியீர், தலைவி, தலைவியீர்,

பெரியீர் பெருந்தகையீர் என்னும் விளிகள் இருபாற் பொதுவாம்.

ஆர்வமும் வணக்கமுங் குறித்தற்கு, மேற்காட்டிய விளிகளுடன் வேண்டிய அடைகளைச் சேர்த்துக் கொள்ள லாம்.

துறவியரைப் பின்வருமாறு விளித்தல் வேண்டும்.

அடிகாள்,
அன்பார்ந்த அடிகாள்,
பகவரீர்

வணிகக் கடித விளி பெரியோரை விளிக்கும் விளியே.

எ - டு. ஐயா, (ஒருமை)
ஐயன்மீர், (பன்மை)

4. செய்தி :

விளிக்குக் கீழாக வரையப்படுவது செய்தி. அதன் அளவும் பொருளும், அவ்வக் கடிதவகையையும் எழுது வோரின் கருத்தையும் பொறுத்தன.

எல்லாக் கடித வகைகட்கும் பொதுவாக, செய்தி யைப் பற்றிக் கவனிக்க வேண்டிய ஐந்து குறிப்புக்கள் உள. அவையாவன :—

(i) பகுப்பு :

செய்தி நீண்டதாயும் பல கருத்துப் பற்றியதாயு மிருப்பின், படிப்போர்க்கு எளிதாய் விளங்குமாறும், ஏரணத் தொடர்ச்சியான கருத்துவேறுபாடு தெரியுமாறும், பல பாகிகளாகப் பகுக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

(ii) நடைச்சிறப்பு :

பொதுவாகச் செய்தியை, எளிய இனிய தெளிவான சிறு வாக்கிய நடையில் எழுதவேண்டும். சட்டமுறைப் படி வரையப்படும் ஆவணங்களிலும், வணிகக் கடிதங்களி லும், அவ்வம் மரபான நடையே தழுவப்பெறல் வேண்டும். உறவினர்க்கும் நண்பர்க்கும் வரையுங் கடிதங்கள் பேச்சு நடையிலிருக்கலாம். ஆயின், இலக்கணப்பிழை யிருத்தல் கூடாது. கற்றோர்க்கு வரையுங் கடிதங்கள் எத்துணைச்

கடுநடையிலும் இருக்கலாம்; ஆயின், இரட்டுறலும் கவர்படு பொருண்மொழியும் இல்லாதிருத்தல் வேண்டும். பிறருக்குத் தெரியாத மரூஉ, இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக் குறி, சொற்குறுக்கம் முதலியவற்றையும் விலக்குதல் வேண்டும்.

(iii.) நிறைவு:

கடிதம் ஒரே முறையில் முடிவு பெற்றதாயும் முற்றுப் பெற்றதாயுமிருத்தல் வேண்டும். பின்வரைவாக (Post Script) அதே கடிதத்தில் வரைவதும், தொடர்ச்சி வரைவாக மறு கடிதம் வரைவதும், கடிதம் வரைவோரின் எண்ணமற் செய்யும் இயல்பையும் ஒழுங்கீனத்தையும் திறமையின்மையையுமே காட்டும்.

(iv) செவ்வை:

அடித்தடித்தும், கூட்டெழுத்தும் சங்கிலி யெழுத்துமாகவும், கிறுக்கியும், கோணல் மாணலாகவும், எழுதாமலும்; மை விழாமலும்: வெள்ளைத் தாளில், இயன்றவரை நேராகவும் நேர்த்தியாகவும் திருத்தி யெழுதுங் கடிதங்கள், பகைவர்க்கும் நல்லெண்ணமூட்டும்.

(v) திருத்தக் குறியீடு:

திருத்தக் குறியீடின்மையும் தவறான திருத்தக் குறியீடும், வாக்கியப்பொருளை மாற்றவும் படிப்பாரை மயங்க வைக்கவும் செய்யுமாதலால், அவ்விரண்டும் இல்லாதவாறு கவனித்தல்வேண்டும்.

5. உறவுத் தொடர்மொழி:

கடிதம் விடுக்கப்படுவோர்க்கும் விடுப்போர்க்கும் உள்ள உறவை அல்லது தொடர்பைக் குறிக்கும் தொடர் மொழி, உறவுத் தொடர்மொழியாகும். இது செய்திக்குக் கீழாக வலப்புறத்தில் வரையப்பெறும்.

உறவினர்க்கு எழுதும் கடிதங்களில், உறவுத் தொடர் மொழி கீழ்வருமாறு இருக்கலாம்.

உன் அன்பான உடன்பிறந்தான்,
உம் அன்பான மைத்துனன் (அளியன்),
தங்கள் அன்புங் கீழ்ப்படிதலுமுள்ள மகன்,

குறிப்பு:— கடிதம் விடுக்கப்படுவோர்க்கு உயர்வு கருதாதபோது 'உன்' 'உன்றன்' என்னும் சொற்களையும், சிறிது உயர்வு கருதியபோது 'உம்' 'உந்தம்' என்னும் சொற்களையும், மிகுந்த உயர்வு கருதியபோது 'தங்கள்' என்னும் சொல்லையும், உறவுத் தொடர்மொழியில் ஆளுதல் வேண்டும். இது எல்லாவகைக் கடிதங்கட்கும் ஒக்கும்.

நண்பருக்கு விடுக்கும் கடிதங்களில், உறவுத் தொடர் மொழி பின்வருமாறு இருக்கலாம்.

நண்பன்,
அன்பன்,
உன் அன்பான,
தங்கள் அன்பான,

சில நண்பர், தாம் வரையும் உறவுத்தொடர் மொழிகளில், ஏதேனுமொரு கருத்தை அல்லது விருப்பத்தைத் தெரிவிப்பதுமுண்டு.

எ - டு. தங்கள் முன்னேற்றத்தில் நன்னோக்கங் கொண்ட,
தங்கள் வரவைப் பெரிதும் விரும்பும்,
தங்கள் வெற்றியைக் கருதும்,
தங்கள் மறுமொழியை ஆவலுடன் எதிர்பார்க்கும்,
என்றும் தங்கள் நலத்தையே கோரும்,
தங்கள் நன்றியை ஒருபோதும் மறவாத,

அறிமுகமாகாதவர்க்கு விடுக்கும் கடிதங்களில், உறவுத் தொடர்மொழி 'இங்ஙனம்' என்று மட்டும் இருக்கலாம்; 'உன் உதவியை எதிர்பார்க்கும்,' 'தங்கள் நட்பை நாடும்' என்பன போன்ற கருத்துத் தெரிவிக்கும் தொடர் மொழியாகவுமிருக்கலாம்.

வேலையிலும் அலுவலிலும் தலைவராயிருப்பவர்க்கு விடுக்கும் கடிதங்களில், உறவுத் தொடர்மொழி பின்வருமாறு இருக்கலாம்.

தங்கள் உண்மையுள்ள,
தங்கள் உண்மையும் கீழ்ப்படிதலுமுள்ள,
தங்கள் உண்மையுங் கீழ்ப்படிதலும்
நன்றி யறிவுமுள்ள,

துறவியர்க்கு எல்லாரும் ஆண்டானுக்கு அடியானும் வரையும் கடிதங்களில், உறவுத் தொடர்மொழி 'அடியேன்' என்றிருத்தல் வேண்டும். இங்குத் துறவியர் என்றது பட்டினத்தடிகளும் தாயுமானவரும் இராமலிங்க அடிகளும் மறைமலையடிகளும் விபுலாநந்த அடிகளும் போல்வாரையேயன்றி, காவி புனைந்திரக்கும் கல்லாதவரை யன்று.

குறிப்பு :— உறவுத் தொடர்மொழிக்கு முன், அதற்கு மேலாக, 'இப்படிக்கு' அல்லது 'இங்ஙனம்' என்னும சொல்லைச் சேர்த்தெழுதுவது இக்கால வழக்கமன்று. நூன்முகவுரையிறுதியில், ஆசிரியன் கைந்நாட்டிற்கு மேல் 'இங்ஙனம்' என்றெழுதுவதும் இக்காலத்தில்லை. மேற் குறித்தவாறு, அறிமுகமில்லாதவர்க்கெழுதும் கடிதங்களில் மட்டும் அதைத் தனித்து வரையலாம்.

**6. கைந்நாட்டு :**

உறவுத் தொடர்மொழிக்குக் கீழாக, அதினினுஞ் சற்று வலமாக, கடிதம் விடுப்போரின் பெயர் தந்தை பெயரின் முதலெழுத்துடன் தெளிவாக வரையப்படுதல் வேண்டும். அறிமுகமாகாதவர்க்கு எழுதுங் கடிதங்களில், அது மிகத் தெளிவாக இருத்தல் வேண்டும். பெண்பாலார் தம் பெண்மை குறிக்கவேண்டின், பெண் அல்லது பெண் பால் என்னும் சொல்லைப் பெயர்க்கு வலமாகப் பிறைக் கோட்டிற்குள் குறிக்கலாம்.

**7. முகவரி :**

கடித வுறையின் பின்புறத்தில் அல்லது மடித்த கடிதத்தின் பின்புறத்தில், கடிதம் விடுக்கப்படுவோரின்

முழு முகவரியும் தெளிவாய் வரையப்படுதல் வேண்டும். அஞ்சற் கடிதமாயினும் ஆள்வாயிலாய் விடுக்குங் கடிதமாயினும், வலப்புற மேன்மூலையில் முத்திரையொட்டற்குரிய இடம் விட்டுவிட்டு, அதற்குக் கீழாக முகவரியின் முதல்வரியை இடக்கோடி யொட்டித் தொடங்கி, அதற்கடுத்த வரிகளையெல்லாம் முறையே சற்று வலமாகத் தள்ளித் தள்ளித் தொடங்கி, இறுதி வரியின் முடிவு வலக்கோடி யொட்டுமாறு, வரைதல்வேண்டும்.

முதல்வரியில் அடைமொழியும் பெயரும் பட்டமும், முறையே குறிக்கப்படல் வேண்டும். இரண்டாம் வரியில் வேலையும் மூன்றும் வரியில் வேலைசெய்யும் கட்டிடமும் நாலாம் வரியில் தெருப்பெயரும் ஐந்தாம் வரியில் ஊர்ப்பெயரும் குறிக்கப்பெறல் வேண்டும் கடிதம் வீட்டு முகவரிக்கு விடுக்கப்படின், இரண்டாம் வரியில் வீட்டெண்ணும் தெருப்பெயரும் மூன்றும் வரியில் ஊர்ப்பெயரும் குறிக்கப்படல் வேண்டும். வேலைசெய்யும் கட்டிடம் அல்லது இருப்பிடம் எல்லார்க்கும் மிக நன்றாய்த் தெரிந்திருப்பினும், தெருப்பெயரைக் குறிப்பது நன்றே.

கடிதம் விடுக்கப்படுவோரின் ஊரும் விடுப்போரின் ஊரும் ஒரே மாகாணத்தைச் சேர்ந்தனவாயின், ஊர்ப்பெயருக்கு அடுத்த வரியில் கூற்றக (தாலுகா)ப் பெயரும், அதற்கடுத்த (அதாவது இறுதி) வரியில் கோட்டக (மாவட்ட)ப் பெயரும், குறிக்கப்படல் வேண்டும். கடிதம் சேரவேண்டிய ஊரில் அஞ்சல் நிலையம் (Post Office) இல்லாவிடின், ஊர்ப்பெயருக்கு அடுத்த வரியில், அவ்வூருக்குரிய அஞ்சல் நிலையம் குறிக்கப்படல் வேண்டும். கடிதம் பெறுவோரின் ஊர் ஒரு கூற்றகத் தலைநகரா யிருக்குமாயின், கூற்றகப்பெயர் குறிக்கப்பட வேண்டியதில்லை. அது ஒரு மாவட்டத் தலைநகராயும் மாகாணத் தலைநகராயு மிருக்குமாயின், கூற்றகப் பெயரும் மாவட்டப்பெயரும் குறிக்கப்பட வேண்டியதில்லை. அது ஒரு பெரு நகரமாயிருப்பினும், அவை தேவையில்லை. முக

வரியிற் குறிக்கப்படுவது பெருநகரச் சிறு தெருவாயின், அதனோடு அது உள்ள நகரப் பகுதியையும் குறித்தல் வேண்டும்.

கடிதம் போகவேண்டிய ஊருக்குப் பலவழியிருந்து அவற்றுள் குறுக்குவழி அல்லது அண்ணிய (சமீப) வழி அஞ்சற்காரனுக்குத் தெரியாதென்று கருத இடமிருப்பின், ஊர்ப்பெயருக்கு அல்லது அஞ்சல்நிலையப் பெயருக்கு அடுத்தவரியில் இன்னவூர்வழி என்பதைக் குறிப்பிடலாம்.

கடிதம் சேரவேண்டியவூர், அடுத்த மாகாணத்தைச் சேர்ந்ததாயின் அம் மாகாணப்பெயரும், தொலைவிலுள்ள மாகாணத்தைச் சேர்ந்ததாயின் அம்மாகாணப் பெயருடன் நாட்டுப் பகுதியின் பெயரும், அயல்நாட்டைச் சேர்ந்ததாயின் அவற்றுடன் அவ் அயல்நாட்டுப் பெயரும், இறுதியில் குறிக்கப்படல்வேண்டும். ஒவ்வோர் இடப்பெயரும் ஒரு தனிவரியிலிருத்தல் வேண்டும் என்பதை மறத்தல் கூடாது (தமிழ்நாட்டு அயல் மாகாணமும் அயல் நாடும் தமிழ்த்திரிநிலமும் மொழிபெயர் தேயமுமாதலின். அங்குள்ளார்க்குத் தெரியுமாறு அங்கத்து ஊர்கட்கு விடுக்குங் கடிதங்களிலெல்லாம், இன்று உலகப் பொதுமொழியாய் வழங்கிவரும் ஆங்கிலத்திலேயே முகவரி யெழுதப்படல் வேண்டும்.)

ஒரு வரியில் எழுதவேண்டியதற்குப் போதிய இடமில்லையாயின், அதன் எஞ்சிய பகுதியை அதற்குக் கீழாக வலக்கோடியொட்டி எழுதவேண்டும். முகவரியின் முதல் வரியில் குறிக்கப்படும் அடைமொழிகள் பின்வருமாறு இருக்கலாம்.

மதிப்புள்ள நண்பரான ஒத்த தரத்தினர்க்கு திருவாளர் (ஆண்பால்), திருவாட்டியார் (பெண்பால்) என்னும் அடையும்; உயர்ந்த தரத்தினர்க்குத் திருமான், திருமானார் (ஆண்பால்), திருமாட்டியார் (பெண்பால்) என்னும் அடையும்; அமைச்சர்கட்கும் அரசியல் மதிப்புப்பெற்ற அதிகாரிகட்கும் மதிதகு (Honourable) மிக மதிதகு

(Right Honourable) என்னும் அடைகளும்; கிறித்தவக் குருமார்க்குக் கனம் (Reverend), பெருங்கனம் அல்லது மகாகனம் (Right Reverend) என்னும் அடைகளும்; துறவியர்க்குத் திரு, மறைதிரு, திருமிகுதிரு, தெய்வத் திரு என்னும் அடைகளும் சேர்க்கப்படலாம். கிறித்தவரல்லாத மதக்குருமார்க்கு, கிறித்தவக் குருமார்க்கும் துறவியர்க்கும் குறிக்கப்பெற்ற அடைகளில் ஏற்றவற்றை வைத்தெழுதலாம்.

பொதுநல வூழியம்பற்றி அரசியலார் அளித்துள்ள இராவ்சாகிபு, திவான்பகதூர் முதலிய சிறப்புப் பட்டங்களும்; கல்வித் தேர்ச்சிபற்றி அரசியலாரும் அறிஞர் அவைகளும் அளித்துள்ள, வித்துவான், பண்டிதமணி, மகாமகோபாத்தியாயர், டாக்டர் முதலிய புலமைப் பட்டங்களும்: முன்னடைமொழிகளாகச் சேர்க்கப்படவேண்டியவையே. ஆயின், இவற்றைக் குறிக்கும்போது, முற்கூறிய திருவாளர் முதலிய பொது அடைமொழிகளைக் குறித்தல் கூடாது.

ஊரும் குலமும் உடைமையும்பற்றிச் சிலர் தாமாகத் தம் பெயர்க்குமுன் சேர்த்துக்கொள்ளும் அடைமொழிகளும் உள.

எ - டு. மயிலைச் சிவமுத்து
துடிசைகிழார் அ. சிதம்பரனார்

இவற்றுள் ஊர்ப்பெயருக்குமுன் பொது அடைமொழி வரும்; பிறபெயர்க்குமுன் அதுவரத்தேவையில்லை.

எ - டு திருவாளர் மயிலைச்சிவமுத்து
இளசைகிழார் ச. சோமசுந்தர பாரதியார்

போதிய இடமிருப்பின், அடைகள் பல்கியும் வரலாம்.

எ - டு. பேராசிரியர் இளசைகிழார் ச. சோமசுந்தர பாரதியார்.
மகாமகோபாத்தியாய தாட்சிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர்.

இயற்பெயருக்குப் பின் குலப்பட்டப் பெயரும் தேர்வுப் பட்டப்பெயரும் குறிக்கப் பெறலாம்.

உயர்தரக் கட்டுரை இலக்கணம்

- டு. கா. சுப்பிரமணியப் பிள்ளை, எம். ஏ., எம். எல்.

மதிப்பானவரின் பெயர்க்குப்பின், அவர்கள் என்னும் பின்னடை, குலப்பட்டத்திற்கும் தேர்வுப் பட்டத்திற்கும் இடையில் சேர்க்கப்பெறும்.

அதிகாரிகட்கும் தலைவர்க்கும் விடுக்கும் கடிதங்களாயின், இயற்பெயர் குறியாது பதவிப்பெயர் குறிப்பினும் போதும்.

பதிவுசெய்யப்பெறுங் கடிதங்களாயின், மேற்கூறிய வாறு கடிதம் விடுக்கப்படுவோரின் முகவரிமட்டுமன்றி, அதற்குகீழாக இடப்புற மூலையில், கடிதம் விடுப்போரின் முகவரியும குறிக்கப்பெறல்வேண்டும. இது, பதிவுசெய்யப்பெறாத கடிதங்கட்கு வேண்டாததாயினும், அவற்றிலும் அதைஎழுதுவது நல்லதே. இதனால், கடிதவுறையைத் திறக்குமுன்னரே, அதை விடுத்தோர யாரென அறிந்து கொளளலாம. இதனால் சில நன்மையுண்டு.

எடுத்துக்காட்டுக்கள் :—

(பதிவு செய்யப்பெறாதது)

அஞ்சல் தலை

வித்துவான் ஆறுமுக முதலியார் அவர்கள்,

எம்.ஏ., பி.ஓ.எல்., எல்.டி.,

தமிழ்ப் பேராசிரியர்,

ஆசிரியர் கல்லூரி,

சைதாப்பேட்டை, சென்னை.

(பதிவு செய்யப்பெறாதது)

அஞ்சல் தலை

திருவாளர் மாணிக்கவேல் செட்டியார் அவர்கள்,

12, கந்தப் பொடிக்காரத் தெரு,

ஆம்பூர்,

(வடார்க்காட்டு மாவட்டம்.)

விடுப்போன் :

பொன்னையா,

6, பாண்டித்துரைத் தெரு,

செவ்வாய்ப்பேட்டை, சேலம்.

(பதிவு செய்யப்பெற்றது)

அஞ்சல் தலை

கனம் செல்லப்பா அவர்கள், பி.ஏ., பி.எட்.,

தலைவர்,

திருப்பவுல் உயர்நிலைப்பள்ளி,

வேப்பேரி, சென்னை.

விடுப்போன் :

துரையரங்கன்,

6, புத்தூர்ப் பெருஞ்சாலை,

புத்தூர், திருச்சி.

மடிக்கப்பட்ட கடிதம்.

| |
|---|
| திரு. ஆலாலசுந்தரஞ் செட்டியார் அவர்கள், எம்.ஏ., |
| 'சிவனகம்' |
| அகரம் சாலை, |
| தாம்பரம், சென்னை. |

இங்ஙனம் ஏழுறுப்புக்களும் நிரம்பியதே முழுக்கடிதமாகும். அவ் ஏழனுள்ளும், விளியும் செய்தியும் உறவுத் தொடர்மொழியும் சிறப்பாயமையின், மிகக் கவர்ச்சியையுண்டுபண்ணும் என்பதை அறிதல்வேண்டும்.

கடித வகைகள்—(Classification of Letters)

கடிதங்கள்,

(1) உறவாடற் கடிதங்கள் (Social Letters),

(2) தொழின்முறைக் கடிதங்கள் (Business Letters), என இருவகைப்படும்

உறவினர்க்கும் நண்பர்க்கும் அன்புசெய்யப்பட்டோர்க்கும் உறவாடல்பற்றி விடுக்குங் கடிதங்கள் உறவாடற் கடிதங்களாகும். வேலை விண்ணப்பம் வணிகக்கடிதம் முதலியன தொழின்முறைக் கடிதங்களாம்.

## 1. உறவாடற் கடிதங்கள்

### (1) உறவுக் கடிதம் (Letters to Relatives)

போலிகை (மாதிரி)

[உணவு விடுதியிலுள்ள மாணவன் ஒருவன் தன் பெற்றோர்க்கெழுதுவது.]

நகராண்மை விடுதி,
சேரிச்சாலை (Cherry Road),
குமாரசாமிப்பட்டி, சேலம்,
10—9—'50.

என் அருமைத் தாய்தந்தையீர்,

இறைவனருளால் நான் நலமாயிருக்கின்றேன். அங் ஙனம் தங்கள் நலத்தையும் அறிய அவா.

சென்றவாரம் நான் விடுத்த கடிதம் சேர்ந்திருக்கு மென்று நினைக்கிறேன்.

எங்கட்கு நாளைக் காலாண்டுத் தேர்வு தொடங்குகின் றது. இம்மாதம் 16-ஆம் தேதி அது முடியும். அதற்கு அடுத்த நாளிலிருந்து 16 நாள் எங்கட்குத் தசரா விடு முறை.

தேர்விற்கு நன்றாய்ப் படித்திருக்கின்றேன். நன்றாய் எழுதுவேனென்று நம்புகின்றேன்.

நான் இம்மாதம் 16-ஆம் தேதி மாலையே புறப்பட்டு 17-ஆம் தேதி காலை அங்கு வந்துசேர்வேன். தம்பி தங்கை யர்க்கு என் வரவைப்பற்றித் தெரிவியுங்கள். வழிச்செல வுக்குக் கொஞ்சம் பணமும் அனுப்பிவையுங்கள்.

தங்கள் அன்புங் கீழ்ப்படிதலுமுள்ள
மகன்,
ந. மறைக்காடன்.

## பயிற்சி

கீழ்க்குறிப்பிட்டவாறு கடிதம் வரைக :—

(1) உணவு விடுதியிலுள்ள மாணவன் ஒருவன், அடுத்த விடுமுறைக்குத் தன் அம்மான்வீடு செல்வதாகத் தன் தந்தைக்கு வரைவது.

(2) ஒரு தம்பி பிறந்ததைப்பற்றித் தங்கை வேற்றூ ரில் கல்விபயிலும் தமையனுக்கு வரைவது.

(3) விடுதிப்பள்ளியிற் பயிலும் மகள் சரியாய்ப் படியாமையை அவள் தேர்ச்சியறிக்கையால் (Progress Report) அறிந்த தந்தை, அவளைக் கடிந்தெழுதுவது.

(4) அதற்கு அவள் மறுமொழி.

(5) பொங்கல் நன்கொடை விடுத்த பெரிய தந்தையார்க்கு நன்றிகூறி வரைவது.

(6) விடுதி மாணவன் ஒருவன், தனக்கு விருப்பமில்லாத பாடத்தை விருப்பப்பாடமாக ஏற்றுக்கொண்டதற்குக் காரணங்காட்டித் தந்தைக்கு வரைவது.

(7) அன்னையாரின் நோயைப்பற்றிக் கடிதவாயிலாய் அறிந்த விடுதிப்பள்ளி மாணவி, தந்தைக்கெழுதுவது.

(8) தம்பி தான் பயிலும் பள்ளியின் அல்லது கல்லூரியின் வெள்ளிவிழாக் கொண்டாட்டத்தைப்பற்றித் தமையனுக்கு வரைவது.

## (ii) நட்புக் கடிதம் (Friendly Letters)

### போலிகை

[ஒரு மாணவன் தன் பள்ளிக்கும் வேறொரு பள்ளிக்கும் நடந்த காற்பந்துப் பந்தயத்தைப்பற்றித் தன் நண்பனுக்கு வரைவது.]

6, வேளாளத் தெரு,
மன்னார்குடி,
8—2—'49.

அருமை நண்ப,

நலம். உன் நலத்தை இன்று உன் கடிதத்தால் அறிந்துகொண்டேன்.

நேற்றுமாலை, எங்கள் பள்ளிக்கும் இவ்வூரிலுள்ள தேசிய உயர்நிலைப் பள்ளிக்கும் ஒரு காற்பந்துப் பந்தயம் நடந்தது. அது முதலிலிருந்து முடிவுவரை உணர்ச்சி மிக்க நிகழ்ச்சியாயிருந்தது.

முதலாவது, எங்கள் கல்விச்சாலைக் கட்சியார் விளையாட்டுநிலத்தின் கீழைப்புறத்திலும், எதிர்க் கட்சியார் மேலைப்புறத்திலும், நின்று விளையாடினார்கள். காற்று மிக

வேகமாகக் கிழக்கு நோக்கி யடித்துக் கொண்டிருந்தது. இது எதிர்க் கட்சிக்குச் சார்பாகவும் எங்கள் கட்சிக்கு மாறாகவு மிருந்ததினால், எதிர்க் கட்சியார் மிக விரைவில் கோல் போடத் தொடங்கி, அரைமணி நேரத்திற்குள் ஆறு கோல் போட்டுவிட்டார்கள். எங்கள் கட்சியார் கோல் வாங்கினார்களே யொழிய, ஒன்றுகூடப் போடமுடியவில்லை.

பின்பு, அரைவேளை வந்தது. பிற்பாதியில், காற்றடிக்கும் பக்கத்திற்கு எதிர்க் கட்சியார் போனபின், எங்கள் கட்சியார் கடனையுங் கழித்து மேற்கொண்டும் கோல் போடுவார்கள் என எண்ணி, ஐந்து நிமையம் ஒருவாறு மகிழ்ந்திருந்தோம்.

ஆயின், மீண்டும் விளையாட்டுத் தொடங்கியவுடன், காற்று நின்றுவிட்டது. அப்போதே எங்கட்குக் கலக்கம் பிறந்துவிட்டது. அதோடு, பத்து நிமையங் கழித்து, 'பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும்' என்னும் பழமொழிப்படி, எங்கள் கட்சித் தலைவனும் தேர்ச்சி பெற்ற காற்பந்தாடகனுமாகிய ஆளவந்தான், அண்மையில் கடுநோய்ப்பட்டுத் தெளிந்தவனாதலால், திடுமென்று மயங்கிக் கீழே விழுந்துவிட்டான். அன்றே எங்கள் அரை நம்பிக்கையும் போய்விட்டது. அவனுக்குப் பதிலியாக (Substitute) வந்த வெற்றிவேலோ, நேற்றுவரை எந்தப் பந்தயத்திலும் விளையாடினதுமில்லை; விளையாடத்தக்கவன் என்று கருதப்பட்டதுமில்லை. நேரம் கால்மணிதான் இருந்தது. எங்கட்கு ஏக்கம முன்னினும பன்மடங்கு மிகுந்துவிட்டது. ஆயினும், காரிருளில் பளீர் என ஒளி வீசும் மின்னல்போல், ஒரு நிமையத்திற்குள் வெற்றிவேல் ஒரு கோல் போட்டான். எங்கள் முகத்தில் சிறிது களை தோன்றிற்று. அதன்பின் அடுத்த நிமையத்தில் இன்னொன்று போட்டான். எங்கட்குக் கலக்கம் முற்றுந்தீரவில்லையாயினும், எங்கள் நம்பிக்கை எழத் தொடங்கிற்று. பின்பு, வெற்றிவேல மிகவூக்கங்கொண்டு மின்னல் வேகத்தில் விளையாடி, எதிர்க்கட்சியார் மருள்கொண்டவர்போல்

மனந்தடுமாறவும், கண்டாரெல்லாம் இடைவிடாது ஆர வாரித்துக் கைதட்டவும், எதிர்க் கட்சிக் கோல்காப்போன் பந்தை எற்ற எற்ற உடனுடன் திருப்பியெற்றி, பத்து நிமையத்திற்குள் நாலுகோல் போட்டது, மந்திரமோ மாயமோ என்று எண்ணுதற்கிடமாயிருந்தது.

இந்த ஆட்டத்தை நீ பார்க்கவில்லையே என்பதுதான் என் வருத்தம். இங்ஙனம் ஆறுகோல் போட்டுக் கடனை முற்றுங் கழித்துவிட்டது மட்டுமா? விளையாட்டு முடிவதற்கு ஒரு நொடியிருந்தபோது, மீண்டுமொரு கோல் போட்டுத் தன்பெயரை மெய்ப்பித்துவிட்டான் வெற்றி வேல். எங்கட்குண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ஊராரெல்லாம் விளையாட்டு முடிந்தவுடன் ஓடிவந்து வெற்றிவேலைச் சூழ்ந்துகொண்டு, நீண்டநேரம் நெஞ்சாரப் புகழ்ந்து வாயார வாழ்த்தினர். சிலர் அவன் வீடுவரை அவனைத் தொடர்ந்து சென்றனர். இன்று இவ்வூரெல்லாம் அவனைப்பற்றித்தான பேச்சு.

இது உனக்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் விளைக்கு மென்று கருதுகின்றேன்.

பிற பின்.

நண்பன்,

**ஆடவல்லான்.**

## பயிற்சி

கீழ்க்குறித்தவாறு கடிதம் வரைக :—

(1) ஒரு மாணவன், தான் புதிதாய்ச் சேர்ந்துள்ள பள்ளியின் அல்லது கல்லூரியின் சிறப்பைப் பற்றித் தன் நண்பனுக்கு வரைவது.

(2) ஒரு மாணவன், தான் தேர்வெழுதவிருக்கும் மையத்தில் (Centre), தனக்கு வேண்டிய வசதி செய்து வைக்கும்படி, தன் நண்பனுக்கெழுதுவது.

(3) ஒரு கல்விநிலையத்தில் பிந்திச் சேர்ந்த மாணவ னொருவன், தனக்குக் கிடைக்காத புத்தகமொன்றைச் சில மாதங்கட்கு இரவல் தருமபடி, ஒரு நண்பனைக் கேட்பது.

(4) ஒரு மாணவி தனக்கு மிக இன்பமூட்டிய ஒரு புத்தகத்தைப் பற்றித் தன் நண்பிக்கெழுதுவது.

(5) ஒரு மாணவன் தன் நண்பனைத் தசரா விடு முறைக்குக் குற்றாலத்திற்கு வருமாறு அழைப்பது.

(6) ஓர் ஊருக்குப் பந்தயமாடச் செல்லும் மாணவ னொருவன், அங்குள்ள நண்பனுக்கு அதைப்பற்றித் தெரி விப்பது

(7) நோய்ப்பட்டிருக்கும் நண்பனுக்கு ஆறுதலாக வரைவது.

(8) தேர்வில் தவறிய நண்பனுக்குத் தேறுதல்மொழி கூறுவது.

## (iii) அழைப்பிதழ் (Notes of Invitation)

### போலிகை 1.

(ஒரு மாணவன் தன் தம்பி திருமணத்திற்கு விடுக்கும் அழைப்பிதழ்)

**திருமண அழைப்பிதழ்**

ஐய/அம்ம,

இறைவன் திருவருளை முன்னிட்டு, நிகழும் வள்ளுவ ராண்டு 1981 ஆனிமீ 22-ஆம் (20-6-1950) வியாழன் காலை 6 மணி முதல் 8 மணிக்குள், கடக ஓரையில், இவ் வூர்ப் பொய்யாமொழித் தெருவில் 21-ஆம் எண்ணுள்ள என் இல்லத்தில், என் தம்பி நீடுவாழி சீராளனுக்கும் கண்ணமங்கலம் பண்ணையார் கழறிற்றறிவாரின் இளைய மகள் நிறைசெல்வி கயற்கண்ணிக்கும், பெரியோர் உறுதி செய்தபடி, திருமணம் நிகழப்போவதால், தாங்கள் தம

ருடன் முன்னதாக வந்திருந்து திருமணத்தைச் சிறப்பிப்பதுடன் மணமக்களையும் வாழ்த்தியருளுமாறு, பன்முறை வேண்டுகிறேன்.

பூங்குன்றம். } இங்ஙனம்,
ஆனி 16, உருத்திரோற்காரி. } மகர நெடுங்குழைக்காதன்.

போலிகை 2.

(ஒரு மாணவன் தன் தங்கை திருமணத்திற்கு விடுக்கும் அழைப்பிதழ்.)

**வாழ்க்கை ஒப்பந்த அழைப்பிதழ்**

ஐயரீர் / அம்மையீர்,

நிகழும் வள்ளுவராண்டு 1981 மார்கழிமீ 25-ஆம் உ (9—1—1951) செவ்வாய் காலை 8-மணிக்கு, என் தங்கை திருவாட்டி குயில்மொழியாளும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரிக் கணித விரிவுரையாளர் திருவாளர் கண்டறிவாரும், ஈரோட்டுக் காவிரிக்கரைத் தெருவில் 19-ஆம் எண் வீட்டில் செய்துகொள்ளும் வாழ்க்கை ஒப்பந்தத்திற்கு, தாங்கள் உற்றார் உறவினருடன் வந்திருந்து அப்புது வாழ்க்கையரை வாழ்த்தியருளுமாறு, பணிவாய்க் கேட்டுக் கொள்கின்றேன்.

கோடிக்கரை, } இங்ஙனம்,
9—1—1951. } சீர்திருத்த நம்பி.

போலிகை 3.

(ஒரு மாணவன் தன் வாழ்க்கை ஒப்பந்தத்திற்கு விடுக்கும் அழைப்பிதழ்.)

**வாழ்க்கை ஒப்பந்த அழைப்பிதழ்**

அன்பரீர்,

நிகழும் வள்ளுவராண்டு 1982 ஆவணிமீ 20-ஆம் உ (5—7—1951) புதன் காலை 8-மணிக்கு, இவ்வூர் எழுத்துக்காரத் தெருவில் 22-ஆம் எண்ணுள்ள என் இல்லத்தில்,

யானும் என் அம்மானார் மகள் பூம்பாவையும் செய்து கொள்ளும் வாழ்க்கை ஒப்பந்தத்திற்குத் தாங்கள் வந்திருந்து எங்களை வாழ்த்தியருளுமாறு, வேண்டிக்கொள்கின்றேன்.

மயிலாடுதுறை,
28—6—51.

தனிநாயகம்.

## போலிகை 4.

### உண்டாட்டு அழைப்பிதழ்

(மறைமலையடிகள் நாகபட்டினம் சென்றிருந்தபோது ஒரு மாணவன அவர்க்கு நடத்திய பாராட்டு விருந்திற் கலந்துகொள்ளுமாறு, நண்பர்க்கும் பெருமக்கட்கும் விடுத்த அழைப்பிதழ்.)

**மறைமலையடிகள் பாராட்டு விருந்து அழைப்பிதழ்**

ஐயன்மீர், ஐயைமீர்,

தென்மொழி வடமொழி ஆங்கிலம் ஆகிய மும்மொழியிலக்கியமும் முறைமையாகப் பயின்ற மூதறிஞரும், நம்நாட்டவர் உய்யும்பொருட்டு அரைநூற்றுக்கு மேற்பட்ட பல்துறை அரும் பேரறிவுக் கலன்களைப் புனைந்தளித்த வள்ளலும், தமிழ்த்தாயின் தனிப்பெருந் தவப்புதல்வரும், ஆகிய பல்லவபுரம் பொதுநிலைக் கழகத் தலைவர் தெய்வத்திரு மறைமலையடிகள் இந்நகருக்கு வந்தருளியதன் பயனாக, இந்நகரார் பெற்ற பெருந்திருமைப் பேற்றைக் கொண்டாடுதற் பொருட்டு, நக்கீரர் தெருவிலுள்ள வள்ளுவர் மன்ற மண்டபத்தில், நாளை (7-8-1944) மாலை 5-மணிக்கு நடைபெறும் உண்டாட்டிற்குத் தாங்கள் தவறாது வந்திருந்து அடிகளாரின் அறிவுரையைக் கேட்டின்புறுமாறு, தங்களை ஆர்வமுடன் வேண்டுகின்றேன்.

நாகை,
6—8—'44.

தண்டமிழ்த்தொண்டன்,
நம்பியாண்டான்.

போலிகை 5.

**மனைபுகுவிழா அழைப்பிதழ்**

ஐய,

இவ்வூர்க் கீழைத்தேர்வீதிக் கோடியில், யான் கட்டியுள்ள 'இன்னகம்' என்னும் என் புதுமனையின் புகவு விழா, வருகிற புதன் (4-5-'49) நடைபெற விருப்பதால், அவ்விழாவில் தாங்கள் கலந்துகொள்ளுமாறு தங்களை அன்புடன் வேண்டிக்கொள்கின்றேன்.

திருவீழிமிழலை, } 1—5—'49. }

இளமுருகன்.

**பயிற்சி**

கீழ்க்குறித்தவாறு அழைப்பிதழ் வரைக :—

1. ஒரு மாணவன், தான் பயிலும் கல்விநிலையத்தில் தன்னை மாணவர் இலக்கியக் கழகச் செயலாளராகத் தேர்ந்தெடுத்தமைபற்றி, தன் நண்பரை ஒரு சிற்றுண்டிக்கு வரவழைப்பது.

2. ஒரு மாணவன், தான் கற்கும் பள்ளியில் சொற்பொழிவாற்ற வரும் ஒரு பேராசிரியர்க்கு அளிக்கும் விருந்திற் கலந்துகொள்ளுமாறு, ஆசிரியரையும் மாணவத் தோழரையும் அழைப்பது.

3. ஒரு பெருஞ்செல்வ மாணவன், தன் மாளிகையில் தானாக அமைத்த பொருட்காட்சிக் கூடத்தைக் கண்டு களிக்குமாறு, தன் நண்பரை அழைப்பது.

## (iv) பாராட்டுக் கடிதம் (Congratulatory Letters)

போலிகை

(ஓர் அனைத்திந்தியக் கட்டுரைப் போட்டியில் முதற் பரிசு ஐயாயிரம் வெண்பொற்காசு பெற்ற மாணவனை, நண்பன் பாராட்டி வரைவது.)

6, சேரமான் தெரு,
பெரும்பற்றப்புலியூர்,
14—8—1947.

அருமந்த நண்ப,

நீ அனைத்திந்தியக் கட்டுரைப் போட்டியில், ஐயாயிரம் உருபா பரிசும் 'அருங்கலைவாணன்' என்னும் பட்டமும் பெற்றதாக, இற்றைச் செய்தித்தாட்கள் எல்லாவற்றிலும் கண்டு, பன்முறை படித்து மகிழ்ந்தேன். உன் திறமை இன்றுதான் உலகிற்கு வெளியாயிற்று. உன் ஓயா உழைப்பையும் உலையாக் கடைப்பிடியையும் உளமாரப் பாராட்டுகின்றேன்.

உன் பெற்றோரும் நீ பிறந்தநாடும் உன் உற்றாரும் மற்ற நண்பரும், உன்னால் பெருமை பெற்றனர். இத்தகைய அரிய கட்டுரை இன்னும் பல உலகிற்கு வழங்குமாறு, எல்லாம் வல்ல இறைவன் உனக்கு நீண்ட வாழ்நாளும் நிறைந்த உடனலமும் அருள்வானாக.

என்றும் உன் முன்னேற்றத்தை விரும்பும்

நண்பன்,

இளையபெருமாள்.

**பயிற்சி**

கீழ்க் குறித்தவாறு பாராட்டுக்கடிதம் வரைக:—

(1) அரசியல் தேர்வில் (அல்லது பல்கலைக் கழகத் தேர்வில்) மாகாணத்தில் முதன்மையாய்த் தேறின மாணவனுக்கு, நண்பன் வரைவது.

(2) தன் செல்வத்திற் பெரும்பகுதியை ஏழை மாணவர் இலவச விடுதிக்களித்த நண்பனுக்கு ஒரு மாணவன் வரைவது.

## (v) வாழ்த்துக் கடிதம் (Benedictory Letters)

### போலிகை 1.

[ஒரு மாணவன் தன் நண்பனது பிறந்த நாளன்று அவனை வாழ்த்தி வரைவது.]

12, கூலக் கடைத்தெரு,
திருநெல்வேலி, 1—11—50.

அன்ப,

நீ நாளை உன் பிறந்தநாளைக் கொண்டாடுவதறிந்து பெருமகிழ்ச்சி கொண்டேன்.

இறைவன் திருவருளும் ஏனையோர் நல்லெண்ணமும் வாய்க்கப்பெற்று, நீ இன்னும் எத்தனையோ பிறந்த நாளைக் காணுமாறு நீடூழி நிலவுலகில் வாழ்ந்திருக்க.

இஃதுடன் விடுத்துள்ள 'பார்க்கர்,' ஊற்றிறகியை (Fountain Pen), உன் பிறந்தநாட் பரிசாகப் பெற்றுக் கொள்க.

நண்பன்,
செந்தில்வேலன்.

போலிகை 2.

[ஒரு மாணவன் தன் நண்பனுக்கு விடுக்கும் திருமண வாழ்த்து.]

இயற்கைக் கேற்பவும் இறைவன் ஏற்பாட்டின்படியும் இல்லறம் என்னும் நல்லறம் புகுந்த நண்பரீர்,

நீர் இன்றே உண்மையான உலக வாழ்க்கை தொடங்கி, நீரும் உம் மனைவியாரும் நீங்காத வாழ்க்கைக் கூட்டாளியராயினீர். ஒருயிரும் ஈருடலும்போல ஒன்றிய காதலராய், இன்பத்திலும் துன்பத்திலும் வாழ்விலும் தாழ்விலும் ஒரு நிலைப்பட்ட உள்ளத்தினராய்,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

என வள்ளுவர் வகுத்த வாழ்க்கையினராய், அறிவுடை மக்களைப் பெற்று அளவில்காலம் இன்புற்று வாழ்ந்திருப்பீராக.

இஃதுடன் விடுத்துள்ள மறைமலையடிகள் நூற்றொகுதியை, உம் திருமணப் பரிசாகப் பெற்றுக்கொள்க.

மணலூர், }
10-9-'48. }

நண்பன்,
மணக்கால்நம்பி.

## போலிகை 3.

(இதுவுமது)

### அழகநம்பி - அலர்மேல் மங்கையார் திருமண வாழ்த்து

இறைவன் வகுத்த இயற்கை நெறிப்படி மாண்பு மிக்க மனையறம் புகுந்த மணமக்காள்,

நீங்களிருவரும், அன்றிலுக்கொப்பாய் அகலாதிருந்து, அன்பினுக்களவையாய் அகமுறக் கலந்து, இந்திரவின்பத்தை இம்மையில் நுகர்க.

உற்றார் மகிழவும் மற்றோர் புகழவும், குன்றா வளமுங் குலையா நலமுங்கொண்டு, காவிரி மணலினுங் கழிபல நாள் நீங்கள் வாழ்ந்திருக்க.

உங்கள் மரபு, அத்திபோல் தளிர்த்து அரசுபோல் ஓங்கி ஆல்போற் படர்ந்து அறுகுபோல் வேரூன்றி, மூங்கில்போல் என்றும் முசியாமல் வாழ்ந்திருக்க.

திருவிடைமருதூர்,
6—5—'49.

அன்பன்,
இன்பநாயகம்.

## போலிகை 4.

(இதுவுமது)

### மதியழகன் - மங்கையர்க்கரசியார் திருமண வாழ்த்து

இல்லறம் என்னும் இணைவாழ்க்கை புகுந்த துணைவர்காள்,

நீங்களிருவரும், உலகம் என்னும் பூங்காவில் இன்பம் என்னும் தேனை நுகரும் வண்டுகள்; காதல் என்னுஞ் சகடத்தை வாழ்க்கை யென்னுங் கரட்டுப்பாதையில் இழுத்துச்செல்லும் இளங்காளைகள்.

உங்கள் இல்வாழ்க்கை, ஈகை விருந்தோம்பல் வேளாண்மை முதலிய அறங்களால் இல்லற வாழ்க்கையாகுக.

பால் புளித்தாலும் பகலிருண்டாலும் உலகங் குலைந்தாலும் உயர்ந்தோர் தவறினாலும், நீங்கள் நிலை பிறழாது நீடுழி வாழ்ந்திருக்க.

பூம்பாறை,
9—10—1958.

நண்பன்,
வல்லாளன்.

பயிற்சி

கீழ்க் குறித்தவாறு வாழ்த்துக் கடிதம் வரைக:—

(1) புதுமனை புகும் நண்பனை வாழ்த்தி வரைவது.

(2) இங்கிலாந்திற்கு மேற்படிப்புக்காகச் செல்லும் நண்பனுக்கு வாழ்த்து.

## 2. தொழின்முறைக் கடிதங்கள்

### (i) அலுவற் கடிதம் (Official Letters)

போலிகை

[ஒரு புத்தகசாலையில் பாதிநேரம் வேலை செய்யும் கல்லூரி மாணவர் ஒருவர் அப் புத்தகசாலை முதலாளிக்கு வரைவது.]

(தங்கல்) காஞ்சிபுரம்,
8—10—'48.

அன்பார்ந்த ஐய,

வணக்கம்.

இன்று நான் இங்குள்ள எண்டர்சன் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியரைப் பார்த்தேன். அவர், சங்க நூல்கள் ஒரு தொகுதியும், 'புறநானூற்றுக் கட்டுரைகள்' 'வடக்குந் தெற்கும்' 'மறைமலையடிகள்' 'பாணர் கைவழி' என்ற நான்கு நூல்களில் அவ்வாறு படியும், நூல்நிலையத்திற்கு வாங்கிக்கொள்வதாகச் சொன்னார். ஆணை வந்தவுடன் அவற்றைக் கட்டிப் பேற்றஞ்சலில் (V. P. P.) விடுத்துவிடுக.

நாளைச் செங்கற்பட்டு மாவட்ட நாட்டாண்மைக் கழகப் பாடப் புத்தகக்குழு கூடப்போகின்றதாம். உடனே அங்குச் சென்று, நம் புத்தகங்களைப் பாடமாக வைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்துவிட்டு, இரண்டொரு நாளுக்குள் திரும்பிவிடுகின்றேன். கல்லூரி திறக்க இன்னும் ஒரு மாதமிருப்பதால், சென்ற மாதம் விட்டுப் போன கணக்குகளையெல்லாம் நான் வந்தபின் முடித்து விடுகின்றேன்.

தங்கள்

தாழ்மையும் கீழ்ப்படிதலுமுள்ள ஊழியன்,

அப்பாத்துரை.

## பயிற்சி

கீழ்க் குறித்தவாறு அலுவன்முறைக் கடிதம் வரைக:—

(1) ஒரு குழும்பில் (கம்பெனியில்) பாதிநேரம் வேலைசெய்யும் மாணவர் ஒருவர், அக் குழும்பிற்காக வாங்கச்சென்ற சரக்குகளைப்பற்றித் தெரிவிப்பது

(2) ஓர் அலுவலகக் கணக்கர், குறித்த நேரத்தில் வேலை முடியாமைபற்றித் தமமீது கூறப்பட்ட குற்றச்சாட்டிற்குப் பதில் விடுப்பது.

(3) ஒரு தொழிற்சாலையிற் செய்யப்படும் பொருள்களை விலைப்படுத்தற்குவேண்டிய ஆணைகள் வாங்கச்சென்ற வழிப்போகு முகவர் (Travelling Agent), தம முதலாளிக்கு வரைவது

(4) ஒரு செய்தித்தாட்கு விளம்பரம் தொகுக்கச் சென்ற மாணவர், அத்தாளாசிரியர்க்கு வரைவது.

(5) ஒரு கல்விநிலைய மாணவர் இலக்கியக் கழகச் செயலாளர், ஓர் அறிஞரைச் சொற்பொழிவாற்ற வருமாறு வேண்டுவது.

(ii) **வணிகக் கடிதம்** (Business Letters)

போலிகை

(ஒரு மாணவன் ஒரு புத்தகம் தருவிப்பது)

6, மாணவர் விடுதி,
அண்ணுமலைநகர், 20—2—'50.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக கழகத்தார்க்கு:—

ஐயன்மீர்,

தாங்கள் அண்மையில் வெளியிட்டுள்ள 'பாணர் கைவழி' என்னும் இசைத்தமிழ் ஆராய்ச்சி நூலில் அட்டைக்கட்டு 1 படியும், துணிக்கட்டு 1 படியும், மேற்குறித்த முகவரிக்குக் கட்டிப் பேற்றஞ்சலில் (V. P. P.) விடுக்க.

பல படிகள் வாங்கின், எவ்வளவு கழிவு தரப்படும் என்பதையும் தெரிவிக்க.

இனியன்.

பயிற்சி

கீழ்க்குறித்தவாறு வணிகக்கடிதம் வரைக:—

(1) ஒரு கல்விநிலைய மாணவர் கூட்டுறவுக் கழகப் புத்தகசாலைச் செயலாளர், சில புத்தகங்களை அனுப்புமாறு ஒரு வெளியீட்டாளர்க்கு வரைவது.

(2) ஒரு மாணவர் தவணைக்கட்டண (Instalment Payment) ஏற்பாட்டில் தனக்கொரு மிதிவண்டி (Cycle) அனுப்புமாறு, ஒரு குழும்பிற்கு வரைவது.

(iii) **விடுமுறைக் கடிதம்** (Leave Letters)

போலிகை

(ஒரு மாணவன் தனக்கு நோய்விடுமுறை யளிக்குமாறு தன் ஆசிரியர்க்கு வரைவது)

27, பெரியஎழுத்துக்காரத் தெரு,
செவ்வாய்ப்பேட்டை, சேலம்,
3—9—'39.

கனம்பொருந்திய ஐய,

எனக்கு நேற்று மாலையிலிருந்து கடுங்காய்ச்சலாதலால், அன்புசெய்து மூன்றுநாளுக்கு விடுமுறையளிக்குமாறு வேண்டுகின்றேன்.

தங்களின் கீழ்ப்படிதலுள்ள
மாணவன்,
**செங்கோட்டுவேலன்.**

## பயிற்சி

கீழ்க்குறித்தவாறு விடுமுறைக் கடிதம் வரைக :—

(1) ஒரு மாணவன் தன் தமையனாரின் திருமணத்திற்கு விடுமுறை வேண்டுவது.

(2) ஒரு மாணவன் தன் பெற்றோருடன் ஊருக்குப் போதற்கு விடுமுறை வேண்டுவது.

(3) ஒரு மாணவன் தனக்கு வீட்டில் ஒரு முக்கியமான வேலையிருப்பதுபற்றி விடுமுறை வேண்டுவது.

## (iv) செய்தித்தாட் கடிதம் (Letters to Newspapers)

### போலிகை

16, புத்தூர்ப்பெருஞ்சாலை,
திருச்சி, 18—8—'50.

'தன்னாட்டு நண்பன்' ஆசிரியர்க்கு :—

ஐயா,

இப்போதிருக்கும் பங்கீட்டுமுறையில் பல பெரு நன்மைகளிருப்பினும், அதிலுள்ள இரு சிறு குறைகளையும் ஈங்கு எடுத்துக்காட்ட விரும்புகின்றேன்.

ஒன்று அரிசி பற்றியது. இந்நாட்டு வெப்பநிலைக்குப் பச்சரிசி ஏற்காதென்று கண்டு, தமிழர் தொன்றுதொட்டுப் புழுங்கலரிசியே உண்டுவந்திருக்கின்றனர். புழுங்கலரிசி வேண்டியவர்க்குப் பங்கீட்டுச்சீட்டில் புழுங்கலரிசியென்று

குறிக்கப்பட்டிருப்பினும், அது சிலபோது அவர்க்குக் கிடைப்பதில்லை. நெல்லைப் பச்சையாய்க் குத்துவதற்குப் பதிலாக அவித்துக் குத்திவிட்டால், புழுங்கலரிசி எவ்வளவு வேண்டுமாயினும் பெற்றுக்கொள்ளலாம்.

இன்னொன்று ஆடை பற்றியது. ஆலைத்துணி, கற்றோர்க்கும் அலுவலாளர்க்கும் தேவையாயிருக்குமளவு கல்லார்க்கும் கூலிக்காரருக்கும் தேவையாயில்லை. கடைகட்கு வரும் ஆலைத்துணியே குறைவு. அதையும், தெருவில் ஆட்களை வரிசையாய் நிற்கவைத்துச் கொடுப்பதால், தேவையுள்ளவர்க்குக் கிடைக்காமல் தேவையில்லாதவர்க்கே பெரும்பாலும் கிடைக்கின்றது நம் நாடு நூற்றுக்குத் தொண்ணூறு எழுதப்படிக்கத் தெரியாத நாடு. ஆதலால், நூற்றுக்குத் தொண்ணூறு எழுதப்படிக்கத் தெரிந்த மேனாட்டு வரிசைமுறை நம் நாட்டிற்கு ஏற்காது. மதிப்பும் மானமுமுள்ள கற்றோர் அவையில்லாத கல்லாதாருடன் நடுத்தெருவில் நிற்பது கூடாத காரியமாதலின், ஆலைத்துணியை ஆங்காங்குள்ள அலுவலகங்கட்கும் கல்விநிலையங்கட்கும வேண்டிய அளவு பகுத்துக் கொடுத்துவிட்டு, கூலிவேலைக்காரருக்கு உரமுள்ள கைத்தறித் துணியைக் கொடுப்பதே, நம் நாட்டிற்கேற்ற முறையாகும்.

நன்மாறன்.

## பயிற்சி

கீழ்க்குறித்தவாறு செய்தித்தாட் கடிதம் வரைக:—

(1) புகை வண்டிகளில் மூன்றாம் வகுப்புக் கூண்டுகளிலுள்ள குறைபாடுகளைத் தெரிவிப்பது.

(2) இரவில் அக்கம்பக்கத்தார் தூக்கங்கெடுமாறு, வானொலிப் பெட்டியை விடியவிடிய இயக்குவாரை, அரசியலார் கவனித்துத் தண்டிக்கும்பொருட்டு, வரைவது.

(3) பொதுவான அறநிலையங்களில் நடக்கும் ஊரவஞ்சகச் செயல்களைக் கண்டிப்பது.

(4) போக்குவரவிற்குரிய வசதிகளில்லா விடத்து அவற்றை ஏற்படுத்துமாறு அரசியலாரை வேண்டுவது.

(5) பொதுமக்களின கல்விபற்றி அரசியலார் கையாளவேண்டிய சிறந்த முறைகளைத் தெரிவிப்பது.

(6) பிறப்பை அடிப்படையாகக் கொண்ட குலப் பிரிவின் தீமைகளை எடுத்துரைப்பது.

(7) இந்தியரின் ஒற்றுமைக்கான வழிகளைத் தெரிவிப்பது.

(8) நல்ல முறையில், அரசியல் வருவாய்க்கேற்ற புதுவழிகளை வகுத்துக் காட்டுவது.

(9) ஒரு கல்விநிலைய ஆண்டுவிழாக் கொண்டாட்டத் தைப்பற்றி வரைவது.

## (v) விண்ணப்பக் கடிதம் (Letters of Application)

### போலிகை

(கல்லூரி மாணவர் ஒருவர் ஓர் உயர்நிலைப்பள்ளி மேலாளருக்கு விடுக்கும் வேலை விண்ணப்பம்)

திருவையாற்று அரசர் கல்லூரி மாணவன் திருமலையப்பன், சேலம் மாவட்டம் வேலூர்க் கண்டர் உயர்நிலைப் பள்ளி மேலாளருக்கு, விடுக்கும் விண்ணப்பம் :—

ஐய,

தங்கள் பள்ளிக்கு ஒரு தமிழாசிரியர் தேவையென்று இம்மாதம் 17-ஆம் ௳ 'இந்து'வில் தாங்கள் செய்துள்ள விளம்பரங்கண்டு, இவ்விண்ணப்பத்தை விடுக்கின்றேன்.

நான் இக்கல்லூரியில் 'புலவன்' இறுதி வகுப்பு மாணவன். அடுத்தவாரம் 'வித்துவான்' தேர்வு எழுது வேன். தேறிவிடுவேன் என்ற முழுநம்பிக்கையுண்டு. நான் இக்கல்லூரியில் சேருமுன், திருச்சிப் பீமநகர் நகராண்மை

மேல்நிலைத் துவக்கப் பள்ளியில் (Higher Elementary School), ஓராண்டு ஆசிரியவேலை பார்த்திருக்கின்றேன்.

நான் தமிழன். என் மதம் சிவநெறி. என் அகவை (வயது) 24.

நற்சான்றிதழ்கள் இதனுடன் வைக்கப்பெற்றுள.

எனக்கு வேலை கிடைப்பின், உண்மையாகவும் திறமையாகவும் என் கடமைகளை நிறைவேற்றுவேன் என்று உறுதி கூறுகின்றேன்.

திருவையாறு,
20—3—'45

தங்கள் கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,
திருமலையப்பன்.

பயிற்சி

கீழ்க்குறித்தவாறு விண்ணப்பக் கடிதம் வரைக :—

(1) ஒரு மாணவர் தமக்குப் பாதிநேரவேலை யளிக்கும்படி, ஒரு குடும்பத் தலைவரை வேண்டுவது.

(2) பள்ளியிறுதி (S.S L.C.) தேறிக் கையச்சு (Type-writing)ப் பயின்ற ஒருவர், இருப்புப்பாதையில் ஒரு கணக்கர் வேலைக்கு விண்ணப்பிப்பது.

### (vi) முறையீட்டுக் கடிதம் (Written Complaint)

போலிகை

ஆம்பூர் வளையற்காரத் தெரு 17-ஆம் எண் வீட்டில் குடியிருக்கும் இளையபெருமாள், ஆம்பூர் ஊர்காவல் துணை உண்ணோட்டர் (Sub-Inspector of Police) அவர்கட்கு எழுதுவது :—

ஐயா,

நேற்று மாலை 7 மணிக்குப் புகைவண்டி நிலையம் சென்று திரும்பி, மீண்டும் ஓரிடத்திற்குப் போகவேண்டியிருந்ததால், என் மிதிவண்டியை எங்கள் வீட்டு வெளிமுற்

றத்தில் வைத்துவிட்டு உள்ளே வந்து தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தேன். அதற்குள், யாரோ ஒருவன் என் மிதிவண்டியை எடுத்துக்கொண்டு ஓடிப் போய்விட்டான். நேற்றிரவெல்லாம் பலவிடங்கட்குச் சென்று தேடியும் பலரை வினவியும் பார்த்தேன். ஒருவகையிலும் துப்புத் துலங்கவில்லை.

அன்பு செய்து அதைக் கண்டுபிடித்துத் தருவீர்களாயின், பெரிதும் நன்றி பாராட்டுவேன்.

என் மிதிவண்டியின் பெயர் எர்க்குலிசு அதன் எண் 18096. அதை இவ்வூர்ச் சின்னையன் மிதிவண்டிக் கடையில் 13—11—'46-இல் வாங்கினேன்.

இங்ஙனம்,
இளங்கண்ணன்,
12—10—'48.

## பயிற்சி

(1) ஒருவன் தான் குடியிருக்கும் வீட்டைவிட்டு வெளியேறச் சொல்லும் வீட்டுக்காரரைப் பற்றி, துணைத் தண்டலாளர்க்கு (Deputy Collector)த் தெரிவிப்பது.

(2) இரவுதோறும் குடித்துவிட்டுவந்து தெருப்பூசல் செய்யும் ஒரு குடிகாரனைப்பற்றி, ஊர்காவல் அதிகாரிக்குத் தெரிவிப்பது

(3) தெருச்சாக்கடை சரியாய் மூடப்படாதது காரணமாக நேரும் கொசுக்கடியைப்பற்றி, உடல்நல அதிகாரிக்குத் தெரிவிப்பது.

(4) அஞ்சற்காரன் ஒழுங்காய் வந்து கடிதங் கொடுக்காததை, அஞ்சல் தலைவர்க்குத் தெரிவிப்பது.

(5) பாற்பண்ணை வேலைக்காரன் தண்ணீர்ப்பால் ஊற்றுவதுபற்றி, பண்ணைத் தலைவர்க்குத் தெரிவிப்பது.

(6) ஒருவன், தன்னைக் கொன்று விடுவதாக அச்சுறுத்தியிருக்கும் தன் பகைவரைப்பற்றி, தண்டலாளர்க்குத் தெரிவித்துப் பாதுகாப்பு வேண்டுவது.

(7) பங்கீட்டுக் கடைக்காரன் செய்யும் முறைகேட்டைப் பங்கீட்டதிகாரிக்குத் தெரிவிப்பது.

(8) கள்ளவிலையில் கொள்ளையடிக்கும் கடைக்காரனைப்பற்றி, அதிகாரிகட்குத் தெரிவிப்பது.

(vii) **பரிந்துரைக் கடிதம்** (Recommendatory Letters)

போலிகை

(ஒருவர் தம் நண்பருக்கு வேலை தரும்படி, ஒரு படப்பிடிப்பக முதலாளிக்கு வரைவது.)

68, அரியநாயக முதலியார் தெரு,
**இராயவேலூர்,**
15—3—'49.

அன்பார்ந்த ஐய,

இக்கடிதம் கொண்டுவரும் திருவாளர் சிற்றரசு என் நெருங்கிய நண்பர். இவர் பள்ளியிறுதி வரை கல்வி பயின்றவர்; ஆங்கிலம் தமிழ் தெலுங்கு ஆகிய மும்மொழி பேச வல்லவர் இவர் தமிழ்ப்பற்றும் தமிழிலக்கியப் பயிற்சியும் உடையவர்; நகைச்சுவையுடன் நாவன்மையாகப் பேசும் ஆற்றல் வாய்ந்தவர். உரைநடையும் கதையும் வரைவதில் இவருக்கு மிகுந்த திறமையுண்டு. உண்மையும் கடமையுணர்ச்சியும ஒழுக்கமு முள்ளவராதலின், இவரைத் தங்கள படப்பிடிப்பகத்தில் கதை வரைவாளராக அமர்த்திக் கொள்ளின், தங்கட்குப் பேரும் புகழும் உண்டாகுமென்பது திண்ணம். இவருக்குச் செய்வதெல்லாம் எனக்குச் செய்வதொக்கும்.

நண்பன்,
**அண்ணல் தங்கோ.**

### பயிற்சி

கீழ்க்குறித்தவாறு பரிந்துரைக்கடிதம் வரைக:—

1. ஓர் ஏழை மாணவனை ஓர் இலவச விடுதியிற் சேர்த்துக்கொள்ளுமாறு பரிந்தெழுதுவது.

2. ஒரு மாணவர் தம் நண்பருக்கு ஒரு வேலை தரும்படி, ஒரு தொழிற்சாலை முதலாளியாரான தம் உறவினருக்கு எழுதுவது.

3. ஒரு மாணவரை ஒரு கல்லூரியிற் சேர்த்துவிடும்படி, அங்குள்ள ஓர் ஆசிரியரை வேண்டுவது.

## 4. கதை வரைவு (Story - Writing)

**முன்னுரை குறிப்புக்கள்:—**

கதைகள், மிக எளியனவாகவும் எல்லாருஞ் சொல்லக்கூடியனவாகவுமிருந்தாலும்; கற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்பம் ஊட்டுவதாலும, சிறந்த உண்மைகளையும் நீதிகளையும் கேட்போர் மனத்திற் பசுமரத்தாணிபோற் பதியச் செய்வதாலும், சிறுகாவியங்கட்கும் பெருங்காவியங்கட்கும் அடிப்படையாய் அமைவதாலும், பேதையரையும் மேதையராக்கும் திறத்தனவாதலாலும், ஒழுக்கத்திற்கு ஏதுவாயிருப்பதாலும், மக்கள் வாழ்க்கைக்கு மிக வேண்டியனவாகக் கருதப்படும்.

**கதைகள்,**

1. உள்ளோன் தலைவனாக உள்ளதுரைப்பது,
2. உள்ளோன் தலைவனாக இல்லதுரைப்பது,
3. இல்லோன் தலைவனாக உள்ளதுரைப்பது,
4. இல்லோன் தலைவனாக இல்லதுரைப்பது,

என நான்குவகைப்படும்.

இவற்றுள், முதலது உண்மைக்கதையும், ஏனைய கட்டுக்கதையும், ஆகும். உண்மைக் கதைவரைவு எழுதத் தெரிந்த எல்லார்க்கும் இயலும். கட்டுக்கதை வரைவோ பெரும்பாலும் புலமையுடையார்க்கே இயலும்.

**கதைகள், மீண்டும்,**

1. பழங்கதை,
2. புதுக்கதை,

என இருவகைப்படும்.

ஒருவர் நெடுங்காலத்திற்கு முன்பே சொன்ன அல்லது எழுதிய கதை பழங்கதை; அங்ஙனமன்றி, புதிதாகச் சொல்லப்படும் அல்லது எழுதப்படும் கதை புதுக்கதை. இவற்றுள், புதுக்கதை உள்ளோன் தலைவனாக உள்ள துரைப்பதாயின், கீழ்வகுப்பு மாணவரும் வரைதற்கிய லும். ஏனை மூன்றனுள் ஒன்றாயின், மேல்வகுப்பு மாண வர்க்கே - அவருள்ளும் சிந்தனையாற்ற லுடையார்க்கே - இயலும்.

இனி, (1) தெரிந்த கதை (2) தெரியாத கதை என் றும், கதைகளை இருவகையாய் வகுக்கலாம். தெரிந்த கதைவரைவு சிறந்த பயிற்சியன்றாதலின், அதை விட்டு விட்டுத் தெரியாத கதைவரைவையே மேல்வகுப்பு மாண வர் பயிலுதல் வேண்டும். தெரியாத கதைகளைச் சட்டகக் குறிப்பு (Hints and Outline) இல்லாமல் வரைவது மாண வர்க்கு அரிதாகவும் இயலாததாகவு மிருக்குமாதலின், நிறைவாகவோ குறைவாகவோ சட்டகக் குறிப்புக் கொடுக்கப்படல்வேண்டும். தெரியாத கதைகளுள், அரை குறையாய்த் தெரிந்தவற்றை முன்னும் முற்றும் தெரியாத வற்றைப் பின்னும் வரைந்து, பயிலவேண்டும்.

குறிப்பு:—தெரிந்த கதைகளைத் துவக்கப்பள்ளி நடு நிலைப்பள்ளி மாணவரும், அரைகுறையாகத் தெரிந்த கதைகளைச் சட்டகக் குறிப்புக்கொண்டு உயர்நிலைப்பள்ளி

மாணவரும், தெரியாத கதைகளைச் சட்டகக் குறிப்புக் கொண்டு கல்லூரி மாணவரும், சட்டகக் குறிப்பின்றிக் கொடுக்கப்பட்ட தலைப்பிற்கேற்ற புனைவுக்கதைகளை அல்லது கட்டுக்கதைகளைப் புலவர்வகுப்பு மாணவரும், வரைந்து பயிலலாம்.

## சட்டகக் குறிப்பு வகைகள்

(1) நிறை சட்டகம் (Full Outline)

(2) வெறுஞ் சட்டகம் (Bare Outline)

(3) குறை சட்டகம் (Incomplete Outline)

(4) குறைகதை (Unfinished Story)

எனச் சட்டகக் குறிப்பு நால்வகைப்படும்.

கதையை எவரும் அறிந்துகொள்ளுமாறு எல்லா நிகழ்ச்சிகளையுங் குறிப்பது நிறைசட்டகம்; முக்கியமான அல்லது பருப்பொருளான நிகழ்ச்சிகளை மட்டுங் குறிப்பது வெறுஞ் சட்டகம்; கதையின் முற்பகுதிக்கு மட்டுங் குறிப்புக்கள் தருவது குறை சட்டகம்; கதையின் முற்பகுதியை மட்டும் வரைந்து விட்டுவிடுவது குறைகதை. நிறைசட்டகம் முற்றுந் தெரியாக் கதைக்கும், வெறுஞ்சட்டகம் சற்றே தெரிந்த கதைக்கும், குறைசட்டகம் அரைகுறையாய்த் தெரிந்த கதைக்கும், குறைகதை பிற்பகுதியை ஊகித்தறியக்கூடிய கதைக்கும், ஏற்றனவாம்.

## சட்டகப்படி கதை வரைவதற்கான குறிப்புக்கள்

(1) ஒரு கதைச்சட்டகத்தைப் படித்தபின், அக் கதைக்குரிய நிகழ்ச்சிகளெல்லாவற்றையும் சிந்தித்துத் தெளிவாக மனத்திலமைத்துக்கொண்டு, அதன்பின்பு கதை வரையத்தொடங்குதல் வேண்டும்.

(2) ஒரு கதைக்கு அதன் தலைமையான உறுப்பிலிருந்தாவது, முக்கிய நிகழ்ச்சியிலிருந்தாவது, முடிவி

னுணர்த்தப்பெறும் படிப்பினையிலிருந்தாவது, தலைப்பைத் தெரிந்துகொள்ளலாம். அது தனிச்சொல்லாகவேனும், தொடர்மொழியாகவேனும், பழமொழியாகவேனும், மேற்கோள் தொடராகவேனும், இருக்கலாம்.

(3) சட்டகக் குறிப்புக்களில் ஒன்றையும் விடாது, ஒழுங்காகக் கோவைபட வரைதல் வேண்டும்.

(4) குறிப்புக்களை இயற்கையொடு பொருந்த ஒன்றோடொன்று இசைத்தல்வேண்டும். வழக்கமாய்ச் சொல்லப்படும் முறைக்கு மாறாகக் கதை சொல்லினும் குற்றமில்லை.

(5) சிறு நிகழ்ச்சிகளைப்பற்றி விரிவாகவும் பெரு நிகழ்ச்சிகளைப்பற்றிச் சுருக்கமாகவும் வரையாது, அவ்வந் நிகழ்ச்சியைப்பற்றி அததற்கேற்ற அளவு வரைதல் வேண்டும்.

(6) வேண்டுமிடமெல்லாம் உரையாட்டு முறையைக் கையாளலாம்.

(7) கதையின் முடிவு, ஒரு சிறந்த உண்மையை அல்லது நீதியைப் புகட்டுவதா யிருத்தல்வேண்டும்.

(i) நிறைசட்டகம்

ஒரு செவிட்டிடையன் ஊர்ப்புறத்தில் ஆடுமேய்த்தல்—அவன் மனைவி சாப்பாடு கொண்டுவராமை—தலையாரி அருகில் புல் செதுக்கிக்கொண்டிருத்தல்—இடையன் வீட்டிற்குச் செல்ல எண்ணித் தலையாரியைத் தன் ஆடுகளைப் பார்த்துக்கொள்ளச் சொல்லுதல்—தலையாரி செவிடனுதலால், தான் செதுக்கின புல்லைக்கேட்க இடையனுக்கு நியாயமில்லையென்று கோபித்தல்—இடையன் தலையாரி இசைந்ததாகக் கருதிக்கொண்டு மனைவிமேற் கடுங்கோபத்தோடு வீடு செல்லல்.

வீட்டில் இடையன் மனைவி மொச்சைக்கொட்டையைப் பச்சையாய்த் தின்றுவிட்டு வயிற்றுவலியால்

உருண்டு புரள்தல்—இடையன் அவளுக்கு மருந்து கொடுத்தபின் சோறுசமைத்துச் சாப்பிட்டுவிட்டுத் திரும்புதல்.

ஆடுகள் சரியாயிருத்தல் கண்டு இடையன் தலையாரிக்கு ஒரு நொண்டியாட்டைக் கொடுத்தல்—தலையாரி தான் அவ்வாட்டின் காலை ஒடிக்கவில்லையென்று சண்டைக்கு வரல்—இருவரும் அவ்வழியே குதிரையேறிச் சென்ற ஒருவனிடம் முறையிடல்—அவனும் செவிடனாதலால், அக்குதிரையைத் தான் வழியிற் கண்டதாகக் கூறுதல்—இடையனும தலையாரியும் குதிரையாளன் தமக்கு மாறாகத் தீர்ப்புச்செய்ததாகக்கொண்டு அவனைத் திட்டுதல்—மூவரும் அவ்வழியே வந்த ஒரு பார்ப்பானிடம் முறையிடல்—பார்ப்பானும் செவிடனாதலால், அவர்களைத் தன் மனைவி அனுப்பினதாகக் கூறித் தான் அவளுடன் கூடி வாழமுடியாதென்று சொல்லித் தன் காசியாத்திரையைத் தெரிவித்தல்.

இந்நிலையில் தொலைவில் ஆட்கள் வரல்—குதிரையேறி வந்தவன் குதிரையை விட்டுவிட்டு ஓடல்—இடையன் ஆடுகளிடம் செல்லல்—தலையாரி இடையனைத் தண்டிக்கக் கருதி நொண்டியாட்டை யெடுத்துச்செல்லல்.

பார்ப்பான் அடுத்தவூர்ச் சத்திரத்தில் இராத்தங்கல்—காலையில் உறவினர் வந்து அவனை அழைத்துச்செல்லல்.

## முழுக்கதை

ஓர் ஊர்ப்புறத்துக் காட்டில், ஒரு செவிட்டிடையன் வழக்கமாய்த் தன் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான். ஒருநாட் காலையில் மிக நேரமாகியும், அவன் மனைவி சாப்பாடு கொண்டுவரவில்லை. பசி கடுகுதலால், அவன் தானே வீடுபோய்ச் சாப்பிட எண்ணி, பக்கத்தில் புல் செதுக்கிக் கொண்டிருந்த அவ்வூர்த் தலையாரியை, தான் வீடுசென்று திரும்பும்வரை தன் ஆடுகளைப் பார்த்துகொள்ளச்சொன்னான். அத்தலையாரியும் செவிடனாகையால், இடையன்

சொன்னதைத் தவறாக உணர்ந்து, "இவ்வளவுநேரம் நான் கட்டப்பட்டுச் செதுக்கிய புல்லை நீ எப்படிக் கேட்கலாம்? என் ஆவு பட்டினிகிடந்து சாக உன் ஆடுகள்மட்டும் கொழுக்கவேண்டுமா? போ, இல்லாவிட்டால் அடித்து விடுவேன்," என்று சொல்லித் தன் கையை வீசினான். இடையன், அக் கைவீச்சைத் தன்னை வீடுபோகச்சொன்ன தற்கு அடையாளமாகக் கருதிக்கொண்டு, தன் மனைவி யைப் போனவுடன் நையப்புடைக்கவேண்டுமென்னுங் கருத்தினனாய், வேகமாய்ச் சென்றான்.

இடையன், வீடுபோய்ச் சேர்ந்தவுடன், அவன் எதிர் பார்த்ததிற்கு மாறாக, அவன் மனைவி கொஞ்சம் மொச் சைக்கொட்டையைப் பச்சையாய்த் தின்றுவிட்டதனால், பொறுக்கமுடியாத வயிற்றுவலிவந்து உருண்டு புரண்டு கொண்டு கிடப்பதைக் கண்டான். உடனே அவன் கோபந்தணிந்து, அவளுக்குச் செய்யவேண்டிய சில மருத் துவ முறைகளைச்செய்து, அதன்பின்பு சோறு சமைத்துச் சாப்பிட்டுவிட்டு, மிகக் காலந்தாழ்த்துவிட்டதனால் பரபரப் புடன் காட்டிற்குத் திரும்பினான்.

ஆட்டு மந்தையை அடைந்தவுடன் ஆடுகளையெல்லாம் எண்ணிப்பார்த்துச் சரியாயிருக்கக்கண்டு, தலையாரியின் காவல்தான் அதற்குக் காரணமென்று கருதி, ஒரு கொழுத்த நொண்டியாட்டைத் தூக்கிக்கொண்டுபோய்த் தலையாரியிடங் கொடுத்து, "இது நல்ல கொழுத்த ஆடு. கறி மிகச் சுவையாயிருக்கும். உனக்கும் உன் சுற்றத் தார்க்கும் ஒரு சிறந்த விருந்திற்குக் காணும். நான் இல் லாத சமையத்தில் என் ஆடுகளைச் சரியாய்க் கவனித்துக் கொண்டதினால் உனக்கு இதை நன்கொடையாகக் கொடுக் கிறேன், எடுத்துக்கொள்," என்று சொன்னான். உடனே தலையாரி, தான் அவ்வாட்டின் காலை ஒடித்துவிட்டதாக இடையன் தன்மேற் குற்றஞ்சாட்டுகிறான் என்று கருதிக் கொண்டு, "யாரடா உன் ஆட்டைக் கால் ஒடித்தது? நான் காலையிலிருந்து இவ்விடத்தைவிட்டு அசையவில்லை. உன் ஆட்டுக்காலை ஒடித்தேன் என்று சொல்லுகிறாய்.

வலியச் சண்டைக்கு வருகிறாயா? வா," என்று சொல்லித் தன் வேட்டியை இறுக்கிக் கட்டினான்.

இடையன் தலையாரியின் கோபநிலையைப் பார்த்துச் சற்று விலகினபோது, ஒருவன் குதிரைமேலேறிக்கொண்டு அவ்வழியாய் வந்தான். இடையன் அவனை நிறுத்தி அவனிடம் தன் ஆவலாதியைச் சொன்னான். தலையாரியும் இடையனைப்பற்றி அவனிடம் முறையிட்டான். அக் குதிரையாளனும் அவர்களைப்போன்றே செவிடனாயிருந்ததினால், அவர்கள் சொன்னதில் ஒன்றைக்கூட அறிந்து கொள்ளாமல், "ஆம்; நீங்கள் சொல்வது சரிதான். இக் குதிரை எனதன்று. நான் வருகிறவழியில் இது தனியாய் மேய்ந்துகொண்டிருந்தது. நான் ஓர் ஊருக்கு விரைவாய்ச் செல்லவேண்டியிருப்பதால், இதன்மேலேறி வந்தேன். இது உங்களுடையதாயின் எடுத்துக்கொள்ளலாம். யாதொரு தடையுமில்லை," என்று சொன்னான். உடனே இடையனும் தலையாரியும் தனித்தனி தமக்கு மாறாகத் தீர்ப்புக்கூறியதாக எண்ணிக்கொண்டு, அக் குதிரையாளனைக் கண்டபடி திட்டத்தொடங்கினார்கள்.

அச்சமயம் ஒரு பார்ப்பான் அவ்வழியே வந்தான். அவனே தங்கள் வழக்கைக் கேட்டுத் தீர்ப்புக்கூறத் தக்கவன் என்று கருதி, அம்மூவரும் அவனிடம் ஒருங்கே தம் செய்திகளைத் தொண்டை கம்மக் கத்திச்சொன்னார்கள். அப் பார்ப்பானும் அவர்களைப்போன்றே செவிடனாயிருந்ததினால், "ஓகோ, செய்தி தெரிந்துவிட்டது. என் மனைவிதான் உங்களை அனுப்பி என்னைத் தடுக்கச்சொல்லியிருக்கிறாள். நான் இனிமேல் ஒருநொடியும் அவளோடு கூடி வாழமுடியாது. நான் அப்பிடாரியைக் கொண்டதிலிருந்து பட்டபாடுகளும் செய்த பாவங்களும் அவ்வளவிவ்வளவல்ல. அவற்றையெல்லாம் தொலைத்து மறுபிறப்பிலாவது நல்வாழ்வு வாழும்படி காசிக்குச்சென்று அங்கேயே என் எஞ்சிய காலத்தையுங் கழிக்கப்போகின்றேன். என்னைத் தடுக்காதீர்கள். இக்காரியத்தில் நீங்கள் வெற்றியடையவேமாட்டீர்கள். இது திண்ணம," என்று

சொல்லி முடித்தபோது, தொலைவில் சில ஆட்கள் வருவதை அந்நால்வருங் கண்டார்கள்.

குதிரைமேலிருந்தவன், குதிரைக்காரர்தான் குதிரையைத்தேடி வருகிறார்கள் என்று கருதிக்கொண்டு, குதிரையைவிட்டுக் கீழிறங்கி ஓட்டம் பிடித்தான். ஆடுகள் அதற்குள் சற்று அப்பாற் போய்விட்டதனால், இடையன் அவற்றிடம் சென்றுவிட்டான். தலையாரி, இடையன் செய்த குற்றத்திற்கு அவனைத் தண்டிக்க வேண்டுமென்று அங்கே கிடந்த நொண்டியாட்டைத் தூக்கிக்கொண்டு வீட்டிற்குப் போய்விட்டான். பார்ப்பான் தன் வழியே சென்று, பக்கத்தூரிலுள்ள சத்திரத்தில் இராத்தங்கினான்.

இரவில் நல்ல தூக்கமும் இளைப்பாறலுமிருந்ததினால், பார்ப்பான் காலையில் விழித்தெழுந்தபோது, அவன் மனம் கோபம் நீங்கி அமைதியடைந்திருந்தது. அப்போது அவன் உறவினரும் ஊராருமான பார்ப்பனர் பலர் வந்து, அவனைப் பலவாறு தேற்றி, எதிர்காலத்தில் அவனுடைய மனைவி அடங்கி நடக்குமாறு தாம் பார்த்துக் கொள்வதாக உறுதிகூறி, அவனை ஊருக்கு அழைத்துக்கொண்டுபோய் விட்டார்கள்.

செவிடர் கூடிச்செய்யுங் காரியம் சீர்கெடும்.

(ii) **வெறுஞ்சட்டகம்**

(1) ஒரு வீட்டில் ஒரு பெண்பிள்ளை இறத்தல்.

(2) ஒரு போலித்துறவி அப்பெண்பிள்ளையின் தாயை ஏமாற்றி அப்பிள்ளையின் அணிகலன்களைக் கொண்டு செல்லுதல்.

(3) அப்பெண்பிள்ளையின் தந்தை அப்போலித் துறவியைப் பிடிக்கப்போதல்.

(4) அப்போலித் துறவி அத்தந்தையின் குதிரையையும் கவர்ந்து செல்லல்.

## முழுக்கதை

ஒரு வீட்டில் ஒரு நல்ல பெண்பிள்ளை இருந்தாள். அவளுடைய பெற்றோர் அவளை அருமையாகப் போற்றி வளர்த்தார்கள். ஒருநாளும் அவளைவிட்டு அவர்கள் பிரிந்ததில்லை. எங்கு சென்றாலும், அவளையும் அவர்கள் உடன்கொண்டே செல்வது வழக்கம். சிறந்த ஆடையணிகளெல்லாம் அவளுக்கு அவர்கள் வாங்கிக் கொடுத்திருந்தார்கள். மணப்பருவம் வந்திருந்த சமையத்தில், அவள் திடீரென்று நோய்ப்பட்டு இறந்துபோனாள். அவளுடைய பெற்றோர் ஆற்றொணாத் துயரத்தில் மூழ்கினர்.

ஓராண்டு கழிந்து, அக்குடும்பத்தின் நிலைமையை அறிந்திருந்த ஒரு போலித்துறவி, தந்தையாரில்லாத சமையம்பார்த்து அவ்வீட்டிற்கு வந்தான். தாயார் அவனை வணக்கம் செய்து வரவேற்று, "அடிகாள்! மிகக் களைத்துப் போயிருக்கின்றீர்களே! எங்கிருந்து வருகின்றீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அவன் "அம்மா! நான் பல வுலகஞ் சுற்றிக் கடைசியில் வீட்டுலகத்திலிருந்து வருகின்றேன்," என்றான். உடனே தாயார் "அடிகாள்! வீட்டுலகத்திலிருந்தா வருகின்றீர்கள்? அப்படியானால், என் அருமைக் கண்மணி அங்கிருப்பாளே! அவளை நீங்கள் பார்த்தீர்களா?" என்று ஆவலாய்க் கேட்டார். "ஆமாம். பார்த்தேன்," என்று சற்றுந் தயங்காமல் சொன்னான் அப்போலித்துறவி. "அவள் எப்படியிருக்கின்றாள்? எங்களைப்பற்றி ஏதாவது வினவினாளா? எங்களுக்கு ஏதேனும் செய்தி சொல்லிவிட்டாளா?" என்று தாயார் கேட்டதற்கு; "அவள் மிக வருத்தத்தோடிருக்கின்றாள். அவளுடைய அணிகலன்களை யெல்லாம் இங்கே வைத்து விட்டுப் போய்விட்டாளாம். அவற்றை உடனே அனுப்பச் சொன்னாள். அவை போய்ச் சேர்ந்தால்தான் அவள் மகிழ்ச்சியடைவாள்," என்று அப்போலித்துறவி சொன்னான். உடனே, தாயார் அவள் அணிகலன்களையெல்லாம் ஒரு சிறுமூட்டையாகக் கட்டி அவளிடம் சேர்க்கும்படி அவனிடங் கொடுத்தாள். அவன் அதுவே சமையம்

என்று தாயாரிடம் விடைபெற்றுக்கொண்டு விரைந்து சென்றான்.

சிறிதுநேரங் கழித்துத் தந்தையார் வந்தார். தாயார் அவரிடம் நடந்ததைச் சொன்னார். அவர் "அடி பேதாய்! துறவியிடம் ஏன் அணிகலன்களைக் கொடுத்தாய்? வீட்டுலகம் சென்று இங்கு திரும்பினவன் யார்? உன்னை ஏமாற்றி விட்டல்லவா ஒருவன் போயிருக்கின்றான்? அருமை மகளை இழந்ததுமன்றி அவள் நினைவிற்கு வைத்திருந்த அணிகலன்களையுமா பறிகொடுப்பது?" என்று வருந்திக்கொண்டிருந்தபோது; "சற்று முன்புதான் அத்துறவி போனான். வேகமாய்ச் சென்றால் இப்போதும் அவனைப் பிடித்துக் கொள்ளலாம்," என்று தாயார் சொல்ல; தந்தையாரும் உடனே தம் குதிரையேறிப் புறப்பட்டார்.

சிறிது தொலைவு சென்றபின், தந்தையார் அப்போலித் துறவியைத் தொலைவிற்கண்டு அவனை நிற்கச் சொன்னார். அவன் தன்னால் இயன்றவரை வேகமாய் ஓடி, கடைசியில் ஒரு மரத்தின்மேல் ஏறினான். தந்தையார் குதிரையை மரத்தடியில் நிறுத்திவிட்டு, அப்போலித் துறவியைப் பிடிக்கத் தாமும் மரத்தில் ஏறினார். அப்போது அவன் திடுமென்று குதிரையின்மேற் குதித்து, அதை வேகமாய்த் தட்டிவிட்டான். அது காற்றாய்ப் பறந்தது. தந்தையார் மரத்தினின்று கீழிறங்கி, நிலைமையை உணர்ந்துகொண்டு, "துறவியாரே! தாயார் அணிகலன் கொடுத்தாரென்றும், தந்தையார் குதிரை கொடுத்தாரென்றும், என் மகளிடம்போய்ச் சொல்லும்," என்று உரக்கக் கத்திவிட்டு, வருத்தத்துடன் கால்நடையாய் வீட்டிற்குத் திரும்பிவந்தார்.

போலித்துறவியாரை நம்புதல் கூடாது.

(iii) குறைசட்டகம்

ஒரு விறகு வெட்டியின் கோடரி ஓர் ஆற்றில் விழுதல் — ஒரு விண்ணவன் முழுகித் தங்கக் கோடரி யெடுத்தல் — விறகுவெட்டி அதன்று எனல் — விண்ணவன்

வெள்ளிக் கோடரி யெடுத்தல் — விறகுவெட்டி அதுவு மன்று எனல் — விண்ணவன் இரும்புக் கோடரி யெடுத்தல் — விறகுவெட்டி அதுவே யெனல் — விண்ணவன் அதனோடு ஏனையிரண்டையும் அளித்தல் — .

## முழுக்கதை

ஓர் ஊரில் ஓர் உண்மையுள்ள விறகுவெட்டி யிருந்தான். அவன் ஒரு நாள் ஒரு காட்டிற்குச் சென்று விறகு வெட்டிக்கொண்டிருந்தபோது, கோடரி நழுவி அருகிலுள்ள காட்டாற்றில் விழுந்துவிட்டது. அவ் வாறு மிக ஆழமாயிருந்ததினாலும், மிக வேகமாய் ஓடிக்கொண்டிருந்ததினாலும், அவனால் அதை எடுக்க முடியவில்லை. ஆதலால், என்ன செய்வதென்று தெரியாமல், மிக வருத்தத்தோடு அங்கு உட்கார்ந்துகொண்டிருந்தான்.

அப்போது ஒரு விண்ணவன் தோன்றி "ஏனப்பா! வருத்தத்தோடிருக்கின்றாய்?" என்று வினவினான். அதற்கு விறகுவெட்டி, "என் கோடரி ஆற்றில் விழுந்துவிட்டது. அதை யெடுக்க முடியவில்லை," யென்று, சொன்னான். உடனே, விண்ணவன் ஆற்றிற்குள் முழுகி ஒரு தங்கக் கோடரியை எடுத்துக் கொண்டுவந்து, "இதுவா உனது?" என்று கேட்டான். விறகுவெட்டி "அதுவன்று எனது," என்றான். பின்பு விண்ணவன் மீண்டும் முழுகி ஒரு வெள்ளிக் கோடரியை எடுத்துக் கொண்டுவந்து, "இதுவா உனது?" என்று கேட்டான். விறகுவெட்டி "அதுவும் எனதன்று," என்றான். பின்பு, மூன்றும முறையும் விண்ணவன் முழுகி ஓர் இருப்புக் கோடரியைக் கொண்டுவந்து காட்டி, "இதுவா உனது? பார்" என்றான். விறகுவெட்டி "அதுதான் எனது," என்று சொல்லி, அதை ஆவலோடு வாங்கினான். விண்ணவன் அவனுடைய உண்மையை மெச்சி, ஏனையிரு கோடரிகளையும் அவனுக்குப் பரிசாக அளித்து மறைந்தான்.

விறகுவெட்டி வேலை முடிந்தவுடன் வீடு திரும்பினான். இச்செய்தியைக் கேள்விப்பட்ட இன்னொரு பேராசைக்கார

னும் பொய்யனுமான விறகுவெட்டி, மறுநாள் அதே இடத்திற்குச் சென்று, தன் கோடரியை வேண்டுமென்று ஆற்றில் போட்டுவிட்டு, அங்கே உட்கார்ந்து விண்ணவன் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவன் எதிர்பார்த்த வண்ணமே விண்ணவன் தோன்றி, அவன் வருத்தத்திற்குக் காரணம் வினவினன். அவன் தன் கோடரி ஆற்றில் விழுந்துவிட்டதாகச் சொன்னான். உடனே, விண்ணவன் ஆற்றில் முழுகி ஒரு தங்கக்கோடரியை யெடுத்துக் கொண்டுவந்து "இதுவா உனது?" என்று கேட்குமுன்னரே, பேராசைக்காரன் "அதுவே எனது, அதுவே எனது," என்று கத்தினான். அன்றே விண்ணவன் மறைந்தான். அதன்பின் அவனைக் காணவேயில்லை பேராசைக்காரன் இருட்டுமட்டும விண்ணவனை வீணாகக் கத்தியழைத்துக் கொண்டிருந்துவிட்டு, பின்பு வெறுங்கையாய் வருத்தத்தோடு வீட்டிற்குத் திரும்பிவந்தான்.

உண்மை உயர்வளிக்கும். பொய்சொன்ன வாய்க்குப் போனகங் கிடையாது.

## (iv) குறைகதை

விசயநகரப் பேரரசருள் தலைசிறந்தவரான கிருட்டிண தேவராயருக்கு, சாளுவத்திம்மரசு என்பவர் தலைமை யமைச்சராயிருந்தார். அவரை அனைவரும் அப்பாஜி என்றழைப்பது வழக்கம். அவர் சாலோமோன் போன்ற நுண்மதியர். எவ்வகைச் சிக்கலான செய்தியையும் அவர் எளிதாய்த் தீர்த்துவிடுவார். அவரது சூழ்வினைக்கெட்டாத உலகியற் செய்தி எதுவுமே யிருந்ததில்லை. அவருடைய பேரும் புகழும் தென்னாட்டில் மட்டுமன்றி வடநாட்டிலும் பரவிற்று.

அப்போது டில்லியிலிருந்த மகமதியப் பேரரசர், அவரது திறமையைபபற்றிக் கேள்விப்பட்டு, அவர் மதிநுட்பத்தை அறியும்பொருட்டு, ஒரேயளவாயும் ஒரே வடிவாயுமுள்ள மூன்று சிறு படிமைகளை (விக்கிரகங்களை) கிருட்

டிண தேவராயரிடம் அனுப்பி, அவற்றுள் எது தலையான வனையும் எது இடையானவனையும் எது கடையானவனை யும் ஒக்குமென்று, அவருடைய அமைச்சரைக்கொண்டு அறிந்து தெரிவிக்குமாறு எழுதியிருந்தார். கிருட்டிண தேவராயர் முதலாவது அவற்றைத் தம் துணையமைச்ச ரெல்லாரிடமும் காட்டினார். அவர் அவற்றைப பார்த்து விட்டு, அம்மூன்று படிமைகளும் ஒன்றுபோலுள்ளன வென்றும், அவற்றிடை வேறுபாடு காணமுடியாதென் றும் சொல்லிவிட்டனர்.

## முழுக்கதை

விசயநகரப் பேரரசருள் தலைசிறந்தவரான கிருட்டிண தேவராயருக்கு, சாளுவத்திம்மரசு என்பவர் தலைமை யமைச்சராயிருந்தார். அவரை அனைவரும் அப்பாஜி என் றழைப்பது வழக்கம். அவர் சாலோமோன் போன்ற நுண்மதியர். எவ்வகைச் சிக்கலான செய்தியையும் அவர் எளிதாய்த் தீர்த்துவிடுவார். அவரது சூழ்வினைக்கெட்டாத உலகியற்செய்தி எதுவுமே யிருந்ததில்லை. அவருடைய பேரும் புகழும் தென்னாட்டில் மட்டுமன்றி வடநாட்டிலும் பரவிற்று.

அப்போது டில்லியிலிருந்த மகமதியப் பேரரசர், அவரது திறமையைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவர் மதி நுட்பத்தை அறியும்பொருட்டு, ஒரேயளவாயும் ஒரே வடி வாயுமுள்ள மூன்று சிறு படிமைகளை (விக்கிரகங்களை)க் கிருட்டிண தேவராயரிடம் அனுப்பி, அவற்றுள் எது தலை யானவனையும் எது இடையானவனையும் எது கடையான வனையும் ஒக்குமென்று, அவருடைய அமைச்சரைக் கொண்டு அறிந்து தெரிவிககுமாறு எழுதியிருந்தார். கிருட்டிணதேவராயர் முதலாவது அவற்றைத் தம் துணை யமைச்சரெல்லாரிடமுங் காட்டினார். அவர் அவற்றைப் பார்த்துவிட்டு, அம்மூன்று படிமைக்ளும் ஒன்றுபோலுள் ளனவென்றும், அவற்றிடை வேறுபாடு காணமுடியா தென்றும் சொல்லிவிட்டனர்.

பின்பு, இராயர் அவற்றை அப்பாஜியிடம் காட்டினார். அவர் அவற்றைக் கூர்ந்து நோக்கி, அவற்றின் காதுகளில் நுண்துளையிருப்பதைக் கண்டு, ஒவ்வொன்றின் காதிலும் ஒவ்வொரு ஈர்க்கைச் செலுத்தினார். அங்ஙனஞ் செலுத்திய ஈர்க்கு, ஒன்றிற்கு வாய்வழியாகப் புறப்பட்டது; இன்னொன்றிற்கு மறுகாது வழியாகப் புறப்பட்டது; இன்னொன்றிற்கு உள்ளே சென்று வெளியே வரவேயில்லை. அதனால், ஈர்க்கு உள்ளே சென்று வெளியே வராத படிமையைப்போல், கேட்ட செய்தியைத் தன் உள்ளத்தே யடக்குகின்றவன் தலையானவன் என்றும், ஈர்க்கு உள்ளே சென்று மறு காது வழியாகப் புறப்பட்ட படிமையைப் போல், கேட்ட செய்தியை மறு காது வழியாய் விட்டுவிடுகின்றவன் இடையானவன் என்றும், ஈர்க்கு உள்ளே சென்று வாய்வழியாகப் புறப்பட்ட படிமையைப்போல் கேட்ட செய்தியை வாய்வழி கொட்டிவிடுகின்றவன் கடையானவன் என்றும், அப்பாஜி சொல்ல, அப்படியே இராயரும் டில்லிக்கு எழுதியனுப்பிவிட்டார். டில்லி அரசர் அப்பாஜியின் மதிநுட்பத்தை வியந்து அவருக்கு விலையேறப்பெற்ற ஒரு வயிர மோதிரத்தைப் பரிசாக அளித்தார்.

எதையும் உற்றுநோக்கி ஊகித்தறியவேண்டும். ஆயினும், அதற்கேற்ற மதிநுட்பம் பல்லாயிரவருள் ஒருவர்க்கே அமைந்துள்ளது.

## 5. தன்வரலாறு அல்லது தற்சரிதை (Autobiography)

ஒருவரது வாழ்க்கையைப் பற்றி முழுக்க வரைவது வாழ்க்கை வரலாறு. இது பொதுவாய்ப் பிறராலேயே வரையப்பெறும். ஒருவர் தம் வாழ்க்கை வரலாற்றைத் தாமே வரையின், அது தன்வரலாறு அல்லது தற்சரிதை எனப்பெறும்.

உயர்திணையாயினும் அஃறிணையாயினும், ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு வரலாறுண்டு. உயர்திணை

யைச் சேர்ந்த மக்கள் பேசவும் எழுதவும் கூடுமாதலின், அவர் வரலாற்றை அவரே சொல்லுதலும் வரைதலும் இயலும். உயிருள்ளவும் உயிரில்லவுமான அஃறிணையுயிர்கட்கு அது எங்ஙனம் இயலும்? ஆதலின், அவற்றின் வரலாற்றை மக்களே சொல்லுதல் அல்லது வரைதல் வேண்டும். அங்ஙனம் சொல்வதை, அவையே சொல்வது போலச் சொல்லுதல் அல்லது வரைதலும், தன்வரலாறு எனப்படும்.

மக்கள் தன்வரலாறாயின், அதை வரைதற்கு நினைவாற்றல் ஒன்றே போதும். அஃறிணைப் பொருள்களைப் பற்றியதாயின், அதற்கு நினைவாற்றலோடு பாணிப்பாற்றலும் (Power of imagination) வேண்டும். இங்ஙனம் மக்கள் தன்வரலாறு எளிதாயும், மற்றவற்றின் தன்வரலாறு அரிதாயுமிருத்தலின்; ஈண்டு மாணவர் பயிற்சிக்கு, அரிதான அஃறிணை பற்றியதே எடுத்துக்கொள்ளப்பெறும்.

தன்வரலாறும் ஒருவகைச் சரித்திரமேயாயினும், அது நாட்டு வரலாறுபோல் நிகழ்ச்சி கூறுவதாய் மட்டுமிராது, இனிய கதைப்போக்கில் எழுதப்பெறல்வேண்டும்.

## போலிகைகள்

### (1) கோகினூர் வயிரத்தின் தன்வரலாறு:

உலகத்திற் பெயர்பெற்ற வயிரங்களுள் ஒன்றானதும், தற்போது ஆங்கில வேந்தரின் மகுடத்திற் பதிக்கப்பெற்றுள்ள மாபெரு வயிரமுமான நான், பல நூற்றாண்டுகட்கு முன், தென்னிந்தியாவிற் கிருட்டிணை (கிருஷ்ணா) யாற்றங்கரையிலுள்ள கோல்கொண்டாவில் ஒரு வயிரச் சுரங்கத்தில் வெட்டியெடுக்கப்பெற்றேன். பல பெருங்கை கடந்தபின், 1526-இல், முகலாயப் பேரரசின் நிறுவலரான பேபரிடம் சேர்ந்தேன். அவர் என்னை டில்லி அரண்மனைச் செல்வங்களுள் சிறந்ததாகப் போற்றிவைத்தார். என் செய்தி உலகமெங்கும் பரவிற்று. பல பேரரசர் என்மேற்

கண்வைத்திருந்தனர். முகலாயப் பேரரசரைப் பார்க்கு மாறு டில்லிக்கு வந்த அயல்நாட்டுப் பெருமக்களெல்லாம், என்னைக் காணாது செல்வதில்லை.

பேபருக்குப்பின், அவர் வழியினர்க்கு வரிசைப்படி ஒன்பது தலைமுறை வரைக்கும் உரிமையானேன். ஐந்தாம் தலைமுறையினரான ஔரங்கசீப் காலத்தில், 1665-இல் தேவர்னியர் (Tavernier) என்னும் பிரெஞ்சிய வழிப் போக்கர் டில்லிக்கு வந்திருந்தபோது, நான் அவருக்குக் காட்டப்பட்டேன். அவர் என்னைப்பற்றி மிகமிக வியந்து பேசி, என் எடை வடிவம் முதலிய பல இயல்புகளையும் தம் நாட்குறிப்புப் புத்தகத்தில் குறித்துவைத்துக்கொண் டார்.

ஔரங்கசீப் காலத்திற்குப்பின், முகலாயப் பேரரசு வரவர வலி குன்றியது எனக்கும் ஒரேயிடத்தில் நீண்ட நாளிருந்து சலித்துப்போய் இடமாற்றம் ஏற்பட்டால் நன்றாயிருக்குமெனத் தோன்றிறறு. ஒன்பதாம் தலைமுறை யினரான நைசாம் - உல் - முலுக்கு என்னும் முகமதுசா காலத்தில், 1739-இல், பாரசீக வேந்தரான நாதிர்சா இந்தி யாவின்மேற் படையெடுத்து வந்து, டில்லியைக் கொள்ளை யிட்டு, தாம் கருதியிருந்தபடி என்னையும் எடுத்துக்கொண்டு சென்றுவிட்டார். அவருக்கு என்னைப்பற்றி யிருந்த மதிப்பு அளவிடற்கரியது. அவரே எனக்குக் கோகினூர் என்று பெயரிட்டார். ஒளிமலை என்பது இப்பெயர்ப் பொருள். 1747-இல் அவர் கொல்லப்பட்டபின், அவரு டைய குதிரைப்படைத் தலைவருள் ஒருவராயிருந்தவரும் ஆப்கானிய மன்னருமான, அகமதுசா கைப்பட்டேன். அவர் 1773-இல் இறந்தார். அதன்பின் அவர் பின்னோர் வயமானேன். அவருள் ஒருவரான சாசூசா 1813-இல் தம் பகைவரால் துரத்துண்டு, லாகூரில் ரஞ்சித்சிங்கிடம் அடைக்கலம் புகுந்திருந்தபோது, அச்சீக்கிய மன்னர் சமையத்தை நன்றாகப் பயன்படுத்தி என்னைக் கவர்ந்து கொண்டார். குருடன் கையிற் சிக்கிய விலாங்குபோற் கிடைத்த என்னைக் கண்டவுடன், அவருக்கெழுந்த கொண்

டாட்டம் கொஞ்சநஞ்சமன்று. அவர் காலமெல்லாம் என்னை உயிரினும அரிய பொக்கிசமாகப் போற்றிவந்தார்.

அவர் 1839-இல் இறந்தபின், ஆங்கிலருக்கும் சீக்கியருக்கும் இருபோர் நிகழ்ந்தன. அவற்றுள் இரண்டாவதன் விளைவாக, 1849-இல, பஞசாபுநாடு ஆங்கில இந்தியாவுடன் இணைக்கப்பட்டபோது, அந்நாட்டுத் தலைசிறநத செல்வமான நானும், கிழக்கிநதியக குழுமபார் (East India Company) கைப்புகுந்தேன். அக் குழுமபார் என்னை 1850-இல விகடோரியாப பேரரசியாரிடம அளித்தனர். அதிலிருந்து, இவ் இலண்டன்மாநகரிலேயே இருந்துவருகின்றேன். இனி, உலகுளளவரையும இஙகேயே இருபபேன். பல நூற்றாண்டுகளாகப் பலநாடுகள் சுற்றிக் களைத் துப்போனமையாலும், உலகததிற் சிறந்த ஆட்சியுள்ள நாடு இவ் இஙகிலாநதாதலாலும்; உலகததின் மாபெரு நகரமும் இவ் இலண்டனேயாதலாலும; இங்கு எத்துணை ஊழிகள் கடப்பினும், எனக்கு எள்ளளவும் வெறுப்புத் தோன்றாது.

என்னை இன்று காண்பவர், நான் என்றுமே ஏறத்தாழ இவ்வளவு பருமன்தான் இருந்திருப்பேன் என்று கருதலாம் என் பழைய நிலைமையைச சொன்னாற் பலர் நம்பமாட்டார். நான் முதலாவது கோழிமுட்டை வடிவில் $793\frac{5}{8}$ காரட்டு (Carats) எடையிருந்தேன். பேபருக்குப் பிறகாலததில், ஒரு தேர்ச்சியில்லாத மணிக்கொாலலன் என்னை முக்கூறாக்கியபின், நான் அரைமுட்டை வடிவமாய் 280 காரட்டு எடையேன் ஆனேன். என்னொடு சேர்ந்த இரு துண்டுகளுள், ஒன்றை ரசியருமை, இன்னொன்றை அபபாசு மிர்சாவும் (Abbas Mirsa), அடைந்ததாகச் சொல்கின்றனர். நான பலகைபட்டுத் தேய்ந்ததினால், 1851-இல் இவ் இலண்டன் மாநகரில் நடைபெற்ற பெருங் காட்சிச்சாலையில் (Great Exhibition) வைக்கப்பெற்றிருந்தபோது, $186\frac{1}{16}$ காரட்டுதான இருநதேன். அவ வெடையிலும் என்னை விட்டுவைத்திலர். எனக்கு அழகிய வடிவுறுத்தக் கருதி, ரோசா மலர் வடிவில் என்னைச

செதுக்கி, என் எடையை $106\frac{1}{16}$ காரட்டாகக் குறைத்து விட்டனர். 'உலக்கை தேய்ந்து உளிப்பிடியானதுபோல்' என் பருமன் குன்றியிருப்பினும், நான் விக்டோரியா பேரரசியாரின் மகுடத்திற் பதிக்கப்பெற்று அவர் தலைமேற் சூடப்பெற்றதினாலும், இனிமேல் எனக்குக் குறைப் பிராது என்னும் நம்பிக்கையினாலும், இக்குன்றிய அளவிலும் பெருவிலைமதிப்புப் பெறுவதினாலும், சிறிதும் வருந்தாதிருக்கின்றேன்.

நான் சுரங்கத்திலிருந்து எடுக்கப்பட்டது முதல், இவ்வுலகமாநகர் வந்துசேரும் வரையும், எனக்காகவும் என்னாலும் அரசரிடை நிகழ்ந்த பகையும் போரும் இழப்பும் சேதமும் எத்துணையோ பல. அவற்றுள் ஒருசிலவே வரலாற்றில் வரையப்பட்டுள. ஏனையவெல்லாம் எனக்குத்தான் தெரியும். இனிமேல் அத்தகைய தீங்கொன்றும் என்னால் மக்களுக்கு நேராது என்பதை நினைக்கும்போது, என் உள்ளம் மிக ஆறுதலடைகின்றது.

உலகத்திலுள்ள விலையேறப்பெற்ற உடைமைகளுள் ஒன்றான நான், இந்தியாவிற் பிறந்தும் இந்தியருக்குரிமையாகாமல், ஆறாயிரங்கல் தொலைவிலுள்ள ஆங்கிலருக்குரிமையானதுபற்றி, பல இந்தியர் அழுக்காறு கொள்ளலாம். ஆயின், என்னால் மக்கள் நுகரும் நுகர்ச்சியெல்லாம், காட்சியின்பம் ஒன்றுதானே? அறிவியலுலகிற்கு நடுமையமாயிருப்பதும், பன்னாட்டுமக்கள் பாங்காய் வாழ்வதும், பண்பட்டமக்கள் பதியாயிருப்பதும், அயலார்க்கெல்லாம் முழுப் பாதுகாப்பளிப்பதும், பிறநாட்டு மக்கள் பெருந்தொகையராய் வந்து பெயர்வதும், உலக முழுவதிலும் உயர்ந்தமக்கட் டொகையுள்ளதுமான இவ் இலண்டனையன்றி வேறெவ்விடத்தில் நான் மக்கட்குச் சிறந்த பயன்பட முடியும்? இதனாலன்றோ, எல்லாமறிந்த இறைவனும் என்னை இங்குவரச் செய்தனன்! ஆதலால், கீழுலகத்தினின்று மேலுலகத்திற்கு வந்து மேன்மையுற்றேனேயன்றிக் கீழ்மையுற்றேனல்லேன் என்பதை, எண்ணித் தெளிக.

(2) ஓர் எருதின் தன்வரலாறு

சாத்தன் என்னும் பெயருள்ள நான், பத்து ஆண்டு கட்கு முன், சென்னையில் ஒரு பாற்காரன் வைத்திருந்த ஆவினிடம் பிறந்தேன். நான் பிறந்ததிலிருந்து, என் உடையான் என்னைச் சரியாய்ப் பால்குடிக்க விடுவதே யில்லை. பாற்காம்பில் வாய் வைத்து உறிஞ்சத் தொடங் கியவுடன், என்னையிழுத்துப் பக்கத்திலுள்ள தூணிற் கட்டிவிட்டு, என் எதிரில் எல்லாப் பாலையும் கறந்து கொண்டு, வழுங்காமபைச் சுவைக்கவிடுவான். இதை எந்த உயிர்க்கொடுமை விலக்குக் கழகத்தாரும் கவனிப் பதேயில்லை. எனக்காவது இருந்தது; இன்னோராவிற்குப் பிறந்த கன்றிற்கு இதுவுமில்லை. அதனால் அது இறந்து விட்டது. என் உடையான் அதன் தோலை உரித்து, அதற்குள் வைக்கோலைத் திணித்துத் தைத்து, நான்கு காறபோல் நான்கு குச்சு வைத்துக் கட்டி, அதன் தாயின் முன் உயிருள்ள கன்றுபோல் நிறுத்திப் பால் கறந்து வந்தான்.

ஒருமுறை ஆம்பூரினின்று திருப்பதிக்குப் போய்த் திரும்பின ஏழுமலையான், என் உடையான் வீட்டில் தங்க நேர்ந்தது. நான் தோலும் எலும்புமாயிருந்ததைக் கண்டு இரங்கி, என் உடையானை நோக்கி, "ஏன் இதைச் சரி யாய்ப் பால்குடிக்க விடாமல், இப்படி மெலியவைத்தாய்?" என்று கேட்டதற்கு, அவன் "முழுப்பாலும் குடிக்க விட்டால் கன்று செத்துப்போகுமே!" என்று, உண்மை சொல்பவன்போல் கொடுமையாயப் பதிலிறுத்தான். அதைக்கேட்ட ஏழுமலையான், "அப்படியானால் ஒரு விலை யிட்டு என்னிடம் கொடு; நான் கொண்டுபோய் வளர்த்துக் கொள்கிறேன்," என்று சொல்ல; அதற்கு என் உடை யானும் இசைந்து, என்னை அவனிடம் ஆறு உருபாவிற்குத் தள்ளி விட்டான். நான் மறுநாளே ஆம்பூர் வந்து சேர்ந்தேன்.

ஆம்பூருக்கு வந்தவுடன் எனக்கு நல்லகாலம் பிறந்தது. ஏழுமலையான் எனக்கு நாள்தோறும் நல்ல புல்

வைத்து, சுவையுஞ் சத்துமுள்ள ஊறல் காட்டி வந்தான். நான் பால்குடி மறந்திருந்ததினால், அவன் இட்ட உணவு எனக்கு நன்றாகப் பிடித்தது. சிலநாட்சென்று பருத்திக் கொட்டையும் வைக்கத் தொடங்கியதால் ஓராண்டிற்குள் உருப்பட்டுவிட்டேன். ஈராண்டு கழித்து, நான் நல்ல காளங்கன்றா யிருந்தபோது, சேலத்தானும் ஏழ்மையா னுக்கு உறவினனுமான நாகப்பன் என்பவன் என்னைத் தன் ஒற்றைமாட்டு வண்டிக்கு வாங்கிக் கொண்டு வந்து விட்டான்.

நாகப்பன் ஏழையென்ற காரணத்தினால், ஏழ்மலை யான் அவனுக்கு என்னைக் குறைந்த விலைக்கே கொடுத் தான். ஆனால், நான் மீண்டும் ஏழையாய் விடுவேனே என்பதை அவன் எண்ணவில்லை. சேலம் வந்தபின் நான் பட்டபாடு கடவுட்குத்தான் தெரியும். சரியான தீனி யில்லாமல் இரவு பகலாய்க் கடுமையாக உழைத்து வந்தேன். திருவிழாக் காலங்களிலோ, சற்றுப் படுத் திளைப்பாறக்கூட நேரமிராது. மாட்டுழைப்பு என்று சொல்வது என் வேலைக்கே பொருந்தும். மாந்தர் செய்யும் வேலைக்கு மணிக்கணக்கு ஏற்படுத்தி யிருக்கின்றனர். நாங்கள் செய்யும் வேலைக்கு யார் ஏற்படுத்துவது? சட்ட சபையில் எங்களுக்காகப் பேசுபவர் ஒருவருமில்லையே! இருந்தாலும் மூவாண்டு பொறுத்து இறைவன் திரு வருளால் ஒரு மாறுதல் ஏற்பட்டது. நான் வரவர மெலிந்துபோனதைக் கண்ட அக்கம் பக்கத்தார், நான் நல்ல குலக்காளையென்றும், என்னை நன்றாகப் பேணக் கூடியவரிடம் விற்றுவிட்டு வேறொரு தாழ்குலக்காளையை வாங்கிக்கொள்ள வேண்டுமென்றும், பலமுறை வற் புறுத்திச் சொன்னதின் பயனாக, நாகப்பன் என்னை இப் பழைய கோட்டைப் பட்டக்காரரிடம் கொண்டு வந்து விற்றுவிட்டான்.

இவர் அவனுக்கு எவ்வளவு கொடுத்தாரோ தெரிய வில்லை; ஆனால உயர்ந்த விலை கொடுத்ததாகத்தான் கேள்வி. இங்கு வந்தபின் எனக்குப் பொற்காலம் பிறந்தது. பட்டக்

காரர் என்னை ஒரு பிள்ளையைப் போல் தான் பேணிவரு கிறார். பிறமாடுகளையும் இப்படியே. இப்படி எங்கள் குலத்தைப் பாதுகாப்பவர் வேறொருவர் இவ்வுலகத்திலுண்டோ என்பது ஐயுறவுதான். மிக எளிய வேலையும் மிக வுயர்ந்த உணவும் இட்டு, எங்கட்கும ஒரு விண்ணுலகேற்படுத்திய இப் பட்டக்காரர் குடும்பம், வழிவழி வாழ்க.

## பயிற்சி 1.

பின்வருங் குறிப்புக்களைக்கொண்டு தன்வரலாறு வரைக :—

(1) பட்டுப்பூச்சி.—முசுக்கட்டையிலையில் முட்டை; உலண்டு (Larva); பொற்புழு (Chrysalis); நூற்கூடு (Cocoon), பட்டுப்பூசசி.

(2) காசு (நாணயம்).—தங்கசாலையில் உலோகத்தை உருக்குதல், பாளமாக வார்த்துத் தகடாக்குதல், வட்டத்துண்டுகளாக நறுக்குதல், ஓரத்தில் வரையுறுத்தல், முத்திரையையும் எழுத்துக்களையும் பொறித்தல், அரசியற் பொக்கிச சாலைக்கனுப்புதல், அங்கிருந்து காசுக்கடைகட்குப் போக்குதல், காசோலை (Cheque) மாற்றப்படல், காசு குடிகள் கைப்படல், கடைக்காரனிடம் செல்லுதல், பலரிடமும் சுற்றித்தேய்தல், தேய்ந்தபின் செல்லாமை, உலோக மதிப்படைதல்.

(3) காவிரி —தலைக்காவிரி, பாகமண்டலமும் கனகையாறும், கிருட்டிணராச சாகரம், சிவசமுத்திர நீர்வீழ்ச்சி, ஆடுதாண்டும காவிரி, புகைக்கல் (ஹொகெனகல்) நீர் வீழ்ச்சி, மேட்டூர் அணை, அகண்ட காவிரி, கொள்ளிடப்பிரிவு, தனிக்காவிரி, காவிரி கடலொடு கடத்தல்.

(4) மழை—கடல் ஏரி முதலிய நீர் நிலைகளிலுள்ள நீர் ஆவியாக மாறி மேலெழுதல்; முகில் (மேகம) அமைதல்; குளிர்ந்த காற்றால் நீரணுககளாதல்; கீழ்விழுதல்.

(5) ஒரு மடங்கல் (சிஙகம்)—காட்டில் ஈனப்பட்டு வளர்தல்; பெரிதானபின் வேட்டையாடப் படல்; ஒரு மற விளையாட்டுக குழும்பிற்கு (Circus Company) விற்கப்படல்; பயிற்சியும் புரிவும்; கிழப்படுதல்; விலங்கினச் சாலையடைதல்.

(6) ஓர் ஆலமரம்—ஒரு காகத்தால் விதையிடப்படல்; முளைத்தல்; வளர்தல்; விழுதூன்றல்; பரவுதல்.

(7) ஒரு புத்தகம்—இங்கிலாந்தில் அச்சிடப்பெறல்; கலத்தில் வருதல்; பம்பாயில் இறங்கிப் புகைவண்டியில் வருதல்; சென்னைப் புத்தகக் கடை யடைதல்; ஒரு செல்வரால் வாங்கப் பெறுதல்; பழம் புத்தகக்கடை யடைதல்; ஓர் ஏழையால் வாங்கப் பெறல்; வழிமுறையார்க்குப் பயன் படல்.

(8) ஒரு வேட்டை நாய்—இராசபாளையத்தில் பிறந்து வளர்தல்; வேற்றூரார் கொண்டுபோகப் படல்; பயிற்றப்படல; வேட்டையாடல்; தேர்ச்சி; ஒரு வேளால் வாங்கப்பெறல்.

(9) ஓர் உருள்கல்—மலையிற் பெரிய கல்லாயிருத்தல்; ஆற்றோட்டத்தில் உருண்டுவரல்; வரவரச் சிறிதாதல; வடிவடைதல்; மணியாசக் கல்லாகப் பயன்படல்.

(10) பனிமலை (இமயம்)—கடலுக்குள்ளிருத்தல்; அடி நிலத்துட் கொதிப்பு; நீர்மேலெழல்; விந்தமலையைத் தாழ்த்தல், பெருமை பெறல்.

## பயிற்சி 2

*பின் வருபவற்றின் தன்வரலாறு வரைக:—*

1. ஒரு குதிரை. 2. ஓர் இயங்கி (Motor Car). 3. ஒரு மொழி. 4. ஒரு சொல். 5. சென்னை நகர். 6. புகையிலை. 7. ஒரு கடிகாரம். 8. ஒரு கடிதம். 9. கொக்கோ. 10. வானூர்தி. 11. திரைப்படம். 12 எழுத்து. 13. பொன். 14. ஓர் அணிகலம். 15. தஞ்சைப் பெருவுடையார் கோயில். 16. ஓர் ஆடை. 17. ஒரு நிலம்பெயர் (Migratory) பறவை. 18. ஒரு தெய்வச் சிலை (விக்கிரகம்) 19. ஒரு பேசுங் கிளி.

## 6. உரையாட்டு வரைவு-(Dialogue-Writing)

இருவர் உரையாடுவதுபோல் வரைவது உரையாட்டு வரைவாகும். இவ்வுரையாட்டு, உண்மையாய் நடந்ததாகவு மிருக்கலாம்; நடவாததாகவுமிருக்கலாம். கல்வி நிலையங்களில், பல்வேறு பொருள்களைப்பற்றி உரையாட்டு வரையும்படி மாணவர் கேட்கப்படுவராதலால், அவை பொது வாய் நடவாதவாகவே யிருக்கும்.

மனத்தில் இருவரைப் படைத்துக்கொண்டு அவர் உரையாடுவதுபோல நடிப்புக் காட்டுவதால், உரையாட்டு வரைவிற்குப் பாணிப் பாற்றலும் ஏரண அறிவும் நாடகத் திறமையும் வேண்டும்! ஆதலால், உரையாட்டுவரைவு கட்டுரைவரைவினும் சிறந்த பயிற்சியாகும். உரையாட்டு வரைவில் தேர்ச்சிபெறும் மாணவர், பிற்காலத்தில் சிறந்த புதின (Novel) ஆசிரியராகவோ நாடக நூலாசிரிய ராகவோ விளங்கலாம்.

வரையப்பட்ட உரையாட்டு, இயல்பானதாகவும் எளிய நடையிலும் இருத்தல் வேண்டும். ஆயின், இலக்கணப் பிழை எதுவுமிருத்தல் கூடாது. அதோடு, கொச்சைச் (Slang) சொற்களையும் இடக்கர்ச் (Vulgar) சொற்களையும் விலக்கிவிடல் வேண்டும்.

இயல்பான முறையில் வரைதற்கு, மக்கள் அன்றாட வாழ்க்கையிற் பேசும் பேச்சுக்களைக் கவனித்தல் வேண்டும். இலக்கண நடையில் வரைதற்கு, அறிஞர் எழுதிய புதினங்களையும் உரைநடை நாடக நூல்களையும் படித்தல் வேண்டும்.

உரையாட்டை, ஈரஃறிணைப் பொருள்களிடை நிகழ்வதாகவும் பாணிப்பாய் வரையலாம்.

### i. வரையப்பட்ட உரையாட்டிற்கும் தருக்கக் கட்டுரைக்கும் வேறுபாடு

வரையப்பட்ட உரையாட்டு, சில வொப்புமைபற்றித் தருக்கக் கட்டுரைபோல் தோன்றலாம். ஆயினும் அவ்விரண்டிற்கும் வேறுபாடுண்டு. அவையாவன :—

(1) உரையாட்டில், உரையாடும் இருவர் பெயரும் குறிக்கப்பட்டு, அவ்விருவர் கூற்றும் மாறிமாறி நின்று தனித்தனி முடிதல் வேண்டும்; தருக்கக் கட்டுரையிலோ, தருக்கிக்கும் இருவர் பெயருள் ஒன்றுங் குறிக்கப்படாமல், அவ்விருவருள் ஒருவரே பிறர் கூற்றையுங் கொண்டு கூறித் தம் கூற்றுடன் இணைத்து முடித்தல் வேண்டும்.

(2) உரையாட்டில் குறிக்கப்படும் இருவரும், உரையாட்டு வரைபவரின் வேறானவர்; தருக்கக் கட்டுரையிலோ, கட்டுரை வரைபவரே தருக்கிக்கும் இருவருள் ஒருவர்.

(3) உரையாட்டு, உரையாடுவார் உடன்பட்ட கருத்தைப் பற்றியதாகவுமிருக்கலாம்; அல்லதாகவுமிருக்கலாம்; தருக்கக் கட்டுரையோ, என்றும், உடன்படாத கருத்தைப் பற்றியே யிருக்கும்.

(4) உரையாட்டு இயல்பானதாயிருக்க வேண்டுமாதலால், அது பெரும்பாலும் எளிய நடையிலேயே எழுதப் பெறும். புலவர் உரையாட்டாயின் உயர்ந்த நடையிலுமிருக்கலாம்; ஆனால், தருக்கக் கட்டுரையோ, எளிய நடையிலிருத்தல் வேண்டும் என்னும் யாப்புரவு (நியதி) இல்லை; எழுதுவாரின் திறமைக்குத்தக எவ்வளவு உயர்ந்த நடையிலுமிருக்கலாம்.

## ii. உரையாட்டு வரையும் முறை

(1) உரையாட்டிற்குரிய பொருளைப்பற்றிய கருத்துக்களை யெல்லாம், கட்டுரைக்குக் குறிப்பதுபோற் குறித்துக்கொள்ளல் வேண்டும். உடன்பாட்டுப் பொருளன்றி உறழ்ச்சிப் பொருளாயின் (அதாவது மாறுபட்ட பொருளாயின்) மாறுபட்ட இருவர் கருத்துக்களையும் வேறு வேறு வரிசையிற் குறித்துக் கொள்ளல் வேண்டும்.

(2) அங்ஙனங் குறித்த கருத்துக்களைப் பின்பு ஏரண முறைப்படி ஒழுங்குபடுத்தல் வேண்டும். உடன்பாட்டுப் பொருளாயின், குறித்துக்கொண்ட கருத்துக்களையெல்லாம், தொடர்ச்சி பிறழாதபடி உரையாடும் இருவருக்கும் பகிர்ந்து கொள்ளல் வேண்டும்.

ஒருவர் கூற்றான கட்டுரைக் கருத்துக்கட்கு முன்பின் முறைமையான ஒரே மடி வரிசையும்; இருவர் கூற்றான உரையாட்டுக் கருத்துக்கட்கு, முன்பின் முறைமையும

ஒருவர்பின் இன்னொருவர் முறைமையுமான இருமடி வரிசையும்; அமைக்கவேண்டியிருப்பதை நன்றாய்க் கவனித்தல் வேண்டும்.

(3) உரையாட்டை நிகழ்த்தும் இல்பொருண் மக்கட்கு இடப்படும் பெயர், அவ்வக்கருத்திற் கேற்பப் பொருத்தமாயிருத்தல் வேண்டும். (எ. டு. தமிழனுக்குத் தமிழ்ப் பெயர்; மகமதியனுக்கு அரபிப் பெயர்; ஆங்கிலனுக்கு ஆங்கிலப் பெயர்; கிறித்தவனுக்கு விவிலிய அல்லது ஆங்கிலப் பெயர்)

இன்றியமையாத விடத்திலன்றி, அயல் நாட்டிலும் அயல் மொழியிலும வழங்கும மக்கட் பெயர்களை அமைத்தல் கூடாது. அவற்றை அமைக்க நேரின், தமிழெழுத்திற்கேற்பத் தற்பவப்படுத்தியே அமைத்தல் வேண்டும்.

தமிழர் பெயரெல்லாம் தனித் தமிழிலிருத்தல் நன்று.

(4) உரையாட்டு இயல்பாய்த் தொடங்கி இயல்பாய்த் தொடர்ந்து இயல்பாய் முடிதல் வேண்டும்; திடுமெனத் தொடங்குதலும திடுமென முடிதலும் கூடா.

(5) உரையாடுவோர் கூற்றுக்கள், கூற்று முறையிற் சுருங்கியிருத்தல் வேண்டுமேயன்றிச் சொற்பொழிவு முறையில் விரிவுபட்டிருத்தல் கூடாது.

(6) உரையாட்டு இயன்றவரை படிப்போர்க்குங் கேட்போர்க்கும் இனிமையாயும, இறுதியில் ஒரு முடிந்த முடிபை உணர்த்துவதாயும், இருத்தல் வேண்டும்.

கட்டுரைக்குக் கூறியவற்றுள், ஏற்பனவெல்லாம் இதற்குங் கொள்க.

## போலிகைகள்

(i) 'கடவுள் உண்டா?' என்பதைப் பற்றி, இரு மாணவ நண்பரிடை நிகழ்ந்த உறழ்ச்சி யுரையாட்டு.

**ஐயம்பெருமாள்:**—வாரும் நண்பரே! வணக்கம். என்ன, நெடுநாளாய் உம்மைக் கண்ணிலேயே காணேன்!

அறிவுடைநம்பி :—வணக்கம். என்ன, இப்படிச் சொல்லு கிறீர்? நேற்றுக்கூட உம்மைப் பார்க்க உம் வீட் டிற்கு வந்தேனே! நீர் எங்கேயோ போய்விட்டீராம்.

ஐயம்பெருமாள் :—ஆம். நீர் வந்ததாக வீட்டில் சொன்னார் கள். நான் பகுத்தறிவுக் கழகத்தில் ஒரு சொற் பொழிவு கேட்கப் போயிருந்தேன்.

அறிவுடைநம்பி :—பின்னே என்னைக் குறை சொல்கிறீரே, நீர் போய்விட்டு!

ஐயம்பெருமாள் :—சரி. நீர் இப்போது நன்றாயிருக்கிறீரா?

அறிவுடைநம்பி :—ஆம். கடவுளருளாலும் உம் நல்லெண் ணத்தாலும் நன்றாயிருக்கிறேன்.

ஐயம்பெருமாள் :—என்ன, நீர் இன்றும் பழைய கருநாடக மாயிருக்கிறீர்? என் நல்லெண்ணத்தால் என்று சொன்னது சரிதான். கடவுளருளால் என்கிறீரே! கடவுள் என்று ஒன்று இருக்கிறதா?

அறிவுடைநம்பி :—ஆம். பின்னே இல்லையா? கடவுளில்லா மலா இந்த உலகமெல்லாம் நடந்துவருகிறது?

ஐயம்பெருமாள் :—என்ன, அப்படிச் சொல்கிறீர்? நீர் கட வுளை என்றைக்காவது கண்டதுண்டா?

அறிவுடைநம்பி :—நான் காணவில்லை. ஆனாலும், நம் முன் னோர்கள் கண்டிருக்கிறார்களல்லவா?

ஐயம்பெருமாள் :—முன்னோர் கண்டது இருக்கட்டும். நீர் கண்டீரா?

அறிவுடைநம்பி :—ஆம். நானும் அகக்கண்ணால் காணத் தான் செய்கிறேன்.

ஐயம்பெருமாள் :—அகக்கண்ணால் காண்கிறதென்றா லென்ன? நீர் கருதுகிறதெல்லாம் அகக்கண்ணால் காண்கிறதுதான்.

அறிவுடைநம்பி :—அப்படியா? இதோ ஒரு வீடிருக்கிறது. கட்டுகிறவனில்லாமல் இவ்வீடு வந்திருக்குமா? அது போல், கடவுளில்லாமல் இவ்வுலகந் தோன்றியிருக்குமா? காரணமிருந்தால்தானே காரியந்தோன்றும்?

ஐயம்பெருமாள் :—காரணமிருந்தால்தான் காரியந் தோன்றும், என்பது சரிதான். இவ்வுலகத்தைத்தான் கடவுள் படைத்தார் என்கிறீர். அக்கடவுளைப் படைத்தவர் யார்?

அறிவுடைநம்பி :—அவர் தாமாய்த் தோன்றினர்

ஐயம்பெருமாள் :—அவர் தாமாய்த் தோன்றமுடியுமானல். இவ்வுலகம் ஏன் தானாய்த் தோன்றியிராது?

அறிவுடைநம்பி :—அது இருக்கட்டும் கடவுள் தம்மை நம்பினவர்க்கு உதவி செய்கின்றரே! பழைய காலத்தில் எத்தனையோ அடியார்க்கு அருள் செய்திருக்கிறார். இப்போதும் அவரை நம்பிக் கேட்டவர்க்கு இல்லாமல் வேண்டியது கிடைக்கிறது. நானே எத்தனையோ முறை பல காரியங்களை வேண்டிப் பெற்றிருக்கின்றேன். இதற்கென்ன சொல்கிறீர்?

ஐயம்பெருமாள் :—கடவுளை நம்புகிறவர்க்கு மட்டுமா இவ்வுலகத்தில் வேண்டியது கிடைக்கிறது? நம்பாதவர்களுக்குங் கூடத்தான் கிடைக்கிறது. சொல்லப்போனல், நம்பாதவர்களுக்குத்தான் அதிகமாய்க் கிடைக்கிறது. எத்தனைபேரை எடுத்துக் காட்டவேண்டும்? கடவுளை நம்பினவரெல்லாம், வறுமைப்பட்டுநோய்ப்பட்டும் பலவகையாய்த் துன்பப்பட்டும், இளமையிலேயே இறந்துபோக; நம்பாதவர்கள், பெருஞ் செல்வராகவும் வலியராகவும் நீடுவாழியராகவுமிருந்து, இந்திர இன்பத்தை நுகர்வதை நீர் கண்ணெதிரே காணவில்லையா?

அறிவுடைநம்பி :—ஆம்; காண்கிறேன். ஆனால், அவர்களெல்லாம் திருந்தும்படி, கடவுள் அவர்களைக்கூடக் கொஞ்சக்காலம் விட்டுவைக்கிறார்; திருந்தினவர்களைத் தம்மிடம் முந்திச் சேர்த்துக்கொள்கிறார்.

ஐயம்பெருமாள் :—கூடக் கொஞ்சக்காலம் விட்டுவைத்தும் திருந்தாதவர்களைக் கடவுள் என்ன செய்வார்?

அறிவுடைநம்பி :—நரகத்தில் போடுவார்.

ஐயம்பெருமாள் :—மக்கள் தாம் செய்த குற்றத்திற்குத் தக்கபடி, இவ்வுலகத்திலேயே அரசனால் தண்டிக்கப்படும்போது, அவர்களை ஏன் திரும்பவும் கடவுள் தண்டிக்கிறார்?

அறிவுடைநம்பி :—அரசன் மாந்தனே யாதலால், அவனால் கண்டுபிடிக்கமுடியாத குற்றங்களுக்கெல்லாம் கடவுள் தண்டிக்கிறார்.

ஐயம்பெருமாள் :—நரகம் எங்கே யிருக்கின்றது? நரகத் தண்டனை எப்போது? எப்படிப்பட்டது? எவ்வளவு காலம்? அதன்பின் என்ன நேரும்?

அறிவுடைநம்பி :—அவற்றைப்பற்றித் திட்டமாய்ச் சொல்ல முடியாது.

ஐயம்பெருமாள் :—அப்படியானால் நரகத்தைப் பற்றி உமக்கு எப்படித் தெரியும்?

அறிவுடைநம்பி :—பெரியோர்கள் எழுதிவைத்ததுதான்.

ஐயம்பெருமாள் :—பெரியோர்கள் எந்தக் காலத்தில் எழுதிவைத்தார்கள்? அறிவில்லாத பழங் காலத்திலல்லவா? வரவர அறிவு வளர்ந்துவருவதை நீர் அறியவில்லையா? அறிவிலாக் காலத்தில் எழுதிவைத்ததையா அறிவுள்ள காலத்தில் நம்புவது?

அறிவுடைநம்பி :—எந்தக் காலத்தில் எழுதிவைத்தாலென்ன? நம்பவேண்டியதை நம்பித்தானே ஆகவேண்டும்?

ஐயம்பெருமாள் :—சரி, அந்தக் குருட்டு நம்பிக்கையிருக்கட்டும். கடவுள் ஏன் திருநதினவர்களை முந்திச் சேர்த்துக்கொள்கிறார் ?

அறிவுடைநம்பி :—வீட்டிலெகில், அவர்கள் இவ்வுலகச் சிற்றின்ப வாழ்வினுஞ் சிறந்த பேரின்ப வாழ்வு நிலையாக வாழ்வதற்கு.

ஐயம்பெருமாள் :—ஓகோ ! முதலுக்கே கேடாயிருக்கும்போது வட்டியையுங் கேட்டாற்போல, கடவுளிருப்பதே ஐயத்திலிருக்கும்போது நீர் வீடு நரகங்களையும் இழுத்துக்கொண்டு வருகிறீர். யார் பேரின்பத்தைக் கண்டது? எவராவது பேரின்பத்தைக் கண்டவர் இங்கு திரும்பிவந்து யாரையுங் கூட்டிக்கொண்டு போனதுண்டா ? நாய் நீரிலுள்ள நிழலை நம்பித் தன் வாயிலுள்ள இறைச்சியை இழந்தாற்போல, ஏன் இல்லாத இன்பத்தை எண்ணிக்கொண்டு இருக்கிற இன்பத்தையும் இழக்கிறீர்கள் ?

அறிவுடைநம்பி :—சரி ; பேரின்ப வாழ்வைப்பற்றி உமக்கு நம்பிக்கையில்லாவிட்டாலும், மக்கள் ஒழுக்கமாய் வாழ்வதற்காவது கடவுளச்சம் இன்றியமையாததென்பதை ஒத்துக்கொள்கிறீரா, இல்லையா ?

ஐயம்பெருமாள் :—அதெப்படி ஒத்துக்கொள்ள முடியும் ? கடவுளச்சமில்லாத ரசிய நாட்டில் மக்கள் ஒழுக்கமாயில்லையா ? அங்குதானே ஏழை யெளியவர்க்குப் பெருநன்மை ஏற்பட்டிருக்கின்றது? கடவுளை நம்புகிறவரெல்லாம் ஏழைபாழைகளை ஏமாற்றிக்கொண்டிருக்க, நம்பாதவர்மட்டும் அவர்க்கு நன்மை செய்திருப்பது, உமது கூற்றுக்கு முரணாகவும் கொள்கைக்கு மாறாகவுமல்லவா இருக்கின்றது ?

அறிவுடைநம்பி :—சரி. நீர் சொல்வதை ஒத்துக்கொள்கிறேன். ஆனாலும், கடவுளிருக்கிறார் என்பதை எங்ஙனம் எல்லாரும் நம்பும்படி மெய்ப்பிக்க முடியாதோ,

அங்ஙனமே அவர் இல்லை யென்பதையும் மெய்ப்பிக்க முடியாது. இரு கொள்கைகளுக்கும் பல ஏதுக்களும் சான்றுகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால், இவற்றுள் எது பாதுகாப்பானது என்பதை அறிந்து அதைக் கடைப்பிடிக்கவேண்டும். கடவுள் உண்மையில் இல்லையென்றால், அதனால், நம்பினவர் நம்பாதவர் ஆகிய இருசாரார்க்கும் கேடில்லை. ஆனால், ஒருவேளை அவர் இருந்து, அவரை நம்பினவர்க்கு இன்பமும் நம்பாதவர்க்குத் துன்பமும் ஏற்படுமானால், அப்போது என்ன செய்வது? ஆதலால், கடவுளிருக்கிறார் என்று நம்புவதுதானே நல்லது? இதையாவது ஒத்துக்கொள்கிறீரா, இல்லையா?

ஐயம்பெருமாள் :—ஆம். இதை வேண்டுமானால் ஒத்துக் கொள்கிறேன்.

(ii) ஒருவரது சொற்பொழிவைப்பற்றி ஈராசிரியமாணவர் நிகழ்த்திய உடன்பாட் டுரையாட்டு.

நக்கீரர் :—வணக்கம் ஐயா!

மதியழகர் :—வணக்கம் ஐயா!

நக்கீரர் :—நேற்றுத் திருமலையாண்டார் ஆற்றிய சொற்பொழிவிற்கு வந்திருந்தீர்களா?

மதியழகர் :—ஆம். வந்திருந்தேன். உங்களைக்கூட முன் விசி (bench) யிற் கண்டேன்.

நக்கீரர் :—சொற்பொழிவு எப்படியிருந்தது?

மதியழகர் :—என்நாளும்போல்தான் இருந்தது. கடந்த பன்னீராண்டுகளாகச் சொல்லிவரும் கருத்துக்களைத்தான் நேற்றும் சொன்னார்.

நக்கீரர் :—அவர் சொன்ன கருத்துக்களெல்லாம் உங்கட்கு உடம்பாடுதானா?

**மதியழகர் :**—எங்ஙனம் உடம்பாடாகும்? ஆசிரியனாக இருந்துகொண்டு, ஆசிரியனுக்கு மாறான கருத்துக்களை ஏற்றுக்கொள்ள முடியுமா?

**நக்கீரர் :**—உலகத்திலுள்ள அறிஞரெல்லாம் ஆசிரியர்க்குச் சம்பளம் குறைவென்று கூறும்போது, நேற்று அவர் சொன்னதைப் பார்த்தீர்களா? துவக்கப்பள்ளியாசிரியரும், நடுநிலைப்பள்ளி யாசிரியரும், உயர்நிலைப பள்ளி யாசிரியரும், வருவது வாய்க்குங் கைக்கும் எட்டாது பெரும்பாடு படும்போது, அவர்க்குச் சம்பளம் அதிகமென்று கூறுவது, எத்துணை அறிவற்ற குறும்புத்தனமான கொடுங்கூற்று! முதற்றரக் கல்லூரிகளில் ஒருசிலரான பேராசிரியர்க்குப் பெருஞ் சம்பளம் கிடைப்பினும், அதை அதிகமென்று எவர் சொல்லமுடியும்? பிறதுறைகளிலுள்ள மேற்பதவியாளர் ஆயிரக்கணக்காய் வாங்கும்போது, ஆசிரியத் துறையிலுள்ளவர் மட்டும் ஏன் நூற்றுக்கணக்காய் வாங்குதல் கூடாது?

**மதியழகர் :**—அவர் ஆசிரியராயிருந்தால்தானே ஆசிரியத் தொழிலின் வறுமை தெரியும்?

**நக்கீரர் :**—இதற்கு ஆசிரியராகவா இருக்கவேண்டும்? ஆசிரியர் சம்பளந்தான் அனைவருக்குந் தெரியுமே!

**மதியழகர் :**—ஆசிரியரும் பிறரைப்போல்தானே பட்டம் பெற்றவர் என்று அவர் கருதுகிறார்போலும்!

**நக்கீரர் :**—ஆசிரியர் அறிவை அவர் பட்டத்தைக்கொண்டா அளந்தறிவது? பிறரெல்லாம ஒரு தேர்விற்குரிய ஒரே தொகுதிப் புத்தகங்களைப் படித்துள்ளனர். அவர் படித்தவற்றுள்ளும பெரும்பகுதியை மறந்திருக்கின்றனர். ஆசிரியரோ, ஆண்டுதொறும் வெவ்வேறு தேர்விற்குரிய புதுப்புதுப் புத்தகத் தொகுதியைப் படிப்பதுமன்றி, தாம் படித்தவற்றை மறவாது போற்றியும் வருகின்றனர். ஆசிரியர் திறத்தை நோக்

கின், ஆண்டுதோறும் ஒரு பட்டம் பெறுகின்றவராக வன்றோ அவரைக் கருதவேண்டும்? மேலும், ஆசிரியன் படிப்பிற்கும் மாணவன் படிப்பிற்கும் எத்துணை ஏற்றத் தாழ்வுளது! ஒரோவொரு நல்லமாணவர் தவிரப் பிறரெல்லாம் சிலபல தேர்வு வினாக்கட்கே விடை யெழுதக்கூடியவராயிருக்க, ஆசிரியரெல்லாம் அவரவர் பாடத்தில் எல்லா வினாக்கட்கும் விடை யிறுக்கும் ஆற்றலராயிருக்கின்றனரே!

**மதியழகர்** :—நேற்று அவர் ஆசிரியர் சம்பளத்தைப்பற்றி மட்டுமா சொன்னார்? ஆசிரியர்க்கும் மாணவர்க்கும் விடுமுறை அதிகம் என்றுகூடச் சொன்னாரே!

**நக்கீரர்** :—விடுமுறை எதற்காக விடுவது? மூளைக்கு ஓய்வு கொடுக்கவேண்டுமென்றன்றோ? பிற வேலைகளெல்லாம், பெரும்பாலும், ஒருநாட் போன்றே எந்நாளும் செய்யும் வழக்கமுறைப்பட்டவை. மாணவரும் ஆசிரியருமோ, மூளையை வருத்தி அரும்பொருளைக் கற்றும் ஆய்ந்தும் வருகின்றனர். அதிலும், மாணவர் மூளை மிக இளந்திருத்தலின், அவருக்கு மும்மாதத்திற்கொருமுறை விடுமுறையும், வெப்பம் மிக்க கோடைக்காலத்தில் நீண்ட விடுமுறையும் வேண்டியுள்ளன. ஆசிரியர் மாணவரினும் வலிய மூளையரேனும், அன்றாடம் பாடத்தை ஆயத்தம் செய்து மாணவர் பயிற்சிகளைத் திருத்தவேண்டியிருத்தலானும், விடுமுறையில் விடைத்தாட்களைத் திருத்தும் வேலை மூளுதலானும், இடையிடை படிப்பும் ஆராய்ச்சியும் சூழ்வும் நிகழ்தலானும், அவர்க்கும் மாணவர்க்குப்போல் விடுமுறைகள் வேண்டுவனவே. இவற்றையெல்லாம் நோக்காது, ஆசிரிய மாணவர்க்கு விடுமுறையைக் குறைத்து வேலைநாளைப் பெருக்கவேண்டுமென்று, குருட்டுத்தனமாய்க் கூறுவது, என்னே பேதைமை!

**மதியழகர்** :—அவர் கற்றிருந்தாலன்றோ அவருக்குக் கல்வியின் அருமை தெரியும்? ஏதோ நாலாவது முடித்த

பின், சில உரைநடைப் புராணங்களையும் செய்தித் தாட்களையும் படித்துவிட்டு, இங்ஙனம் தம் மதிக்குத் தோன்றியவாறு என்னென்னவோ பேசுகின்றார்.

**நக்கீரர்** :—அவர் உயர்தரக் கல்வியில்லாதவர் என்பது உண்மைதான். ஆயினும், ஒரு பொதுமேடையேறிப் பேசும்போது, பொறுப்பாகவன்றோ பேசவேண்டும்? 'ஆசிரிய மாணவர்க்கு வேலை கொஞ்சம்; விடுமுறை மிகுதி,' என்னும் போலிக்கூற்று, பொதுமக்கள் உள்ளத்திலும் ஆசிரியப் பட்டறிவில்லாத அமைச்சர் பார்வையிலும், உண்மைபோலன்றோ தோன்றும்? ஏற்கெனவே ஆசிரியச்சார்பாகக் கண்ணோட்டமில்லாத நம் நாட்டில், இத்தகைய போலிக்கூற்றுக்களைப் பரப்பின், ஆசிரியர்க்கு இப்போதுள்ள வசதிகளே அளவுக்குமிஞ்சியவை என்பது பட்டு, மேற்கொண்டு அவர் முன்னேற்றத்திற்கும் உயர்விற்கும் இடமில்லாதன்றோ போகும்? துவக்கப்பள்ளியாசிரியர் நிலையெல்லாம் எக்காலம் திருந்தும்?

**மதியழகர்** —ஆ! இவர் சொல்லினால் ஆசிரியர் முன்னேற்றம் நின்றுவிடுமா? நாட்டில் வேறு அறிஞர் இல்லையா? நீர் ஏன் இதற்கு இத்துணை மனவருத்தங் கொள்கின்றீர்? ஆசிரியர்க்கும் நற்காலம் வரததான் செய்யும்; பொறுமையாயிரும்.

**நக்கீரர்** :—ஆம். நீர் சொல்வது சரிதான். நேற்றுக்கூட அவர் சொற்பொழிவிற்குத் தலைமைதாங்கிய வழக்கறிஞர் மன்றவாணர், தம் பின்னுரையில் சொற்பொழிவாளரை வெட்டித்தான் பேசினார். பேசுவதற்கு வேறு பொருளில்லாததினால்தான், சொற்பொழிவாளர்கூட அங்ஙனம் பேசநேர்ந்தது. ஆதலால், இதைச் சற்றும் பொருட்படுத்தவேண்டியதில்லை. நான் சென்றுவருகிறேன். வணக்கம.

**மதியழகர்** :—வணக்கம்.

## பயிற்சி 1.

பின்வருமாறு படைத்துரை உரையாட்டு வரைக :—

(1) ஓர் ஆசிரியருக்கும் ஓர் அரசியற் கணக்கருக்கும் நிகழ்வது.
(2) ஓர் உழவனுக்கும் ஒரு கைத்தொழிலாளிக்கும் நிகழ்வது.
(3) ஒரு முதலாளிக்கும் ஒரு தொழிலாளிக்கும் நிகழ்வது.
(4) ஓர் அரசனுக்கும் ஓர் அமைச்சருக்கும் நிகழ்வது.
(5) ஒரு பண்ணையாருக்கும் ஒரு பண்ணையாளுக்கும் நிகழ்வது.
(6) இரு வழிப்போக்கரிடை நிகழ்வது.

## பயிற்சி 2.

பின்வருமாறு பாணிப்புரையாட்டு வரைக :—

(1) ஓர் எருதிற்கும் ஒரு குதிரைக்கும் நிகழ்வது.
(2) ஓர் அரிமாவிற்கும் ஒரு நரிக்கும் நிகழ்வது.
(3) ஒரு கழுதைக்கும் ஒரு நாய்க்கும் நிகழ்வது.
(4) ஒரு வீட்டெலிக்கும் ஒரு காட்டெலிக்கும் நிகழ்வது.
(5) இரு நாய்களிடை நிகழ்வது.
(6) ஒரு வீட்டுக் கோழிக்கும் ஒரு கூண்டுக் கிளிக்கும் நிகழ்வது.

## பயிற்சி 3.

பின்வருமாறு பாணிப்புரையாட்டு வரைக :—

(1) ஒரு புத்தகத்திற்கும் ஒரு செய்தித்தாளுக்கும் நிகழ்வது.
(2) ஓர் அச்சுப் பொறிக்கும் ஒரு கையச்சுப் பொறிக்கும் (Type-writer) நிகழ்வது.
(3) ஓர் எழுதுகோலுக்கும் (Pencil) ஓர் தூவலுக்கும் (Pen) நிகழ்வது.
(4) ஓர் உரலுக்கும் ஒரு மத்தளத்திற்கும் நிகழ்வது.
(5) ஒரு நாற்காலிக்கும் ஒரு முட்டாளுக்கும் (Stool) நிகழ்வது.
(6) ஒரு தாள் நாணயத்திற்கும் ஓர் உலோக நாணயத்திற்கும் நிகழ்வது.

## பயிற்சி 4.

பின் வருபவற்றைப் பற்றி உரையாட்டு வரைக :—

(1) தனியுடைமை, பொதுவுடைமை-இவற்றுள் எது நல்லது?
(2) இந்தியப் பொதுமொழி யாதற்கேற்றது ஆங்கிலமா? இந்தியா?
(3) தேர்வு நடாத்துவது நல்லதா? தீயதா?
(4) சீர்திருத்தம் மெள்ள மெள்ள நடைபெறுவது நல்லதா? திடுமென்று நடைபெறுவது நல்லதா?
(5) நாட்டுவாழ்க்கை நகரவாழ்க்கை என்னுமிரண்டில் எது நல்லது?
(6) அரசியல் மதத்தில் தலையிடவேண்டுமா? தலையிடக் கூடாதா?

## பயிற்சி 5.

பின்வருந் தலைப்புப்பற்றி உரையாட்டு வரைக :—

(1) மதுவிலக்கு.
(2) கொலைத்தண்டனை நீக்கம்.
(3) துறவறம்.
(4) பிறப்புப்பற்றிய குலப்பிரிவு.
(5) கட்டாய இந்திக் கல்வி.
(6) புலாலுண்ணாமை.

## பயிற்சி 6.

பின்வரும் உரையாட்டுக்களை முடிக்க :—

**1. சொந்த மருத்துவசாலை வைத்துள்ள இரு பண்டவரிடை (Doctors) நிகழ்வது.**

**நஞ்சுண்டபெருமாள் :**—என்ன அண்ணா! ஆறுமாதமாக என் மருத்துவசாலைக்கு ஒரு நோயாளிகூட வரவில்லையே!

**கண்ணப்பர் :**—எனக்கும் அப்படித்தான் தம்பி! நீண்ட நாளாய் ஒரு வருமானமுமில்லை.

**2. தேர்வுக்கூட்டத்திலிருந்து வெளியேவரும் இரு மாணவரிடை நிகழ்வது.**

**பெருந்துத்தன் :**—தேர்வெப்படி யெழுதினீர்?

**வெற்றிவேல் :**—நன்று யெழுதியிருக்கின்றேன்.

**3. பேசுவார் இருவரிடை நிகழ்வது.**

**பேகன் :—** அதென்ன கூட்டம்? கலகம்போல் தெரிகின்றது! தடியடி கூட நிகழ்கின்றதே!

**நாகன் :—** இல்லை. அது ஊர்காவலர் கலக அடக்கப் பயிற்சி.

**4. இரு நண்பரிடை நிகழ்வது.**

**அழகப்பன் :—** வருகிற வேனில் விடுமுறைக்கு எங்கே செல்லலாம்?

**முருகையன் :—** குற்றாலம் செல்லலாமா?

**5. தந்தைக்கும் மகனுக்கும் நிகழ்வது.**

**தந்தை :—** திருநாவுக்கரசு! நீ கூட இன்றைக்கு வேலை நிறுத்தத்திற் கலந்து கொண்டாயாமே! மெய்தானா?

**மகன் :—** ஆம். அப்பா!

**6 இரு மாணவரிடை நிகழ்வது.**

**மழவரையன் :—** நீ என்ன விருப்பப்பாடம் எடுத்திருக்கின்றாய்?

**முனையதரையன் :—** கணிதம்

## 7. கட்டுரை வரைவு-(Essay Writing)

**i. முன்னுரை குறிப்புக்கள் :**

கட்டுரை என்பது, உறுதிமொழி, உண்மைக்கூற்று, படைத்துமொழிகிளவி, கோப்புரை எனப் பல பொருள் தரும். இங்கு இறுதிய பொருளில ஆளப்பெற்றுள்ளது. இப்பொருளில் முதன்முதல் ஆண்டவர் **மறைமலையடிகள்.**

ஒரு பொருளைப்பற்றிப் பல கருத்துக்களை யிசைத்துக் கோவைபடவரையும் சொற்பெருக்கு அல்லது சிறு சுவடி, **கட்டுரை**யாகும். இது எழுதுவாரின் திறமும் நோக்கமும்

காலவசதியும்பற்றி, ஒரு பக்கமுள்ள துண்டு வெளியீட்டளவிலிருந்து நூறுபக்கமும் அதற்குமேலுமுள்ள நூலளவு வரை பல்வேறு அளவுள்ளதாயிருக்கலாம். ஆனால், பொதுவாய், நூலளவினுங் குறுகியதாயிருப்பதே கட்டுரையெனப்படும். நூலுங் குறுகிய அளவுள்ளதாயிருக்கலாம். நூலுக்குங் கட்டுரைக்கும் வேறுபாடென்னையெனின், முன்னதிற்குப் பாலியலதிகாரப் பாகுபாடுண்மையும் பின்னதிற்கு அஃதின்மையுமாகும்.

பாலியலதிகாரப் பாகுபாடற்ற நீண்ட வரைவுகளெல்லாம் பொருட்டெளிவும் ஒழுங்குமற்றிருக்குமாதலின், கட்டுரையெனத் தக்கது மிக நீண்ட அளவினதாயிருத்தல் முடியாது அல்லது கூடாது.

கட்டுரைகளை, தரம்பற்றி, (1) அறிஞர் கட்டுரை அல்லது அறிவுக் கட்டுரை என்றும், (2) மாணவர் கட்டுரை அல்லது பயிற்சிக் கட்டுரை என்றும், இருதிறமாய்ப் பகுக்கலாம். அறிஞர் கட்டுரை நூறு பக்கமும அதற்கு மேலும் நீண்டிருக்கலாமெனினும், மாணவர்க்காக எழுதப்படின் முப்பது பக்கத்தின் மிகாதிருத்தல் நல்லது. மாணவர் கட்டுரையோ, என்றும், முபபக்கத்திற்குட்பட்டே யிருத்தல் வேண்டும்.

## ii. சிறந்த கட்டுரையின் கூறுகள் :

### (1) ஒருமைப்பாடு (Unity) :

ஒரு கட்டுரை ஒரே பொருளைப்பற்றியதா யிருத்தல் வேண்டும்; பல பொருள் பற்றியதாயும் மற்றொன்று விரித்தலாயுமிருத்தல் கூடாது. ஒவ்வொரு பாகியும் ஒவ்வொரு கருத்தையே கொண்டிருத்தல் வேண்டும்.

### (2) பொருட்பொலிவு :

சுருங்கச் சொல்லி விளங்கவைக்கு முறையில், பல சிறந்த கருத்துக்கள் செறிந்திருப்பது கட்டுரைக்குச் சிறப்பாம். கட்டுரைப் பொருள் சரியாக வரையறுக்கப் பெறுவது (Definition) இன்றியமையாதது.

(3) ஒழுங்கு (Order):

ஒரு பொருளைப்பற்றிய கருத்துக்களையெல்லாம் முன் பின் தொடர்பு கெடாதவாறு முறைப்படுத்தி, அம் முறைப்படியே சேரவைபட எழுதுவது, பொருள் தெளிவையும் கட்டுரைப் பொலிவையும் உண்டு பண்ணும்.

(4) பாகியமைப்பு (Paragraph-Structure):

ஒவ்வொரு கருத்தையும் ஒவ்வொரு தனிப் பாகியில் அமைத்து வரைதல் வேண்டும். ஒரு பெருங் கருத்தில் பல உட்கருத்துக்களிருக்குமாயின், அவ்வுட்கருத்துக்களையும் வெவ்வேறு பாகியிலமைத்தல் வேண்டும். தோற்றப் பொலிவு படிப்புவசதி பொருள்தெளிவு ஆகிய மூன்றும் பாகியமைப்பின் பயனும்.

குறிப்பு—கல்லூரி மாணவரும், சிலர், பாகியமைப் பின்றிக் கட்டுரை வரைவதால், உயர்நிலைப்பள்ளி வகுப்புக் களிலேயே தமிழாசிரியர் இப் பிழையைத் திருத்திவிடல் வேண்டும்.

(5) நன்னடை (Good Style):

ஒவ்வொரு வரைவாளரும், தம்தம் திறமைக்கேற்ற இயல்பான நடையில், எழுத்துப்பிழை சொற்பிழை புணர்ச்சிப்பிழை வாக்கியப்பிழை பொருட்பிழை மரபுப் பிழை ஆகிய அறுவகைப் பிழைகளுமின்றி, இலக்கண நடையாய் வரைதல்வேண்டும்.

ஒரு மாணவன் தன் சொல்லறிவிற்கேற்றபடி, எளிய சொற்களையும் சொற்றொடர்களையுமாவது, உயர்ந்த சொற் களையும் சொற்றொடர்களையுமாவது அமைத்தெழுதலாம். ஆயின், இலக்கணப்பிழை எதுவுமிருத்தல் கூடாது. ஆகவே, சொன்னடை பலதிறப்படினும், இலக்கணநடை அவை யெல்லாவற்றிற்கும் இன்றியமையாதது என்பதை, நினைவிலிருத்துதல் வேண்டும்.

உயர்ந்த சொன்னடை என்பது, 'ஆண் யானை சுத்தினது' என்பதைக் 'களிறு பிளிறினது' என்று கூறும் தகுந்த சொன்னடையேயன்றி, 'யானை சென்றது' என்பதை 'வேழம் படர்ந்தது' என்று கூறும் அருஞ்சொல் நடையன்று.

உயர்நடை எல்லார்க்கும் இயல்பாய் அமையாமையானும், பெரும்பாலும் அறிஞரைப் பின்பற்றிப் பயில்வதாலேயே பலர்க்கு உயர்நடை அமைவதானும், நடையிற் பிறரைப் பின்பற்றிப் பயிலுந்திறம் கடியப்படுவதன்று. ஆயின், பின்பற்றப்படுவார் இலக்கண அறிவில் உயர்ந்தாராயிருத்தல்வேண்டும். திருமிகு மறைமலையடிகள், திருவாளன்மார் கலியாணசுந்தர முதலியார், கதிரேசன் செட்டியார், வேங்கடசாமி நாட்டார், ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, மகிழ்நனர் (K. P. சந்தோஷம), சேதுப்பிள்ளை, ஜெகவீரபாண்டியனார், டாக்டர் மு. வரதராசனார் முதலியோர் நடைகளை மாணவர் பின்பற்றுவது நன்று.

பிறர் நடையைப் பின்பற்றுதலாவது, அவர் நடையைப் பன்முறை படித்தும் வரைந்தும் பயின்று அதைத் தன்னடையாக்கிக் கொள்வதலலது, அவர் எழுதியதில் ஒரு பகுதியை உருப்போட்டுக் கொள்வதன்று. 'காக்கை அன்னநடை நடக்கப்போய்த் தன்னடையுங் கெட்டது போல,' பிறர்நடையைப் பின்பற்றும திறமையில்லாதார் பிறர்நடையைப் பின்பற்றின், தந்நடையுங் கெடுவரென்பது திண்ணம.

தகுசொல், இன்சொல், இணைமொழி, மரபுத்தொடர் மொழி, பழமொழி, அணிமொழி ஆகியவை நடையைச் சிறப்பிக்கும.

வழக்கிலிருப்பினும் இல்லாவிடினும், தமிழ்ச்சொல் லிருக்கும்போது அதற்குப் பதிலாய் அயற்சொல்லை வழங்குதல் கூடாது. வழக்கு வீழ்ந்த தமிழ்சசொல்லின் பொருளைத் தெரிவித்தற்பொருட்டு அதனையடுத்துப் பிறைக்

கோட்டில் வழக்கூன்றிய அயற்சொல்லைக் குறித்தல்வேண்டும்.

## (6) தெளிவும் துப்புரவும் (Legibility and Neatness):

கட்டுரை முழுதும் இருண்ட மையில் தெளிவாக எழுதப்பெறல்வேண்டும். விளங்காத அளவு கூட்டெழுத்தாயெழுதுதல் கூடாது. அடிக்கடித்தொழுதாமல் ஒரே தடவையில் செவ்வையாய் எழுதப் பழகிக்கொள்ளவேண்டும்.

எண்ணுமல் விரைந்தெழுதுவதிலுலேயே பெரும்பாலும் அடித்தெழுத நேர்கிறது. அடித்தெழுதுவதைச் சற்று எண்ணியெழுதினால், முதன்முறையிலேயே திருத்தமாய் எழுதிவிடலாம்.

எழுத்து வேகத்தைப் படிப்படியாய்த்தான் மிகுத்தல் வேண்டும்.

## (7) பொருத்தவீதம் (Proportion)

ஒவ்வொரு பொருட்பகுதியையும் கருத்தையும்பற்றி, அததற்குரிய அளவே எழுதுதல்வேண்டும். ஒரு கட்டுரையின் முகவுரையை விரித்தும் முக்கியப் பகுதியைச் சுருக்கியும்; அல்லது ஒரு பொருளின் நன்மை தீமையைப் பற்றி வரையும்போது, நன்மையைப்பற்றி விரித்தும் தீமையைப்பற்றிச் சுருக்கியும்; அல்லது ஒரு பொருளைப்பற்றிய பல கருத்துக்களில், ஒன்றைப்பற்றி விரித்தும் பிறவற்றைப் பற்றிச் சுருக்கியும்; வரைதல் கூடாது.

மாணவர் கட்டுரை காலத்தாலும் அளவாலும் வரம்புபட்டிருத்தலின், ஒரு பகுதியைச் சுருக்கின் மற்றொரு பகுதியை விரித்தே எழுத நேரும். இதனால், குன்றக்கூறல் மிகைபடக்கூறல் என்னும் குற்றங்கள் உண்டாம. ஆதலால், ஒவ்வொரு கருத்தின் அளவையும் உள்ளத்தில் நிலையிட்டுக்கொண்டு, அதன்பின் அதனைப் பற்றி அததற்குரிய அளவு வரைதல்வேண்டும்.

(8) அளவு மிகாமை :

எந்தக் கட்டுரையும் குறித்த அளவிற்கு மிஞ்சியிருத்தல் கூடாது. அரைத்தாட் பக்கத்தில் (Fool's Cap Size), நடுநிலைப்பள்ளி மாணவர் அரைப் பக்கமும், உயர்நிலைப் பள்ளி மாணவர் ஒரு பக்கமும், இடைநடு (Intermediate) மாணவர் இரு பக்கமும், கலையிளைஞன் (B. A.) மாணவரும் அவருக்கு மேற்பட்ட வகுப்பினரும் முப்பக்கமும், வரைதல்வேண்டும். இவ் அளவீடு தேர்வு (பரீட்சை) பற்றிக் குறித்தது. மாணவர், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பொதுவாய்க் கட்டுரை வரையும் குறிப்புப் புத்தகம் (Note book) கால்தாள் பக்கங் கொண்டதாதலின், அதற்குத்தக, மேற்குறித்த அளவை இருமடங்காக்கிக்கொள்ளுதல் வேண்டும்.

குறித்த அளவிற்குக் காற்பக்கம் அரைப்பக்கம் கூடினுற் குற்றமின்று. ஆயின், ஒரு பக்கமும அதற்குமேலும் கூடுதல் கூடாது.

குறிப்பு :—

(i) தேர்வு வினாத்தாளில் கட்டுரையளவு குறிக்கப்படினும், சில மாணவர் அதைக் கவனியாது பத்துப் பதினைந்து பக்கம் வரை வரைந்துவிடுகின்றனர் கீழ் வகுப்புக்களிலேயே ஆசிரியர் இதைக் கண்டித்துத் திருத்துதல் வேண்டும்.

(ii) குறித்த அளவிற் சுருக்கியோ விரித்தோ எழுதவிருக்கும மாணவர், சில சமையங்களில், குறித்த அளவிற்குப் பொருந்துமாறு, தம் எழுத்தை மொச்சை யெழுத்தாகப் பெரிதாக்கியும் தினையெழுத்தாக நுணுக்கியும் எழுதுதல் வழக்கம். இது கூடாது. ஒரு மாணவரின் இயல்பான எழுத்து தினையெழுத்தாகவோ மொச்சையெழுத்தாகவோ இருப்பினும், ஆசிரியர்க்குத் தெளிவாயிருக்குமாறும், அளவொடுபடுமாறும், இடைத்தரமான பருமனுக எழுதுவதே நல்லது.

பெரிதாகத் தொடங்கி வரவரச் சிறுத்தெழுதுவதும், இறுதிக் கோட்டின்கீழ் எழுதுவதும், வரந்தையில் எழுதுவதும் கூடா. (வரந்தை - margin).

(iii) கால்தாட் பக்கமொன்றில் இருபது வரிகள் எழுதலாம். ஒரு வரியில் சராசரி ஐந்து சொற்கள் அமையலாம். ஆகவே, நடுநிலைப்பள்ளி மாணவர் கட்டுரை நூறு சொற்களும், உயர்நிலைப்பள்ளி மாணவர் கட்டுரை இருநூறு சொற்களும் இடைநடு மாணவர் கட்டுரை நானூறு சொற்களும், கல்லூரிகளுள் அல்லது பட்டத்தேர்வு மாணவர் கட்டுரை அறுநூறு சொற்களும் கொண்டிருக்கலாம்.

(9) முடிபு (Conclusion or Personal Touch):

ஒரு காரியத்தின் விளைவு அல்லது பயன் எவ்வளவு முக்கியமானதோ, அவ்வளவு முக்கியமானதே ஒரு கட்டுரையின் முடிபும். அதுவே கட்டுரையாளரின் கருத்தாகும். அது ஓர் உண்மைக் கூற்றாகவாவது ஒழுக்க விதியாகவாவது இருக்கலாம்.

ஒரு காரியத்தை அல்லது பொருளைப்பற்றிய பிறர் கருத்து தமக்கு உடன்பாடாயின், ஒருவர் பிறர் கருத்தையும் தம கருத்தாகக் குறிக்கலாம்.

ஒருவர் ஒரு பொருளைப்பற்றித் தாம் கொண்ட கருத்தைக் குறிப்பதே அறநூலுக்கு ஒத்ததாயினும், மாணவர் அரசியற் சட்டதிட்டங்கட்கு உட்பட்டிருத்தலால், முழுப் பேச்செழுத்துரிமை யில்லாதவிடத்தெல்லாம் அரசியற்கு மாறாகத் தாங்கொண்ட கருத்துக்களை மாற்றியோ மறைத்தோ எழுதுவதே உலகியலுக்கொத்ததாகும்.

கட்டுரை முடிபின் வடிவு,

(i) முற்கூறியவற்றின் சுருக்கத் தொகுப்பு,

(ii) மேற்கோள்,

(iii) பழமொழி,

(iv) கட்டுரையாளரின் கருத்துவாக்கியம்,

என்னும் நான்கனுள் ஒன்றாயிருக்கலாம்.

(10) கட்டுரைப்பொருள் வன்மைபெறும் வகை :

கருத்துச்சிறப்பு, ஏதுவுஞ்சான்றுங்கூறல், பிறன் கோள் மறுப்பு, மேற்கோள் காட்டல், அணியமைவு, எடுத்துக்காட்டுடைமை முதலியவற்றால், கட்டுரையிற் கூறப்படும் பொருள் வலியுறும்.

## கட்டுரைப் பகுதிகள்

கட்டுரைகள், பொதுவாய்,

(i) முகவுரை (Introduction),

(ii) முக்கியப் பகுதி அல்லது உடல் (Body),

(iii) முடிவு (Conclusion),

என முப்பகுதிகளை யுடையன.

எந்தக் கட்டுரையையும் முகவுரையின்றித் திடுமென்று தொடங்குவது, முகப்பில்லாத மண்டபம்போல், அத்துணை சிறவாது. வரலாற்றுக் கட்டுரைகளிலும், வரணனைக் கட்டுரைகளிலும், இன்னோரன்ன பிறவற்றிலும், முகவுரையின்றியும் தொடங்கலாம். ஆயினும், அங்கும், ஒரு தொடரளவாகவாவது முகவுரையிருப்பது நன்று. எடுத்துக் காட்டாக, வள்ளுவரைப்பற்றி வரையும்போது, 'உலகம் போற்றும் அறநூலாசிரியரான,' என்னும் தொடர் முகவுரையாக அமையலாம். மேலும், ஓர் ஆளின் பிறப்பு, அல்லது ஒரு பொருளின் தோற்றம், அல்லது ஒரு நிகழ்ச்சியின் அமையம் பற்றித் தொடக்கத்திற் கூறும் பகுதியையும், முகவுரையாகக் கொள்ளலாம். இனி, கட்டுரைப் பொருளின் வரையறையும் முகவுரையாய் அமையலாம்.

கட்டுரையின் உடலானது, முகவுரைக்கும் முடிவுரைக்கும் இடையில், முக்கிய பகுதியாயும் பேரளவினதாயும் பல கருத்துக்களைத் தழுவினதாயும் பெரும்பாலும் பல பாகிகளைக் கொண்டதாயுமிருத்தல் வேண்டும்.

முகவுரை உடல் முடிவு ஆகிய மூன்றும், முறையே, தலையும் உடலும் காலும் (அல்லது வாலும்) போன்றிருத்தலின்; அதற்குத்தக, முகவுரை முடிவுரைகளைச் சுருக்கமாகவும், உடலுரையைப் பெருக்கமாகவும் அமைத்தல் வேண்டும்.

எப்பொருளிலும் முதலும் முடிவும் பெருங் கவனிப்பிற் கிடமாயிருத்தலின், கட்டுரையின் முதல் வாக்கியம் வேட்கையைத் தூண்டுதலாகவும், இறுதிவாக்கியம் அதைத் தீர்த்தலாகவும், இருத்தல் வேண்டும்.

(11) கட்டுரை வரைவிற்குக் கவனிக்க வேண்டியவை:

மாணவர், கட்டுரை வரைவிற்குக் கவனிக்க வேண்டியவை.

(i) முன்பு செய்வன,
(ii) அன்று செய்வன,

என இருதிறப்படும்.

i. முன்பு செய்வன :—

(i) பொருட் சேர்ப்பு,
(ii) பயிற்சி,

என இருபாலன.

(1) பொருள் சேர்க்கும் வழிகள் :

(i) **படித்தல்** :—ஆசிரியர் வகுப்பில் கட்டுரைக்கு வேண்டிய குறிப்புக்கள் தரினும், மாணவர் கற்றறிவும் பட்டறிவும் நிரம்பாதவராதலின், கட்டுரைக்கு வேண்டிய பொருளை அல்லது கருத்துக்களை, ஏற்கெனவே பல புத்தகங்களையும் செய்தித் தாட்களையும் கட்டுரைத் தொகுதிகளையும் படித்துத் திரட்டியிருத்தல் வேண்டும்.

(ii) **கேட்டல்** :—நூல்களிலும் தாள்களிலும் காணமுடியாத பல செய்திகளை, ஆண்டிலும் அறிவிலும் மூத்த அறிஞர்களை யடுத்துக் கேட்டறிதல் வேண்டும்.

(iii) **கவனித்தல்** :—மேற்கூறிய இரு வழிகளிலும் அறிய முடியாதவற்றை, மாணவர் தாமே கவனித்தறிதல் வேண்டும். கவனிப்பு கல்விக் கின்றியமையாதது. உலகெங்கும் கற்கப்படும் எல்லா முதல் நூல்களும், பல நுண்மதியர் தாமாய்க் கவனித் தறிந்தெழுதியவையே. எழுதப்பட்ட நூலே (அல்லது நூல் என்பதே) இல்லாத காலமும் இருந்தது. அன்றெல்லாம், பல பொருள்களையும் கவனித்தும் உற்று நோக்கி ஊகித்தறிந்துமே மக்கள் அறிவடைந்தனர். இன்றும் பிறர் கவனியாத அல்லது பிறர் கவனித்துந் தனக்குக் கிட்டாத பல செய்திகளை ஒருவன் தானே கவனித்தறிந்து கொள்ளலாம்.

(2) பயிற்சி :

மாணவர் வகுப்பில் எழுதுங் கட்டுரைகள் சிலவும் சில பொருள் பற்றியனவுமே யாதலின், எப்பொருளைப் பற்றியுங் குறித்த நேரத்திற்குள் எழுதி முடிக்கற்கு வேண்டும் திறமும் வேகமும் அமைதற்பொருட்டு, வீட்டிலும் பல பொருள்களைப் பற்றி எழுதிப் பயில்வது நல்லது.

ii. அன்று செய்வன :—

(1) தலைப்பைக் கவனித்தல்.

சில மாணவர், சில சமையங்களில், தலைப்பைச் சரியாய்க் கவனியாமலேயே, ஒன்றைப்பற்றிக் கேட்க இன்னொன்றைப்பற்றி எழுதி விடுகின்றனர். மனச் சீர்திருத்தத்தைப்பற்றி யெழுதச் சொன்னால் மனைச் சீர்திருத்தத்தைப்பற்றியும், தாகூரைப்பற்றி யெழுதச் சொன்னால் நாகூரைப்பற்றியும், கொல்லாமையைப்பற்றி யெழுதச் சொன்னால் கல்லாமையைப்பற்றியும், எழுதுகின்றனர்.

சிலர் தலைப்பின் எழுத்தைக் கவனித்தும் பொருளைக் கவனிப்பதில்லை. குடியாட்சி என்றால் கட்டுக்குடியுள்ள ஆட்சியென்றும், குழவி வளர்ப்பு என்றால் தேனீ (குளவி) வளர்ப்பு என்றும், கல்லாமை யென்றால் கல்லுக்குள்ளிருக்கும் ஆமை என்றும், பிறழவுணர்ந்து கொள்கின்றனர்

இப்பிறழ்வுணர்ச்சிக்கு எண்ணாமையுஞ் சொல்லறியாமை யுங் காரணமாகும்.

ஆகவே, கவனித்தலும், எண்ணுதலும் ஏற்கெனவே சொல்லறிந்திருத்தலும் இருந்தால்தான், தலைப்பைச் சரி யாய்க் கொள்ள முடியும்.

(2) தலைப்புக் குறித்தல் :

சில கல்லூரி மாணவர் கூடக் கட்டுரைத் தலைப்பைக் குறிப்பதில்லை. இதைக் கீழ் வகுப்பிலேயே ஆசிரியர் கண் டித்தும் வரையங் (மதிப்பெண்) குறைத்துத் தண்டித்தும் திருத்துதல் வேண்டும்

(3) தலைப்புப்பொருள் வரையறுத்தல் :

ஒரு பொருளைப்பற்றி வரையுமுன் அதன் உண்மை யியல்பைத் துணிந்துகொள்ளல் வேண்டும். அல்லா விடின், மற்றொன்று கூறலாகவே நிகழ்ந்துவிடும். கருத் துத் தெளிவே வரைவுத் தெளிவாதலின், பொருள் வரை யறை நற்கட்டுரைக்கு உயிர் நாடியாகும்.

நெருங்கிய அல்லது ஒரு புடையொத்த பொருள்கட் கெல்லாம் வேறுபாடு மாணவர்க்குப் பொதுவாய்த் தெரிந் திராதாதலின், ஆசிரியர் அவற்றை அவர்க்கு அறிவுறுத்து தல், வேண்டற்பாலதாம்

எ. டு. அன்பு × அருள், சிக்கனம் × கஞ்சத்தனம்.

(4) கருத்துக் குறித்தல் :

மாணவர், தமக்குக் கொடுக்கப்பட்ட பொருளைப்பற் றிய கருத்துக்களையெல்லாம், முதலில், அவை தமக்குத் தோன்றிய முறைப்படியே விரைந்து குறித்துக் கொள்ளல் வேண்டும்

(5) கருத்துக்களை ஒழுங்கு படுத்தல்.

மாணவர், தமக்குத் தோன்றிய கருத்துக்களை யெல லாம் குறித்துக்கொண்ட பின்பு, அவற்றைக் கால முறைப

படியும் ஏரண (Logical) முறைப்படியும் ஒழுங்கு படுத்திச் சட்டகம் (Outline) அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

கருத்துக்களெல்லாம் சமமான பெரும் பிரிவுகளாயின், அவற்றின் ஒழுங்கீடு வெறுஞ் சட்டகம் (Bare Out-line) ஆகும். அவற்றுட் சில பல பிறவற்றின் உட்பிரிவுகளாயின் நிறைசட்டகம் (Full Outline) ஆகும்.

கருத்துக்களைக் கோவைப் படுத்தும்போது, வேண்டாதவற்றையும் கூறியது கூறலானவற்றையும், விலக்கி விடல் வேண்டும்.

குறிப்பு:—

(i) கருத்துக்களை முதலிலேயே கோவைபடக் குறித்துக்கொள்ளுதற்குப் போதிய காலமும் பெருநினைவாற்றலும் வேண்டுமாதலின், முதலில் அவை தோன்றிய முறைப்படியே குறித்துப் பின்னர் அவற்றை ஏரண முறைப்படுத்துவதே, மேற்கொள்ளத் தக்கதாம்.

(ii) கருத்துக்களைக் குறித்துச் சட்டகம் அமைத்தற்கு, உயர்நிலைப்பள்ளி மாணவர் பத்து நிமையங்கட்கு மேலும், கல்லூரி மாணவர் கால்மணிக்கு மேலும் செலவிடல் தகாது. (நிமையம் - Minute)

(iii) வகுப்புக் கட்டுரைகட்கெல்லாம் ஆசிரியரே சட்டகக் குறிப்புக் கொடுத்தல் வேண்டும்.

(6) கட்டுரை வரைதல் :

சட்டகம் அமைத்தானவுடன், கட்டுரையைத் தொடங்கி முற்கூறிய விதிகளைக் கையாண்டு, பாகியமைப்புடன் பொருத்தவிதமாய்க் கோவைபடத் தெளிவாகவுந் திருத்தமாகவுங் குறித்த நேரத்திற்குள் எழுதிமுடித்தல் வேண்டும்.

iii. கட்டுரைச் சட்டக அமைப்பு :

கட்டுரைச் சட்டகம், முற்கூறியவாறு,

(i) வெறுஞ் சட்டகம்,

(ii) நிறை சட்டகம்,

என இருவகைப்படும்.

i. வெறுஞ்சட்டகம்

போலிகை (மாதிரி)

உழவு

(1) கருத்துக் குறிப்பு:

1. உணவு கிடைக்கும்.
2. உழவுக் கருவிகள்.
3. உழவு வினைகள்.
4. உழவின் உயர்வு.
5 உழவுத் தொழில் செய்யுங் குலங்கள்.
6. உழவு கடினமான தொழில்.
7. உழவென்றால் என்ன ?
8 முடிபு.

(2) கருத்தொழுங்கீடு :

1. உழவென்றால் என்ன ?
2. உழவுத்தொழில் செய்யுங் குலங்கள்.
3. உழவுக் கருவிகள்.
4. உழவு வினைகள்.
5. உழவின் உயர்வு.
6. முடிபு.

1-ஆம் கருத்து 7-ஆம் கருத்தில் அடக்கம். 6-ஆம் கருத்து வேண்டியதில்லை. ஆகையால், இவ்விரண்டும் விலக்கப்பட்டன.

ii. நிறைசட்டகம்

போலிகை

## உணவுப் பங்கீடு

(1) கருத்துக் குறிப்பு:

1. எல்லார்க்கும் உணவு கிடைக்கும்.
2. குறைந்த விலைக்கு உணவு கிடைக்கும்.
3. பங்கீடு முன்காலத்திலில்லை.
4. போர்க்காலத்தில் பங்கீடு தோன்றிற்று.
5. பங்கீட்டால் தீமையுமுண்டு.
6. ஒரு பொருள் வேண்டியவனுக்குக் கிடையாமல் வேண்டாதவனுக்குக் கிடைக்கின்றது.
7. கள்ள விற்பனை மிகுகின்றது.
8. பல நாடுகளில் பங்கீடிருக்கிறது.
9. போர் நின்றும் பங்கீடு நீங்கவில்லை.
10. பங்கீட்டுத்துறை யலுவலாளர்க்கு வேறு வேலைவேண்டும்.
11. மக்கட் பெருக்கம்.
12. கள்ள விற்பனையாளர்க்குப் பங்கீடு நீக்கம் விருப்பமன்று.
13. முடிபு.

(2) கருத்தொழுங்கீடு:

1. பங்கீடென்றால் என்ன?
2. பங்கீட்டுத் தோற்றம்.
3. பங்கீட்டின் நன்மை:

(1) எல்லார்க்கும் உணவு கிடைத்தல்.

(2) குறைந்த விலைக்கு உணவு கிடைத்தல்.

4. பங்கீட்டின் தீமை :

(1) ஒரு பொருள் வேண்டாதவனுக்குக் கிடைத்தலும் வேண்டியவனுக்குக் கிடையாமையும்.

(2) கள்ள விற்பனை மிகுதல்.

5. பங்கீடு நீங்காமைக்குக் காரணங்கள் :

(1) பங்கீட்டுத்துறை யலுவலாளர்க்கெல்லாம் வேறு வேலையின்மை.

(2) மக்கட் பெருக்கம்.

(3) கள்ள விற்பனையாளர்க்குப் பங்கீட்டு நீக்கம் விருப்பமன்மை.

6 முடிபு.

'பங்கீடென்றால் என்ன?' என்பது புதிதாகச் சேர்க்கப்பட்டது. 3-ஆம் கருத்து 4-ஆம் கருத்தின் மறுபுறைக்கூற்று. 8-ஆம் கருத்து வேண்டியதன்று. ஆகையால், இவ்விரண்டும் விலக்கப்பட்டன.

கட்டுரைச் சட்டகம், பொதுவாய்,

1. முகவுரை அல்லது தோற்றுவாய்,
2. வரையறை (Definition),
3. வரணனை,
4. எடுத்துக்காட்டு,
5. முடிபு,

என்னும் ஐந்து குறிப்புக்களை யுடையதாயிருக்கலாம்.

கட்டுரை ஓர் இயற்கைப் பொருளைப் பற்றியதாயின்,

(1) வரையறை, (2) கிடைக்குமிடம், (3) வகையும் வரணனையும, (4) எடுக்கும் முறை, (5) பயன், (6) முடிபு எனவும் ;

ஒரு செயற்கைப்பொருளைப் பற்றியதாயின்,

(1) வரையறை, (2) வகை, (3) செய்யுமிடம், (4) செய்யும் முறை, (5) பயன், (6) முடிபு எனவும்;

ஓர் உயிரியைப் பற்றியதாயின்,

(1) வரையறை, (2) வாழிடம், (3) வகையும் வரணனையும், (4) பழக்க வழக்கம், (5) பிடிக்கும் முறை, (6) பயன், (7) முடிபு எனவும்;

ஒருவரின் வாழ்க்கை வரலாறாயின்,

(1) பிறப்பு வளர்ப்பு, (2) கல்வி, (3) அலுவல், (4) வாழ்க்கை முறை, (5) அருஞ்செயலும் பொதுநலத் தொண்டும், (6) குணச் சிறப்பு, (7) முடிபு எனவும்:

ஒரு விழாவைப் பற்றியதாயின்,

(1) தோற்றமும் நோக்கமும், (2) காலமும் இடமும், (3) நடைபெறும் முறை, (4) பயன், (5) முடிபு எனவும்;

ஒரு நிகழ்ச்சியைப் பற்றியதாயின்,

(1) அமையம (சந்தர்ப்பம), (2) நிகழ்ச்சி, (3) விளைவு, (4) முடிபு எனவும்;

ஓர் அமைப்பைப் பற்றியதாயின்,

(1) வரையறை, (2) தோற்றம், (3) வளர்ச்சி, (4) வகை, (5) பயன், (6) முடிபு எனவும;

ஒரு கண்டுபிடிப்பை அல்லது புதுப்புனைவைப்பற்றியதாயின்,

(1) முந்திய கருத்து, (2) முதற் புனைவு, (3) திருத்த வளர்ச்சி, (4) பயன், (4) எதிர்கால வாய்ப்பு, (6) முடிபு எனவும்;

சட்டகம் அமையலாம்.

## iii. கட்டுரை வகைகள்

## (Classification of Essays)

கட்டுரைகளைப் பின்வருமாறு பத்துவகையாய் வகுக்கலாம்.

(1) வரலாற்றுக்கட்டுரை - Narrative Essay.

ஒரு பொருளின் வரலாற்றைக் கூறுவது வரலாற்றுக் கட்டுரை. இது சரித்திரம், வாழ்க்கைவரலாறு, கதை, நிகழ்ச்சி என்னும் நான்கனுள் ஒன்றுபற்றி வரும்.

(2) வரணனைக் கட்டுரை - Descriptive Essay.

ஒரு பொருளை வரணிப்பது வரணனைக் கட்டுரை.

(3) விளக்கியற் கட்டுரை - Expository Essay.

ஒரு பொருளை விளக்கிக்கூறுவது விளக்கியற் கட்டுரை.

(4) சிந்தனைக் கட்டுரை - Reflective Essay.

ஒரு பொருளைப்பற்றிச் சிந்தனையில் அமிழ்ந்துரைப்பது சிந்தனைக் கட்டுரை.

(5) பாணிப்புக் கட்டுரை - Imaginative Essay.

இல்லாத நிலைமையை இருப்பதாகப் பாவிப்பது பாணிப்புக் கட்டுரை.

(6) தருக்கக் கட்டுரை - Argumentative Essay.

ஒரு பொருளைத் தருக்க (Debate) முறையிற்கூறுவது தருக்கக் கட்டுரை.

(7) ஆராய்ச்சிக் கட்டுரை - Research Essay.

ஒரு பொருளை ஆராய்ந்து கூறுவது ஆராய்ச்சிக் கட்டுரை.

(8) அங்கதக் கட்டுரை - Satirical Essay,

ஒரு பொருளைக் கண்டித்து அல்லது பழித்துக் கூறுவது அங்கதக் கட்டுரை. அது **1. செம்பொருளங்கதம் 2. பழிகரப் பங்கதம்** என இருவகைப்படும். வெளிப் படையாய்ப் பழிப்பது செம்பொருளங்கதம்; மறைவாய்ப் பழிப்பது பழிகரப் பங்கதம்.

(9) புகழ்ச்சிக் கட்டுரை - Commendatory Essay.

ஒரு பொருளைப் புகழ்ந்து கூறுவது புகழ்ச்சிக் கட்டுரை. அது **1. செம்பொருட் புகழ்ச்சி, 2. வஞ்சகப் புகழ்ச்சி** என இருவகைப்படும். வெளிப்படையாய்ப் புகழ்வது செம்பொருட் புகழ்ச்சி; மறைவாய்ப் புகழ்வது வஞ்சகப் புகழ்ச்சி.

(10) கோட்டக் கட்டுரை - Critical Essay.

ஒரு பொருளின் குணங்களையுங் குற்றங்களையும் நடுநிலையாய் எடுத்துக் கூறுவது கோட்டக் கட்டுரை.

குறிப்பு :—இங்குக் கூறிய வகைகள் ஒன்றையொன்று சற்றுந் தழுவாதபடி முற்றும் வேறுபட்டவையல்ல. ஒவ்வோர் இயலின் பெரும்பான்மை பற்றி அவை வெவ்வேறு கூறப்பட்டன. ஒரு நுண்ணறிஞன் எந்தப் பொருளையும் இப்பத்து வகையாய்ப் பகுத்து வரையலாம்.

போலிகைக் கட்டுரைகள்

(1) வரலாற்றுக் கட்டுரை

ஆபிரகாம் பண்டிதர்

கருணானந்தர் சஞ்சீவி மருந்துகளைத் தோற்றுவித்தவரும், ஒப்புயர்வற்ற இசைத்தமிழாராய்ச்சியாளரும், கருணாமிர்த சாகரம் என்னும் மாபெருந் தமிழிசை நூலின் ஆசிரியருமான, தஞ்சை இராவ் சாகிபு ஆபிரகாம் பண்டிதர், நெல்லை மாவட்டத்தில் தென்காசிக் கூற்றத்தைச் சேர்ந்த

சாம்பூர் வடகரையில், 2—8—1859-இல், முத்துசாமி யென்பவருக்கு முதற்பிள்ளையாகப் பிறந்தார்.

சாமபூர் வடகரையிலிருந்து மூன்றுகல் தொலைவி லுள்ள சுரண்டைக் கிறித்தவப் பள்ளியில், அவர் தம் ஐந்தாம் அகவையிற் சேர்க்கப்பெற்று, பதினைன்காம் அக வையில் மேல் நான்காம் (Upper Fourth) வகுப்பில் தேறினர். அக்காலத்திலேயே அவர் ஓவியத்திலும், மிடற் றிசையென்னும் வாய்ப்பாட்டிலும் சிறந்த பயிற்சி பெற்றார். விளையும் பயிர் முளையில் தெரிந்தது. பின்பு 9—6—1874-இல், திண்டுக்கல் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியிற் சேர்ந்து ஆசிரியப் பயிற்சி பெற்றார்.

அக்காலை, அவர் கணியம் (சோதிடம்) கின்னரி (Fiddle) யிசை, புகைப்படப்பிடிப்பு, கடிகாரம் ஒக்கிடல், புத்தகங்கட்டல், சட்டை தைத்தல் முதலிய கலைகளையும் அறிவு வளர்ச்சிக்குப் பற்றுகோடாகவும் பயின்று வந்தார். இயல்பாக அவருக்கு மருத்துவ நோக்கிருந்ததினால், சமைய மவாய்க்குமபோதெல்லாம் மூலிகைகள் சேர்ப்பதும் அவர் வழக்கம.

1876-இல் ஆசிரியப் பயிற்சி முடிந்தவுடன் அவ ருடைய பல்கலையறிவு விடாமுயற்சி நுவற்சித்திறன் (போதனாசக்தி) அன்புடைமை முதலிய அருங்குணங்களைக் கண்ட அப்பள்ளி மேலாளரான யார்க் (York) துரை, அவரை அப்பள்ளியிலேயே ஆசிரியராக அமர்த்திக் கொண்டார். பண்டு தரும், துரை எதிர்பார்த்த அளவிற்கு மேல், மாணவருடன் அன்பாக அளவளாவியும், இனிய கதைகள் சொல்லி அவர்களை மகிழ்வித்தும, அவர்கட்கு நல்ல அறிவூட்டிக் தேர்வுகளிற் சிறப்பாகத் தேறும்படி செய்து வந்தார் அறிவில் மட்டுமன்றி, ஒழுக்கத்திலும் அவர்கட்கு ஆசிரியரா யிருத்ததற்பொருட்டு, தம பிறவிக் குணத்தின்படி, வேளாண்மை இரப்போர்க்கீதல் முதலிய அறங்களையும் தம் வாழ்க்கையிற் கடைப்பிடித்தார்.

ஓய்வு நேரத்தையும் ஒழிவு நேரத்தையும் பயன்படுத்துவதிற் பண்டிதர் ஒப்புயர்வற்றவர். சோம்பற்போய் அவரருகி லிருப்பவரையும் விட்டு நீங்கிக் காதவழிபோய்விடும். விடுமுறைநாட்களில், சிறப்பாகக் கோடை விடுமுறையில், தக்கோர் நட்பு, கற்றோர் உறவு, துறவோர் அருள் ஆகியவற்றை அருவிலை மாணிக்கம் போல் தேடி வந்தார். ஓய்வு நாட்களான ஞாயிற்றுக் கிழமைகளில் மறையாராய்ச்சி செய்வது அவர் வழக்கம். இங்ஙனம் கடவுளருளையும் பெரியோர் நல்லெண்ணத்தையும் பெறுவதிற் கண்ணுங் கருத்துமாயிருந்து வந்தார்.

1877-ஆம் ஆண்டுக் கோடை விடுமுறையில், பண்டிதர், துரைசாமி மாணிக்கவாசகம் என்ற இருமாணவரின் தந்தையாரும் பெருநிலக்கிழவருமான பொன்னம்பலம் பிள்ளையவரின் அழைப்பிற்கிணங்கி, யானைமலைப்பட்டி செல்ல நேர்ந்தது. அங்கு அவர் அருகிலுள்ள சுருளிமலையுச்சியில் யோகு வீற்றிருந்த கருணாநந்த முனிவரின் பெருமையைப் பற்றிக் கேள்வியுற்று, அவரைக் காணும்பொருட்டுப் பொன்னம்பலத்துடன் ஒருநாள் மலையேறிச் சென்றார். அம்மலை குண்டடியானும் சிறுக்கையும் நிறைந்ததாதலின், அவ்விருவரும் அஞ்சியஞ்சி நின்று நின்று மெல்லமெல்லச் சென்றனர். அரைமலைத் தொலைவு சென்று அங்கொரு மண்டபத்தில் இருவரும் இளைப்பாறிக் கொண்டிருந்த போது, முனிவரின் கட்டளைப்படி ஒரு சிவத்துறவியார் வந்து, ஆபிரகாம் என்னும் பெயரினர் யார் என வினவியறிந்து, அவரைமட்டும் அழைத்துக் கொண்டுபோய் முனிவரின் காட்சி பெறுவித்தனர். பண்டிதர் முனிவரைக் கண்டதும் அவர் திருவடிகளில் விழ, முனிவர் "ஆபிரகாமே! எழுந்திரு," எனப்பணித்து, ஒரு சிறந்த சித்த மருத்துவ முறையை எழுதுவித்து,

"சில ஆண்டின்பின் யாம் பனிமலை (இமயம்) செல்லுங்கால், பொன்னிக்கருகில், தோட்டந்துரவு நிறைந்த மண்மனைகளுடன், மனைமகார் பாங்கிருக்க, உற்றார் உறவினர் புடைசூழ, பெரும்புகழ் வாய்ந்த மருத்துவச் சித்த

ஞய், குறைவற்ற செல்வனுய், இரப்போர்க்கு வள்ளலாய், இசைவல்லோர்க் காசிரியனுய், பாரினில் பேரறிஞனுய், நீ இன்புற்று வாழக் காண்பேம்.''

என வாழ்த்தியருளி, அதன்பின் வேண்டும்போதெல்லாம் தம்மைத் துணையின்றி வந்து காணவும் அருள்சுரந்தார்.

பண்டிதர், முனிவரிடம் பிரியா விடைபெற்றுத் திண்டுக்கல் வந்து சேர்ந்தவுடன், 'கருணனந்தர் சஞ்சீவி மருந்துகள்' தோன்றின.

1882-இல், பண்டிதர் கிறிஸ்மஸ் விடுமுறைக்குச் சாப்டூர்வடகரை சென்றார் 27-12-1882-இல் அவருக்கும் நாஞ்சாஙகுளம் வேதககண்ணுர் மகளார் ஞானவடிவு பொன்னம்மாள் என்னும் அம்மையாருக்கும் திருமணம் நடந்தேறியது. விடுமுறை முடிந்தபின், பண்டிதர் தம் இல்லக்கிழத்தியாருடன் திண்டுக்கல் திரும்பினர்.

அவர் வேலைசெய்துவந்த பள்ளி, அதை நடத்துதற்கு வேண்டும் பொருளின்மையால், ஒரு மாதத்தில் மூடப்பட்டு விட்டது. அதன்பின், அவர் தஞ்சையில் பிளேக் துரையின் கண்காணிப்பிலிருந்த ஒரு பெண்பள்ளியில் தமிழாசிரியராய் அமர்ந்தார். அவர் மனைவியார் அதற்குத் தலைமையாசிரியையார் ஆனர்.

இருவர் முயற்சிபாலும் பள்ளி மிக விரிவடைந்தது. ஆனல், பெருந்தியதிற்கும் மன்பதை நலத்திற்கும் இடமான மருத்துவத்தொண்டிற்கு ஆசிரியத் தொழில் இடையூறாயிருந்ததைகண்டு, அதை 1890 இல் விட்டுவிட்டு, மிஷன் தெருவிலுள்ள ஒருசிறு வீட்டைக் குடிக்கூலிக் கமர்த்திக்கொண்டு, உலகப் புகழ்பெற்ற தம் மருத்துவத் தொண்டைப் பண்டிதர் தொடங்கலுற்றார். மருந்து விற்பனைக்காகப் பலவூர் சென்றபோது பல பெரியார் துணையுங் கிட்டியது அப்பெரியாருள் திருப்பாதிப்புலியூர்த் திருப்பெருந்திருச் சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரியார்

ஒருவராவர். குழந்தை மருத்துவத்திற்கும் கட்டிக் காய்ச்சலுக்கும் (Plague) கருணானந்தர் சஞ்சீவி மருந்துகள் ஒப்புயர்வற்றவையாதலின், அவை இந்தியா, ஈழம், கடாரம் (பர்மா), மலேயா, சாவகம், சைகோன், மடகாஸ்கர் முதலிய பல நாடுகளிலும் பரவிக் குன்றன்ன செல்வங் குவிந்தது. இதற்குள், நான்கு புதல்வரும் ஏழு புதல்வியரும் பிறந்திருந்தனர். 1893-இல் ஒரு பெருமனையும் விலைக்கு வாங்கப்பெற்றது. பண்டிதர் தம் அளவிறந்த தமிழ்ப் பற்றினாலும், தம் முன்னோரான பண்டைத் தமிழர்க்கு இடைக்காலத்தெழுந்த பழியை நீக்குதற்பொருட்டும், இரவு பகலாய் இசையாராய்ச்சி செய்தும், ஆறு இசை மாநாடுகள் கூட்டியும், 1208 பக்கங்கொண்ட கருணாமிர்த சாகரம் என்னும் இசைத் தமிழாராய்ச்சி நூலை இயற்றி 1917-இல் வெளியிட்டார். ஏறத்தாழ எட்டு நூற்றாண்டுகளாய்த் தமிழ்ப் பகைவரால் மறைக்கப்பட்டு வேறொருவர்க்கும் தெரியாதுகிடந்த இசைத்தமிழை ஓரளவு வெளிப்படுத்திய பண்டிதர், ஆரிய மறைகளைத் திருடி ஆழ்கடலிலொளித்த சோமுகனைக் கொன்று அவற்றை மீட்டதாகக் கூறும் திருமாலின் மீனத்தோற்றரவை (மச்சாவதாரத்தை) ஒருபுடையொப்பாரன்றோ!

பண்டிதர் இல்லற வாழ்க்கை வள்ளுவனார் இல்லறவியலைப் பின்பற்றியதெனின் மிகையாகாது. அவர் தம் உறவினர் பலரையும் வரவழைத்து வெவ்வேறு அலுவலில் அமர்த்தினர். அவர் இரப்போர்க்கீந்த ஐயமும் (பிச்சையும்) புலவர்க்களித்த பரிசும் அளவிடற்பாலனவல்ல. வேளாண்மையும் விருந்தோம்பலும் முன்னினும் பன்மடங்கு விஞ்சின. இங்ஙனம் முனிவர் சொல் முற்றும் பலித்தது. அரசியலார் பண்டிதரின் பல்வகைத் தொண்டைக்கண்டு, அவருக்கு இராவ்சாகிப் பட்டம் அளித்தனர்.

15-12-1911-இல் பண்டிதரின் முதல் மனைவியார் இறந்தனர். பின்பு, 5-2-1912-இல் அவர் நெல்லை முதலூர்க் கைலாசம் அம்மையாரை மறுமணம் புரிந்தனர்.

அவ்வம்மையாரும் ஏழாண்டின்பின் 14-7-1919-இல் முன்னோர் வழிசென்றனர். அதனையடுத்துப் பண்டிதரும் மக்கள் புலம்பச் சுற்றம் சோரத் தமிழ்நாடு வருந்த 31-8-1919-இல் முற்றும் விளக்கமணியாய் இவ்வுலக வாழ்வை நீத்தனர்.

அவரது பூதவுடம்பு மறைந்துபோயினும், புகழுடம்பு 'கருணாமிர்த சாகரம்' வாயிலாகவும், 'கருணானந்தர் சஞ்சீவி மருந்துகள்' வாயிலாகவும் பொலிந்து நிற்கின்றது. அது ஒருபோதும் பொன்றாது.

## பயிற்சி

பின்வருபவற்றைப் பற்றி வரலாற்றுக் கட்டுரை வரைக:—

(1) சீர் பாராட்டும் ஒரு புலவர். (2) காந்தியடிகள். (3) இந்தியத் தேசியப் பேரவை (4) இருப்புப்பாதை. (5) வானொலி. (6) திரைப்படம். (7) மின்சாரம். (8) உலகம். (9) ஒரு கடல் கோள். (10) ஓர் எரிமலைப் பொங்கல் (11) மொழி. (12) காசுமீரத் தொல்லை. (13) அரசியல். (14) இரண்டாம் உலகப் பெரும்போர். (15) ஒரு புறப்போக்கு (Excursion) (16) ஒரு நிலக் கண்டுபிடிப்பு.

## (2) வருணனைக் கட்டுரை

### கோடைக்கானல்

கோடைக்கானல், மதுரை மாவட்டத்தில், மேற்குத் தொடர்ச்சி மலையைச் சார்ந்த பழனிமலைத் தொடருச்சியில் கடல் மட்டத்திற்கு 7000 அடிக்கு மேற்பட்ட ஒரு நகராண்மையூர்.

தற்போது, கோடைக்கானல் ஓர் உடல்நல நிலையமாகவே பயன்படுத்தப்பெற்று வருவதாலும், பெருமக்கள் கோடைக்காலத்தில் அங்குக் குளிர்ச்சிக்குச் செல்வதாலும், கானல் என்பது சோலை என்னும் பொருள் தருவதாலும், அங்கு பல சோலைகளிருப்பதாலும், கோடைக்கானல் என்

னும் பெயர் கோடைக்காலத்தில் மக்கள் புகும் சோலையூர் என்று பொருள்படலாம். ஆயின், கடிய நெடுவேட்டு வன் என்னும் தலைவனைக் கோடைமலைக்குரியவன் என்று ஒரு புறநானூற்றுச் செய்யுள் (206) குறிப்பதாலும்; கோடை பாடிய பெருந்தேவனார் என்றொரு புலவர் கடைச்சங்கத் திறுதியி லிருந்ததனாலும்; கோடைக்கானலைச் சூழ, விலப்பட்டி, வெள்ளக்கவி, மன்னவனூர், பூம்பாறை முதலிய பல பழைமையான ஊர்கள் இருப்பதாலும்; அப்பக்கமெல்லாம் கற்காலக் குடியிருப்புக்கள் காணப்படுவதாலும்; வில்பட்டியில பாண்டியன் கல்வெட்டிருப்பதாகச் சொல்லப்படுவதாலும்; முற்காலத்தில் பழியரும், இடைக்காலத்தில் புலையரும் குன்றவருமே, கோடைக் கானலில் குடியிருந்திருப்பதாலும்; கடிய நெடுவேட்டுவனின் கோடைமலையே இன்று நாம் கூறும் கோடைக் கானல்மலை என்று கொள்ள இடமுண்டு. ஆயினும், மீண்டும், அக்கோடைமலை காலத்தாற் பெயர் பெற்றதோ என்னும் ஐயம் தீர்ந்தபாடில்லை.

கோடைக்கானல் சிற்றூராயும் முற்றும் இந்தியர் குடியிருப்பாயும் இருந்தபோது, முதன்முதல் 1821 இல் லெப்டினண்டு வார்டுதுரை மகனார் (Lieut. B S Ward) நில அளவைக்காக அங்கு சென்றார். அதன்பின், கோடைக்கானல், துரைமார் கோடைக் காலத்தில் குளிர்ச்சிக்காகச் செல்லத்தக்கது என்னுங் கருத்துப் பரவிற்று. முதன்முதல் 1824-இல் மதுரை அமெரிக்கன் மிஷன் கழகத்தார் அங்கு இரு வளமனைகள் கட்டினர். பின்பு பற்பல கழகத்தாரும் தனிப்பட்டவரும் ஒவ்வொன்றாகப் பல வளமனைகளைக் கட்டி, 1899-இல் கோடைக்கானல் ஒரு கூற்றமாகவும் (Taluk) தகராண்மையூராகவும் வகுக்கப் பெற்றது. முதலாவது, அங்கிருந்த இந்தியர் புலையரும் குன்றவருமே. பின்பு கீழ் நிலத்திலிருந்து செட்டிமாரும் வேளாளரும் முகமதியரும் தெலுங்கரும் பிறரும் வந்து பழங்குடி மக்களினின்று நிலங்களைப் பல வகையிற் பற்றிக்கொள்ள, அவர்கள் அவ்விடத்தைவிட்டு அகன்று விட்டனர். இது

போது அங்கு இழிதொழில் செய்பவர் பறையரும் சக்கிலியருமாவர்.

தற்போது கோடைக்கானலில் நிலையாக இருப்பவர் ஏறத்தாழ ஈராயிரவரும், கோடைக்காலத்தில் வந்து ஒரே சமையத்தில் தங்குபவர் ஏறத்தாழ ஆயிரவருமாவர். பின்னவருட் பெரும்பாலார் முன்பு வெள்ளைக்காரர்; இன்று இந்தியர்.

கோடைக்கானற்கு, அம்மைநாய்க்கனூர் என்றும் கோடைக் கானற்சாலை என்றும் அழைக்கப்பெறும் தென்னிந்திய இருப்புப்பாதை நிலயத்திலிருந்து, நிலக்கோட்டை வெற்றிலைக்குண்டு என்னும் சிறு நகர்கள் வழியாய்ச் சம நிலத்தில் சுமார் இருபது கல்லும், மலைமேற் சுமார் முப்பது கல்லும், இயங்கியிற் செல்ல வேண்டும்

அடிவார ஏற்றத்திலேயே, அச்சுறுத்தி இயங்கிகளின் வேகத்தை மட்டுடும் செவ்வண்ணப் பலகைகள், புதன் முறை செல்வார்க்கு உட்குவருந் தோற்றத்தன. மேலே செல்லச் செல்ல, மேலுலகேறு செல்வதுபோல் தோன்றும். அரைமலையடித்தவுடன், குளிர்ந்த ஊற்றுணர்ச்சி யுண்டாகித் தபாளி வேட்கை தோற்றுவிக்கும். உச்சியை யடைந்தபின், வேறுலகஞ் சென்றதுபோன்றும், கோடையின்றி வேறு காலத்தில் அங்கு செல்ல முடியாதென்றும, உணர்ச்சி பிறக்கும்.

கோடைக்கானலை, மூஞ்சிக்கல், கடைத்தெரு, வளமனைகள் (Bangalows) என முப்பகுதியாய்ப் பகுக்கலாம்.

மூஞ்சிக்கல் என்பது, கடைத்தெருவிற்குச் சற்றுத் தாழ்வாக, ஒரு படைச்சால் (Furlong) தொலைவில், நெருக்கமாகவும் நான்கு தெருவாகவும அமைந்துள்ள இந்தியர் குடியிருப்புத் தொகுதியாகும் கடைத்தெருவை யொட்டியே, அஞ்சலகமும் (Post Office) ஊர்காவல் நிலையமும (Police Station) அரசிறையார் (Tahsildar) மன்றமும் வேறு சில அரசியற் கட்டிடங்களும அமைந்

துள்ளன. வளமனைகள் எல்லாம், பெரும்பாலும் கடைத் தெருவைச் சூழ, அண்மையிலும் சேய்மையிலும் இடையிட்டமைந்துள்ள தனித்தனிக் கட்டிடங்கள். இவையே வெள்ளைக்காரரும் பெருமக்களும் தங்குவன. கோடைக்கானல் ஒரு மலை நகராதலின், ஆங்காங்கு பற்பல இடங்கட்கும் மேட்டிலும் பள்ளத்திலும் ஏறியும் இறங்கியும் செல்லவேண்டும். சொந்த இயங்கியில்லாத பெருமக்கட்கு வாடகை நரவண்டி (Rickshaw) வசதியுண்டு.

இந்தியருக்குக் கடைத்தெருவிலும், வெள்ளைக்காரருக்கு வேறிடத்திலும், தங்கலறைகளுள்ள உண்டிச்சாலைகள் உள. இருசாரார் பிள்ளைகட்கும் வெவ்வேறு பாடசாலைகளும் உள. ரோமானியத் திருச்சபையார்க்கும் அமெரிக்கத் திருச்சபையார்க்கும் ஆங்கிலத் திருச்சபையார்க்கும் வெவ்வேறு கோவிலுண்டு.

கோடைக்கானலிற் பார்க்கத்தக்க இடங்கள் :—ஏரி, பூங்கா (Bryant Bark), கோக்கர் உலா வழி (Coaker's Walk), வானூராய்ச்சி நிலையம் (Observatory), கோபுரமலை (Pillar Rocks) முதலியனவும், வெள்ளி நீர்வீழ்ச்சி (Silver Cascade), மாயாவி வீழ்ச்சி (Fairy Falls) முதலிய பல நீர் வீழ்ச்சிகளும்; பெருமாள்மலை, கடற்பன்றி மூக்கு (Dolphin's Nose) முதலிய பல மலைப் பகுதிகளுமாகும். இவற்றுள், ஏரியானது, கோடைக்கானல் நடுவில், மூன்றேகால் கல் சுற்றளவில், இயற்கையாய் அமைந்துள்ள ஓர் அழகான நீர் நிலையாகும். இதிற் படகு வசதியுண்டு. இதைச் சூழ எவ்விடத்தில் நின்று நோக்கினும், கோடைக்கானல் ஒரு மேனாட்டூர்க் காட்சியளிக்கும்.

கோடைக்கானலில், கட்டிடமில்லாத இடமெல்லாம், குளிர்ந்த தட்பவெப்பநிலைக்குரிய மரஞ் செடி கொடிகளடர்ந்து ஒரே பெருஞ் சோலையாய்த் தோன்றும். அவற்றுள், சில்வண்டு இரவும் பகலும் இரைந்து கொண்டிருக்கும். அங்குள்ள மரங்களெல்லாம் பெரும்பாலும் குவிந்திருப்பது, மழையில் நனைந்த மக்கள் ஒடுங்கி நிற்பதுபோ

லும். மர அடர்த்தியாலும், அடிப்பாறைகளின் நீர்க்கசி வாலும், சோலைகளை அடுத்தவுடன் குளிர்ந்த ஊற்றுணர்ச்சி யுண்டாகும்.

கோடைக்கானல் 7000 அடி உயரத்திலுள்ளதாத லின், அணில், காகம், குருவி, நல்ல பாம்பு, வீட்டுப்பல்லி, தேள், மூட்டைப்பூச்சி, முதலிய உயிரிகளை அங்குக் காணவே முடியாது. கீழ் நிலத்து வீட்டு விலங்குகளும், அங்கு வாழமுடியாவாதலால், ஆட்பொருட் போககுவரத் தெல்லாம் இயங்கியாலேயே நடைபெறல் வேண்டும். வேதனையுஞ் சாவும் விளைக்கும் நச்சுயிரிகள் அறவேயில்லா மையும், உடல்நலத்திற்குகந்த நிலையும், அவ்விடத்தைத் தேவருலகத்தோடொப்படுத்தும்.

கோடைக்கானலில் நாடொறும் மழை பெய்யினும், அது கோடைக்காலத்தில் இந்தியரெல்லாம் சென்று தங்கு தற்கேற்ற இன்பமான தட்ப வெப்பநிலை கொண்டுள்ளது. பெப்ரவரிக்கும், அக்டோபருக்கும் இடையில் என்றும் வெள்ளைக்காரர் செல்லலாம். அவருக்குக் கோடைக்காலச் செலவு இன்றியமையாதது. இரவில் எல்லாருக்கும் கம் பளி யாடை வேண்டியதாகும்; அன்று வெளி நடமாட்டம் எவருக்கும் இயலாது.

கோடைக்கானல் தட்பவெப்பநிலை, ஆயிரக் கணக் கான கல் தொலைவிலுள்ள சமதட்ப வெப்ப மண்டலத் திற்குரியதாய் மட்டுமன்று; இந்தியா முழுமையினும் தலை சிறந்ததாயும், உலகத்திலேயே மூன்று தலைசிறந்த தட்ப வெப்ப நிலைகளுள் ஒன்றாயுமிருத்தலின்; அங்கு சென்று தங்காவிடினும், ஒருமுறையேனும் அவ்விடத்தைக் கண்டு வருவது, காசி கயா மெக்கா எருசலேம முதலிய திருப்பதி களைக் கண்டு வருவதினும் பெருநலம் பயப்பதாகும்.

## பயிற்சி

கீழ்வருபவற்றைப்பற்றி வரணனைக் கட்டுரை வரைக:—

1. ஓர் இயற்கைக் காட்சி. 2. ஒரு விலங்கினச் சாலை. 3. பொங்கற்பண்டிகை. 4. பனிமலை (இமயம்) 5. ஒரு மழை நாள்.

6. வானொலிக் கருவியமைப்பு. 7. நாட்டு வாழ்க்கை. 8 நகர வாழ்க்கை. 9 திருக்குறள். 10. சுரங்கவேலை. 11. முத்துக் குளிப்பு. 12. இந்திய அரசியலமைப்பு. 13. மேட்டூர் அணை. 14. தாசுமகால், 15. ஒரு வீட்டு விலங்கு 16. மிகப் பயனபடும ஒரு மரம். 17. ஒரு தேர்தல் காட்சி. 18. ஒரு திருவிழா. 19. ஒரு பொருட் காட்சி. 20.

## (3) விளக்கியற் கட்டுரை

### முத்தமிழ்த் தொடர்பு

தமிழ் மிகத் தழைத்திருந்த தலைச்சங்கக் காலத்தில், தமிழ்ப் புலவர் தமிழை முத்தமிழ் எனவே, தொகுதியாகக் கருதியும பயின்றும் வழங்கியும வந்தனர். மக்கள் வாணாள் குறுகிய பிறகாலத்தில், முத்தமிழையும் ஒருங்கு பயில்வார் அருகியதால், அவை வெவ்வேறு பிரிந்தன. ஆயினும், முத்தமிழ் என்னும பெயர் வழக்கு இன்றுமுள்ளது.

முத்தமிழ் என்பன இயலிசை நாடகங்கள். இயல்பாக வுள்ள தமிழ் இயற்றமிழ்; அதனொடு இசை சேர்ந்தது இசைத் தமிழ்; அவ்விரு தமிழோடும் நடிப்புச் சேர்ந்தது நாடகத் தமிழ். இம மூன்று தமிழும் சேர்ந்தது முத்தமிழ். முன்பு ஒரே யாசிரியனிடத்தில் ஒரே நூல் வாயிலாய் (மொழிப்புலமை கருதிய) ஒவ்வொரு தமிழ் மாண வரும் பயின்றுவந்த முத்தமிழ்கள், இன்று பெருமபாலும் வெவ்வேறாசிரியனிடத்தில் வெவ்வேறு நூல் வாயிலாய் வெவ்வேறு மாணவரால் பயிலப்பட்டு வருகின்றன. ஆற்ற லும விருப்பமும் வசதியும ஒருங்கேயுடைய ஒரோவொரு வர்தான், இக்காலத்தில முத்தமிழையும ஒருங்கே கற்கின் றனர். எங்ஙனமிருப்பினும, முத்தமிழ்ப் பயிற்சி நின்று விடவில்லை. அயனமொழிக் கலப்பும் தனித்தனிப் பயிற்சி யுமே இற்றை வேறுபாடாம்.

முத்தமிழுள் ஒவ்வொன்றும் இலக்கணம் இலக்கியம் என இருதிறபபடும் ஆகவே, இயற்றமிழ் இலக்கணம், இயற்றமிழ் இலக்கியம்; இசைத்தமிழ் இலக்கணம், இசைத்

தமிழ் இலக்கியம்; நாடகத் தமிழ் இலக்கணம், நாடகத் தமிழ் இலக்கியம்; என முத்தமிழும் அறுதிறமாம்.

தொல்காப்பியம் முத்துவீரியம் முதலியன இயற்றமிழ் இலக்கணம்; மணிமேகலை நளவெண்பா முதலியன இயற்றமிழ் இலக்கியம்; இசை நுணுக்கம் தாளவகையோத்து முதலியன இசைத் தமிழ் இலக்கணம்; பரிபாடல் தேவாரம் முதலியன இசைத் தமிழ் இலக்கியம்; செயிற்றியம் மதிவாணர் நாடகத் தமிழ் நூல் முதலியன நாடகத் தமிழ் இலக்கணம்; சபாபதி வேதாளவுலகம் முதலியன நாடகத் தமிழ் இலக்கியம்; அகத்தியம் முத்தமிழிலக்கணம்; சிலப்பதிகாரம் முத்தமிழிலக்கியம்.

ஆங்கிலத்திற் சேக்சுப்பியரும் (Shakespeare) வடமொழியிற் காளிதாசனும் இயற்றியுள்ள செய்யுள் நாடக நூல்வகை, தமிழுக்குரியதன்று. ஆரியமுறையைப் பின்பற்றியே, பேராசிரியர் சுந்தரம்பிள்ளை முதலியோர் தமிழிற் செய்யுள் நாடக நூல்கள் இயற்றினர். இசைப் பாட்டில்லாத நாடகம் தமிழுக்கேற்காது. நாடகம் நடிப்பதுபோன்றே உரையும் இசைப்பாட்டும் விரவி வருவதுதான், நாடக விலக்கியமாகப் பண்டைத் தமிழகத்திற் கருதப்பட்டது. அதில் செய்யுளும் இடம்பெறலாம். செய்யுள் நாடக நூல்வகை பழங்காலத்தில் தமிழில் இயற்றப்பட்டுப் பின்பு இறந்துபட்டதென்றோ; தமிழுக்கில்லாதது ஒரு குறையென்றோ, கருதுவது தவறாகும்.

ஒரு மொழியுடன் இசை நாடகம் ஆகிய இரு கலைகளையும் மொழிப் பகுதிகளாகச் சேர்த்து அதனை முக்கூற்று மொழியாகக் கருதுவது, தமிழில் தவிர வேறெம் மொழியிலும் இல்லை. பிறமொழிகளிலெல்லாம், இசையும் நாடகமும் இருகலைகளாக வழங்குகின்றனவேயன்றி, மொழிப்பகுதிகளாகக் கருதப்படுவதில்லை. தமிழில் மட்டும் இசை நாடகங்கள் மொழிப் பகுதிகளாகக் கொள்ளப் பட்டமைக்குக் காரணம் என்ன? எத்துணையோ கலைகளிருக்கும்போது, அவற்றுள் இசை நாடகங்கள்

மட்டும் ஏன் தமிழ்ப்பகுதிகளாகக் கருதப்படல் வேண்டும்?

சிலர், இசை நாடகங்கள் இன்பந்தருங் கலைகள் என்பர். சிலர், இசையறிவே ஒரு மக்களினத்தின் பண்பாட்டைக் குறிக்கும் என்பர். சிலர், கலைமகள் யாழ்முரல அவளருகிலுள்ள மயில் நடஞ்செய்கின்றதென்பர். சிலர், சிவபெருமான் தம் இருகாதுகளிலும் ஈரியாழோரை (கந்தருவரை)த் தொங்கவிட்டுக் கொண்டு ஐயம்பலங்களிலும் திருக் கூத்தாடுகின்றனர் என்பர். சிலர், பண்டைத் தமிழர் இசை நாடகக்கலைகளில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தனர் என்பர். சிலர், தமிழானது இயலாகப்பூத்து இசையாகக் காய்த்து நாடகமாகக் கனிந்து விட்டதென்பர். இவையெல்லாம் காரணமும் விளக்கமுமாகா.

பின்னை யெதுகாரணமெனின், இசையும் நடிப்பும் பேச்சொடு இயல்பாகக் கலந்திருப்பதே காரணம் என்க. மொழியானது உண்மையில் ஒலிவடிவாயிருப்பது. தாளவரம்புள்ளதும் இல்லதுமான இனிய ஒலி அல்லது ஓசையே இசையாம். மொழி என்பது உள்ளக்கருத்தின் வெளிப்பாடான ஒலிக் கூட்டமாதலின், அவ்வக் கருத்திற்கேற்ப ஒருவர் பேச்சு அலகேறியும் இறங்கியும் செல்லும். உணர்ச்சி மிகுந்தவிடத்துச் சில சமையங்களிற் பேசசே இன்னிசைப் பாட்டாகவும் செய்யுளாகவும் மாறுவதுண்டு. உரையும் செய்யுளுமாகிய இருவகை மொழி நடைகளுள் முன்னது பொதுமக்களும பின்னது புலமக்களும் கையாள்வனவாகும். செய்யுள இசைப் பாட்டைவிடச சொற்செறிவும அசைவரம்பும் ஓசை வேறுபாடும் பொருட்பொலிவுமுடைமையின், புலமக்கட்கு இசைப்பாட்டிசை போன்றே செய்யுளிசையும் இன்பம் பயப்பதாகும். இதனால், பாட்டு இசை என்னும் இரு சொல்லும், இன்னிசைப் பாட்டிற்கும் செய்யுட்கும் பொதுப்பெயராகும். இசையைக் குறிக்கும் பண் என்னும் பகுதியினின்று, இசைப்பாட்டைக் குறிக்கும் பாண் பண்ணத்தி என்னும்

சொற்களும், செய்யுளைக் குறிக்கும் பாணி (எ. டு. தேவ பாணி) என்னும் சொல்லும் பிறந்துள்ளன. மேலும், உரை நடைக்கும் ஓசை யுண்டென்பது, புலவர் நூல்களை மட்டுமன்று, பொதுமக்கள் பேச்சையும் நுணுகிநோக்கின் புலனாகும்.

இனி, நடிப்பும் பேச்சொடு கலந்துள்ளதென்பது ஒருவர் விலங்கொலிகளையும் பறவையொலிகளையும் அவற்றைப்போல வொலித்துக் காட்டுவதாலும், பிறமக்கள் பேசு முறையை நடித்துக் காட்டுவதாலும், அறியலாகும். சிலர், பிறர் பேச்சை மட்டுமன்றிச் செயல்களையும் நடித்துக் காட்டிப் பேசுவர். எல்லாமக்களும் பேசுங்காற் சிற்றளவாகவோ பேரளவாகவோ கையாளும் சைகைகளும், நடிப்பின்பாற் பட்டனவே. அதோடு, உள்ளத்தெழும் தொண்சுவை (நவரசம்)களும் குறிப்புவிறல் (சத்துவம்) மெய்ப்பாடு செய்கை முதலியனவாகப் பேச்சொடு வெளிப்படுவதும், அவிநயம் என்னும் நடிப்பாதலானும், ஒருவகை யுணர்ச்சியுமின்றி ஒருவர் பேசுவதிராதாகலானும், பேச்சு இசையொடு மட்டுமன்றி நடிப்பொடுங் கூடியதென்பது தெள்ளத் தெளிவாம்

பண்டைத் தமிழிலக்கணியர், பொருள்களின் உண்மையியல்பை நுணுகியாய்ந்துகண்ட மெய்ப்பொருளுணர்வு வல்லோராதலின், பேச்சுடன் இசையும் நடிப்பும் விரவியிருப்பதைக் கண்டு, இசை நாடகக் கலைகளை மொழிப் பகுதியாக்கினர்.

பிற்காலத்தில், இயலினின்று இசை நாடகம் வேறு புணர்ப்பட்டது மட்டுமன்றி வடநாட்டினின்று வந்த சில மதக் கொள்கைகளால், இவ்விரு கலைகளும் இழிவிற்கும் வெறுப்பிற்கும் இலக்காகி ஒருவாறு மறைத் தொழிக்கவும் பட்டன.

இனிமேலாயினும், தமிழர் தம் முன்னோர் தந்த முத்தமிழ்க் கலைகளைப் பொன்னே போற் போற்றுவாராக.

## பயிற்சி

*பின் வருபவற்றைப் பற்றி விளக்கியற் கட்டுரை வரைக :—*

1. *வானொலி.* 2. *அணுக்குண்டு.* 3. *இந்தியாவின் இயற்கைப் பாதுகாப்பு.* 4. *தற்செயல் நேர்ச்சியால் சரித்திரத்தில் விளைந்தவை* (The Part played by Accident in History). 5 *கடலில் தீன்றையஞ் செய்யப்பட்ட பெருஞ் சரித்திரக் காரியங்கள்* (Great Historical issues decided at Sea). 6. *மறுமலர்ச்சி* (Renaissance). 7. *தற்கால அடிமைத்தனம்.* 8. *முற்கால தற்கால ஒழுக்கக் கருத்தீடுகள்* (Ideals of Character in Ancient and Modern Times). 9. *மனத்தைத் திருத்தும் வழிகள்* (Modls of improving the Mind). 10. *அறிவியற் கலையைப் பற்றிய தவறான கருத்துக்கள்.* 11. *பற்றுட்டின் பயன்.* 12. *மூட நம்பிக்கைகளும் அவற்றின் தீமையும்.* 13. *வேலை நிறுத்தங்களின் நன்மையும் தீமையும்.* 14. *வழிப்போக்கின் கல்விப்பயன்.* 15. *உட்காட்டி* (X-ray). 16. *இயந்திர முளை.* 17. *இருப்புப்பாதையால் இந்தியாவில் நேர்ந்துள்ள சமுதாய மாறுதல்கள்.* 18. *போரின் நன்மை தீமை.* 19. *அறிவுபெறும் வழிகள்.* 20. *தனக்குழைக்கின்றவன் பிறனுக்கும் உழைக்கின்றான்.*

## (4) சிந்தனைக் கட்டுரை

### வெளியின் விரிவு

நாம் பொதுவாய், மேலுலகம் நிலவுலகம் கீழுலகம் என உலகம் மூன்றேயென்றும், அவற்றுள் அனைத்தும் அடக்கம் என்றும், சொல்கின்றோம். இங்ஙனஞ் சொல்லும்போது, மேலுலக கீழுலகங்களின் அளவையும், நிலவுலகத்தைச் சூழவுள்ள பக்கவுலகங்களின் உண்மையையும் பற்றிச் சிறிதும் சிந்திப்பதேயில்லை. மேலேழும் கீழேழுமாக ஈரேழுலகங்கள் உண்டென்று கொள்ளினும், அவையும் மேறகூறிய மூவுலகங்களுக்குள் அடக்கமேயன்றி வேறல்ல. இனி, மேலுலகத்தை விண்ணுலகம் (தேவருலகம்) வீட்டுலகம் என ஈருலகங்களாகப் பகுப்பினும், அப்பகுப்பாலும் மேலுலக அளவை நாம் அறிவதில்லை.

நிலம் நீர் தீ வளி வெளி எனப் பூதம் ஐந்தென்றும், இவையே அனைத்தும் என்றும், ஏனைப் பூதங்கட்கெல்லாம்

வெளியானது இடமாகுமென்றும், மெய்ப்பொருட் பாகுபாட்டிற் கொள்கின்றோம். இப்பாகுபாட்டால், வெளியின் இயல்பை ஒருவாறுணர்கின்றோமே யன்றி, அதன் விரிவை உணர்வதில்லை.

“இவ்வண்டமானது, நூறுகோடி யோசனையுயரமும் நூறுகோடி யோசனைப் பரப்பும் உள்ளது. இங்ஙனம் ஆயிரகோடி அண்டங்களுள” எனச் சிவதருமோத்தரம் போன்ற தத்துவநூற் கூற்றுக்களைக் காணும்போது, நாம் திருந்திய அறிவு பெறாவிடினும், நம் குறுகிய நோக்கு சற்று விரிவடைகின்றது

“பெருபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகட லேழின் மணலள வாக”

என்று திருமூலரும்,

“அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்”

(திருவண்டப்பகுதி, 1 - 5)

என்று மாணிக்கவாசகரும் கூறியவற்றை நோக்கும்போது நம் வெளிநோக்கு இன்னும் சற்று விரிவடைகின்றது. ஆயினும், நம் பொருளாசையாலும் குறுகிய உறவு மனப்பான்மையாலும், ஒரே சமயம் சற்று விரியும் நோக்கும் விரைந்து குறுகிவிடுகின்றது.

இந்நிலவுலகம், மந்திரக்கால் அந்தரத்தில் நிற்கும் பந்துபோல், ஆகாயத்தில் நின்றுருள்கின்றது என்னும் உண்மையை நினைக்கும்போது; இவ்வுலகத்திற்கு மேலும் கீழும் இருப்பதுபோன்றே, பக்கவாட்டிலும் ஆகாயமிருக்கின்றதென்றும்; ஆகவே, எத்திசையிலும் எப்புறத்திலும் நோக்கினாலும், ஒரே அளவான வானவெளி நிலவுலகத்தைச் சூழ இருக்கின்றதென்றும் அறியலாகும்.

இந்நிலவுலகத்தில், எவ் இடப்பகுதிக்கும் ஓர் அளவு அல்லது எல்லையுண்டு. நாம் அதனை முட்டித்திரும்பலாம் 12,450 கல் தொலைவு சென்றால், 24,900 கல் சுற்றளவுள்ள இந்நிலவுலகத்தின் எல்லையையே முட்டித் திரும்பிவிடலாம். ஆயின், ஆகாயத்திற்கு ஓர் எல்லையுண்டோ? எத்திசையிலாயினும் அதனைமுட்டி த்திரும்பமுடியுமோ? அதற்கு ஓர் எல்லையுண்டெனின், அதற்கப்பால் என்னுளது? அதுவும் ஆகாயந்தானே! அது எங்குதான் முடிகின்றது? கோடிக்கல் தொலைவிலா? அல்லது நூறுகோடிக்கல் தொலைவிலா? அல்லது ஆயிரங்கோடிக்கல் தொலைவிலா? அல்லது கோடிக்கணக்கான கோடிக்கல் தொலைவிலா? அல்லது, ஒருவன் ஒருநாள் முழுதும் ஓர் எண்ணின்பின் சுன்னம் இட்டுக்கொண்டே சென்றால் எத்தனை வருமோ, அத்தனை எண்ணுள்ள பல்கோடிக்கணக்கான கல் தொலைவிலா? அல்லது, நம் உள்ளமானது ஒரு நொடிக்கு நூறிலக்கங் கோடிக்கல் வேகஞ் செல்வதாக வைத்துக்கொண்டு, நூறாண்டு வழிச் சென்றபின் அடையுந்தொலைவிலா? இல்லை, இல்லை இல்லவேயில்லை. போகப்போக ஆகாயமும் போய்க்கொண்டேயிருக்கின்றது. அதற்கு எல்லையே இல்லை. எத்திசையை நோக்கினும் இவ்வியல்பே. இது எண்ணுக்கும் எட்டாதது. நாம் தொலைவாகச் செல்லச் செல்ல, 7,900 கல் குறுக்களவுள்ள ஞாலமும் (பூமியும்) சிறிது சிறிதாய்ச் சிறுத்து, இறுதியில் இருந்த இடமும் தெரியாமல் மறைந்துவிடுகின்றது. இத்தகைய நிலைமையில், இறைவனா ஒருலகத்தை அல்லது மூவுலகத்தைத் தானா படைத்திருப்பார்?

கதிரவனைச் சூழுந் தொண்கோள்கள் (நவக்கிரகங்கள்) உண்டென்றும், அவற்றுட் பலவற்றிற்கு ஒன்றோ பலவோ துணைக்கோள்களும் உண்டென்றும், உள்நிலைக் கோள்கள் இடைநிலைக் கோள்கள் வெளிநிலைக் கோள்கள் ஆகிய மூவகையுள் இடைவகைமட்டும் 50,000 இருக்கலாமென்றும், வானநூலார் கண்டுள்ளனர். அதோடு, ஒவ்வொன்றாய்ப் புதுக்கோள்களும் கண்டு பிடிக்கப் பட்டுக்கொண்டே வரு

கின்றன. வானத்திலுள்ள வெள்ளிகட்குக் கணக்கே யில்லை. காணப்பட்டனவே இத்துணையாயின், காணப் படாதவை எத்துணையோ! பல வெள்ளிகள் கதிரவனிலும் கோடிக்கணக்கான மடங்கு பெரியன என்றும், கதிரவனும் ஒரு வெள்ளியே என்றும், மதியுஞ் செவ்வாயும் மக்கள் குடியிருப்பிற் கேற்றனவென்றும், சொல்லப் படுகின்றது. ஆகையால், இறைவன் படைத்தவை அல்லது இயற்கையா யுள்ளவை எத்தனை அண்டங்களோ! மேலும் நாம் இரா வானத்தில் தோன்றும் வெள்ளிகளையன்றி, பகல் வானத் தில் உள்ள வெள்ளிகளைக் காண்பதில்லை

கதிரவக் குடும்பத்தில (Solar System), மிகத் தொலை வான கோளாகிய குபேரன் (Pluto) கதிரவனிடத்திலிருந்து 3,670,000,000 கல் தொலைவிலுள்ளது கதிரவனொளி ஒரு நொடிக்கு 186,000 கல் விரைவாக இயங்குகின்றது ஆயினும், வெளியின் அளவோ, கதிரவக் குடும்பமும் இருந்த இடம் தெரியாமல் மறையும்படி விரிவுற்றதாம், என்றாக்கும் எட் டாதபடி எல்லையற்றதுமா யிருக்கின்றது ஆகையால், அண்டங்கள் மட்டுமன்றிக் கதிரவக் குடும்பங்களும் எத் துணையோ என்று வியத்தற்கிடமா யிருக்கின்றது.

இனி, தேவருலகமும் வீட்டுலகமும் மேலே யுள்ளன என்று, எல்லா மதத்தாராலுஞ் சொல்லப்படுகின்றது. ஞாலம் நாள்தொறும் கீழும் மேலுமாக உருண்டு கொண்டே யிருக்கின்றது. பரிதியின் பரப்பாலும் நிலக் கவர்ச்சியாலும், நாம் எப்போதும் ஞாலத்தின் மேனோக் கிய பகுதியிலேயே இருப்பதாகத் தோன்றினும்; உண்மை யில் நாம் நாள்தொறும் கீழும் மேலுமாகத் திசை மாறிக் கொண்டுதான் வருகிறோம். பகற்காலத்தில் மேனோக்கிய பகுதியிலும் இராக்காலத்தில் கீழ்நோக்கிய பகுதியிலு மிருப்பதால்தான், நமக்குப் பகலிரவுகள் தோன்றுகின்றன. நாம் குறிக்கும் மேலிடம், என்றும் ஒரே திசையிலிருப்ப தாகத் தோன்றினும், உண்மையில், மேலுங் கீழுமாக மாறிக்கொண்டுதான் வருகின்றது. ஆகையால், தேவ ருலகம் அல்லது வீட்டுலகம் மீத்திசையிலுள்ளதென்று

கருத்தளவிற் கொண்டாலும், உண்மையில் உணர்ச்சியில்லாமல் ஞாலத்தைச் சூழ்ந்த வட்டமான திசை முழுவதையும், அத் தேவருலக அல்லது வீட்டுலகத் திசையாகக் குறித்து வருகின்றோம். இதன்படி தேவருலகம் ஞாலத்தைச் சூழவுள்ளதென்று கொள்ள வேண்டும். ஆயின், நாம் அவ்வாறு கொள்வதில்லை. பொதுவாக, மேலிடம் உயர்வையும் கீழிடம் தாழ்வையுங் குறிப்பதாக நாம் கொண்டு, மீத்திசையை வீட்டுத் திசையாகக் குறிக்கின்றோம். ஆனால், கடவுட்கு மேல் கீழென்றும் திசை வேறுபாடின்மையாலும், பத்துத் திசைகளும் பொருளை நோக்கியும் இடத்திற்கேற்பவும் அவ்வப்போது உறவு நிலையிற் குறிக்கப்படுவதல்லது நிலையான இடமாகாமையாலும், வெளியின் அளவானது உள்ளத்தாலும் உணரப்படாதபடி விரிவாயிருப்பதாலும், மீத்திசையென்று ஒரு சககரத திசையை நாம் குறிப்பதாலும், தேவருலகம் அல்லது வீட்டுலகம் இன்ன திசையில அல்லது இன்ன இடத்திலுள்ளதென்று உண்மையிற் குறிக்க முடியாதாம்

வீட்டுலகிற்குக் கூறியது நரக வுலகிற்கும் ஒக்கும். சிலர் வீடும் நரகமும் உண்டென நம்புவதில்லை. சிலர் நரகத்தின் என்றுமுண்மையை நம்புவதில்லை. அதாவது, அது இதுபோதில்லையென்றும் எதிர்காலத்தில் உலக முடிவின்பின் ஏற்படும் என்றும் நம்புகின்றனர்.

ஆகவே, வெளியானது எண்ணுக் கெட்டாத விரிவுடையதென்றும், மண்ணுலகம் போன்ற அண்டங்கள் மட்டற்ற கோடியென்றும், கதிரவக் குடும்பங்களும் கணக்கற்றிருக்கலாமென்றும், விண்ணுலக நரகங்களின் திசையும் இடமும் திட்ட வட்டமாய்ச் சுட்டற்கியலாவென்றும், அறிந்து கொள்க.

இனி, வெளியானது விளக்க முடியாவாறு விரிவுபட்டிருப்பதால், அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து எல்லா நம்பு மதங்கட்கும் பொதுவான இறைவனும், சித்த மதக் கொள்கைப்படி, ஊரும் பேரும் உருவும் அளவும் இல்லாதவனென்றே பெறப்படும். ஆகலின், அவற்றை

அவனுக்கு வேறுவேறுபடைத்துக்கொண்டு போரிடுவது, குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதையே ஒக்கும்.

### பயிற்சி

பின்வருபவற்றைப் பற்றிச் சிந்தனைக் கட்டுரை வரைக :—

(1) போதுமென்றமனமே பொன்செய்யும் மருந்து. (2) பழையன கழிதலும் புதியன புகுதலும். (3) வறுமை மாந்தன் அமைப்பே. (4) கோபமும் குணமாம் (5) நல்லொழுக்கமே நற்சமயம். (6) பெருந்தகை யார்? (7) உரைநடைக்கும் செய்யுட்கும் உள்ள வேற்றுமை. (8) "பெருமையுஞ் சிறுமையும் தான்றர வருமே". (9) நடந்து காட்டுவதே நல்ல கற்பனை. (10) பிறப்பால் சிறப்பில்லை. (11) சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும். (12) அழிப்பாலும் ஆக்கமுண்டாம். (13) தட்பவெப்ப நிலையால் மக்களிடை வேறுபடுவன. (14) பிறர் நலம் பேணல். (15) பல்வகை வயவர் (வீரர்). (16) கடவுள் ஏன் உலகங்களைப் படைத்தார்? (17) பண்பாடு (Culture).

## (5) பாணிப்புக் கட்டுரை

### எதிர்கால அறிவியல் வளர்ச்சி

மாந்தன் தோன்றிய காலத்திலிருந்து, அறிவியற் கலை வளர்ந்துகொண்டு வருகிறது. சிலர், அறிவியற்கலை தற்காலத்திற்கே உரியதென்பர். அது தவறாகும். எந்தக் கட்டடமும் அடிப்படையின்றி எழாததுபோல, எந்தக் கலையும் அடிப்படையின்றித் தோன்றாது. எவ்வகைக் காரியத்தை எடுத்துக்கொள்ளினும், அதன் அடிப்படை நிலைகட்கு அதிகக்காலம் செல்லத்தான் செல்லும். ஒரு காரியத்தின் நிலைகள், கீழ்ப்படக் கீழ்ப்பட நீண்ட காலத்திலும், மேற்பட மேற்படக் குறுகிய காலத்திலும் அமைவது இயல்பு. தற்கால அறிவியலுக்கு முற்கால அறிவியல் அடிப்படையாதலின், அது மெல்லமெல்ல வளர்தற்கு நீண்டகாலஞ் சென்றது. முற்கால அறிவியலுக்குத் தற்கால அறிவியல் மேற்படையாதலின், அது விரைந்து வளர்கின்றது. இவ்வேகத்தினால், தற்கால அறிவியலே

அறிவியலென்றும், முற்கால அறிவியலுக்கும் இதற்கும் தொடர்பில்லையென்றும் கொள்வது தவறாம்.

தற்கால அறிவியல் 18-ஆம் நூற்றாண்டில் தொடங்கிற்றென்னலாம். 1765-இல், நீராவியியந்திரம் இங்கிலாந்தில் சேம்சு வாட் (James Watt) என்பவரால் புனைவு செய்யப்பெற்றது. அன்று நீராவியூழி தொடங்கிற்று. 1835-இல், அமெரிக்காவில், மார்சு (Morse) என்பவரால் மின்சாரத் தொலைவரைவு (Electric Telegraph) புனைவு செய்யப்பெற்றது. அன்று மின்சாரவூழி தொடங்கிற்று. இவ்விரு புதுப்புனைவுகளின் பயனாக, மேலும் மேலும், பலவேறு புதுப்புனைவுகள் ஒவ்வொன்றாய்க் கண்டுபிடிக்கப்பட்டும் புனையப்பெற்றும் வருகின்றன. ஒவ்வொரு புதுப்பொருளும் சொற்பக்காலந்தான் புதிதாயிருக்கும்; பின்பு பழகப் பழகப் பழைமையாய்ப் போய்விடும். ஆதலால், கடந்த இருநூற்றாண்டிற் புதுப்புனைவு செய்யப்பெற்றவையெல்லாம், இன்று பழைமையாயுள்ளன.

அறிவியல் இன்று விரைந்து வளர்வதனாலும், அதற்கோர் எல்லை கூறமுடியாமையாலும், எதிர்கால அறிவியல் எத்துணை வளர்ச்சிபெறுமென்று திட்டவட்டமாய்ச் சொல்லற்கியலாது. ஆயினும், நிகழ்கால நிலைமையைக்கொண்டு எதிர்கால நிலைமையை ஒருவாறு ஊகித்துணரலாம்.

முதலாவது, இதுபோது செல்வர்க்கே கிட்டுகின்ற பல அறிவியல் வசதிகள், எதிர்காலத்தில் ஏழைகட்கும் கிட்டலாம். இப்போது இயங்கிப் போக்குவரத்து நடைபெறுவதுபோன்றே, எதிர்காலத்தில் வானூர்திப் போக்குவரத்தும் பெருவாரியாய் நடைபெறலாம்.

அமெரிக்காவில், பொருநிலைக்கிறவர் மட்டும் 'வெள்ளி ஊதாகியம்' (Silver Iodide) என்னும் ஒரு புனைசலவைப் பொருளை வான்வழியாக முகில் மண்டலத்திற் செலுத்தி, செயற்கை மழையை வேண்டியாங்கு பெய்வித்துக் கொள்ளும் முறையை, நாளடைவில் அங்கும் பிறநாட்டிலும்

அரசியலாரே மேற்கொண்டு, ஏராளமாக மழைபொழிவித்துத் தத்தம் நாட்டைப் பெருவளப்படுத்திக் கொள்ளலாம்.

ஒவ்வொரு வீட்டிலும் தொலைபேசி (Telephone) அமைவதுடன், தொலைகாணி (Television) யும் அதனுடன் இணைக்கப்பட்டு, பல நேர்ப்பேச்சும் எழுத்துப் போக்குவரத்தும் இடம்பெயர்வும் இல்லாமலே காரியங்கள் நடைபெறலாம்.

இப்போது புனையப்பெற்றுள்ள இயந்திர மூளை கொண்ட இயந்திர மாந்தனை அமைக்கப்பெற்று, அதன் வாயிலாய் மாந்தன் செய்யும் பலவேலைகளும் செய்விக்கப் பெறலாம். இரு பகைநாடுகள் இயந்திர மாந்தர் படைகளைக்கொண்டே போர்புரிந்து, பெரும்படை நாடு அல்லது வன்படை நாடு வெற்றிபெறலாம்.

இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய உயிருள்ள பொருட்களும் அவற்றின் உறுப்புக்களும் போன்றே, உயிரற்ற கல் மண் முதலிய இயற்கைப்பொருள்களின் சத்தும் முதன்மையான உணவாகலாம். இப்போதே கல் இரும்பு பொன் முதலியவற்றின் சத்தும் நீறும் மருந்தாக உட்கொள்ளப்பெறுகின்றன. எதிர்காலத்தில் இவை உயிர்வாழ்க்கைக்குப் போதிய உணவாக அமையலாம என்பதில் வியப்பில்லை. மருந்தும் ஒருவகை யுணவென்றும், உணவும் ஒருவகை மருந்தென்றும், அறிதல்வேண்டும் நலக்காலத்தில் உண்பது உணவு; நோய்க்காலததில் உண்பது மருந்து.

ஒருவர்க்கு நோயாலோ சேதத்தாலோ வாழ்க்கையில் நேர்ந்த உறுப்புக் குறையை, பிற மாநதனின் அல்லது விலங்கின் உறுப்புகொண்டு நிறைக்கின்றனர். எதிர்காலத்தில், பிறவியிலமைந்த உறுப்புக் குறையைக்கூட இம்முறையில நிறைக்கலாம். மாந்தன் சராசரி வாழ்நாளை நீட்டிக்கப் பல வழிவகைகள் கண்டுபிடிக்கப்படலாம். இனி, எல்லா அறிவியற் புதுமைகட்கும் கொடுமுடியாக,

இறந்த மாந்தனை உயிர்ப்பிக்கப்பெறலாம். இது எல்லார் நிலையிலும் இயலாவிடினும், சிலர் நிலையிலாவது இயன்று அவர் வாழ்நாள் நீட்டிக்கப்பெறலாம்.

இங்ஙனம், முற்காலத்தில் யோகியற் சித்தர் அடைந்த பற்பல சித்திகளை, எதிர்காலத்தில் அறிவியற் சித்தரும் அடைந்து, அவற்றைப் பிறர்க்கும் பயன்படுத்துவார் என்பது வீண் கனவாகாது.

## பயிற்சி

பின் வருபவற்றைப் பற்றிப் பாணிப்புக் கட்டுரை வரைக :—

1. நீர் முதலமைச்சரானல் நாட்டிற்கு என்ன நன்மை செய்வீர்? 2. உமக்குப் பத்தாயிரம் உருபா பரிசு கிடைத்தால் அதை எங்ஙனம் செலவிடுவீர்? 3 அஃறிணையுயிரிகளும் பேசுமாயின் என்ன நேர்ந்திருக்கும்? 4. கடந்த போரில் இற்றிலர் (Hitler) வென்றிருந்தால் என்ன நேர்ந்திருக்கும்? 5. மேனாட்டார் இந்தியாவிற்கு வந்திராவிட்டால், இந்தியா இப்போது எந்நிலையில் இருந்திருக்கும்? 6. மாந்தன் நிலவாணனாயின் (நித்திய வாசியாயின்) என்னென்ன நேர்ந்திருக்கும்? 7. புலவரெல்லாம் பெருஞ்செல்வரா யிருந்திருப்பின் இலக்கியம் தோன்றியிருக்குமா? 8. உள்ளத்தை யறியுங்கருவி கண்டு பிடிக்கப்படின், என்னென்ன மாறுதல் நேரும்? 9. கூண்டிலடைக்கப்பட்ட ஒரு காட்டு விலங்கு என்னென்ன நினைக்கலாம்? 10. கணவன் கொலையுண்டதை யறிந்த கண்ணகி மனநிலை எவ்வாறிருந்திருக்கும்? 11. எல்லாருஞ் செல்வராயின் எவ்வாறு வாழ்க்கை நடைபெறும்?

## (6) தருக்கியற் கட்டுரை

### அறிவியலால் நன்மையா? தீமையா?

இக்காலவுலகின் உயர்வுக்குரிய காரணங்களுள் அறிவியலும் ஒன்றும். மாந்தன் மகிமை, பழங்காலத்திற் சித்து வாயிலாய் விளங்கி வந்தது போன்று, இக்காலத்தில் அறிவியல் வாயிலாய் விளங்கி வருகின்றது. அறிவியலால் மாந்தன் பெற்றுள்ள பேறுகள் அளவிடுந்தரத்தனவல்ல. ஆயினும், இந்தியருட் சிலர் அவற்றை ஒப்புக்கொள்ளா

மல், அறிவியலால் என்றுந் தீமையே என்று வாய்கூசாது, அறைந்து வருகின்றனர். இது, அறிவினாற்கேடும் அறியாமையால் ஆக்கமும் உண்டாகும் என்று கூறுவது போலாம்.

அறிவியலால் தீமையேயன்றி நன்மையில்லை. எந்தக் கைத்தொழிலிலும், இயந்திரம் வந்தபின் பலர்க்கு வேலையில்லாமற் போயிற்று. முந்நூற்றுவர் வேலை செய்த நெசவுச் சாலையில், இன்று மூவரே வேலை செய்கின்றனர். நூற்றுக் கணக்கான பெண்டிர் குத்தின நெல்லை, இன்று ஒரே இயந்திரம் அரைக்கின்றது. புகைவண்டியும் இயங்கியும் வந்தபின், பல்லாயிரக்கணக்கான மாட்டுவண்டி குதிரைவண்டிக் காரருக்கும் கூலியாட்களுக்கும், பிழைப்பில்லாது போயிற்று. இங்ஙனம், எத்துறையை நோக்கினும், அறிவியலாற் பெருங்கேடே விளைந்துள்ளது எனின்; அஃதன்று. இயந்திரங்களின் பொதுவான பயன், எத்தொழிலையும் பெருவாரியாகக் குறுகிய காலத்திலும் குறைந்த செலவிலும் அழகாகவும் வசதியாகவும் உறுதியாகவும் செய்வதே. தொல்காப்பியவுரையை ஒருவர் ஏட்டில் எழுத்தாணி கொண்டெழுதத் தொடங்கின், அதை முடிக்க முழு மாதம் ஆகுமே! அதற்கெவ்வளவு கூலியாகும்! அப் புத்தகம் முழுதும் ஓர் ஏட்டுச் சுமையாகுமே! எவ்வளவு போற்றினும் சில்லாண்டில் அது சிதைந்துவிடுமே! ஒரு புத்தகத்திற்கே இப்பாடாயின், இனிப் பல புத்தகத்திற்கு எப்பாடு! அச்சியந்திரமாயின், அழகிய பளபளப்பான உறுதியுள்ள வெண்டாளில், தெளிவான மங்காத முத்துப் போன்ற எழுத்துக்களில், முப்மாதத்திற்குள் பல்லாயிரக் கணக்கான தொல்காப்பியப் படிகளைக் குறைந்த விலைக்கு எளிதாக எடுத்துக் கொள்ளலாமே! திருச்சியிலிருந்து ஒருவன் சென்னைக்கு மாட்டுவண்டியிற் செல்லின், சேதமும் பறிகொடுப்பு மில்லாமற் சேரினும், ஒரு மாதமாகுமே! இன்றோ, புகைவண்டியில், அரைநாளில், குறைந்த செலவில், வசதியாகவும் பாதுகாப்புடனும் சென்று சேரலாமே! இதுமட்டுமா? உலக முழுதும் ஒருவாரத்திற்குள் வானூர்

தியிற் சுற்றி வரலாமே! இவையெல்லாம் எத்துணை வசதி! இவை இயந்திரமில்லாமல் இயலுமா? அன்றி, இவையின்றி இக்காலத்து வாழ்வதும் ஒரு வாழ்வா? ஆகவே, இயந்திரத்தினால் பலவகையிலும் நன்மையே விளைகின்றதென்பது தெளிவு. ஏதேனும் ஓர் இயந்திரத்தினால் சிலர்க்கோ பலர்க்கோ வேலையில்லாமற்போகின், அவர் வேறு வேலை மேற்கொள்வதன்றி, அவ்வியந்திரத்தின்மேற் குறை கூறுவது சற்றும் பொருந்தாது என்க.

ஆம். நீர் கூறியநோக்கும். ஆயின், இயந்திரங்களெல்லாம் மிகவுயர்ந்த விலையினவாதலின், பெருஞ் செல்வர்க்கே அவற்றை வாங்க இயலும். இதனால், முதலாளித்துவமன்றோ முன்னினும் பன்மடங்கு பெருகுகின்றது! இதனால் நாட்டிற்குக் கேடுதானே யெனின்; அக்கேடு இயந்திரத்தினால் வருவதன்று; சீர்கேடான சமுதாய அரசியல் முறைகளால் வருவது. இவற்றைச் செம்மையாக்கின், அக்கேடும் நீங்கிவிடும் என்க.

சரி. நீர் சொல்வது உண்மைதான். ஆயினும், இயந்திரத்தினால் அழிப்புத்தொழில் மிகுகின்றதே! பத்துக் கற்பரப்பும் ஒரு பட்டினமும் ஒரே நொடியிற் பாழாகச் செய்யும் அணுக் குண்டைப்பற்றி, இதற்குமுன் என்றேனும் கேட்டதுண்டோ வெனின்; கேட்டதில்லை. ஆயினும், அழிப்புத் தொழில் எக்காலத்திலேதான் இல்லாதிருக்கின்றது? மக்கள் கூடி வாழத் தொடங்கியதிலிருந்து, பகையும் போரும் தொடர்ந்து வருகின்றன. அழிப்புத் தொழில் இல்லாத போர் ஏதேனும் உண்டோ? ஒரு புல்லை நகத்தாற் கிள்ளிவிடலாம். ஒரு செடியைக் கையால் முறிக்க வேண்டும். ஒரு கன்றைக் கத்தியால் அறுத்துவிடலாம். ஆனால், ஒரு மரத்தைக் கோடரி கொண்டல்லவா வெட்டவேண்டும்? இங்ஙனமே, முற்காலத்தில் சிறுபடைகளைச் சிறு கருவிகளைக் கொண்டு அழித்து வந்தனர். மக்கட் பெருக்கமுள்ள இக்காலத்து மாபெரும் படைகளை, அணுக் குண்டாலன்றி வேறு எக் கருவியால் அழிக்கமுடியும்? மேலும், மக்கட் பெருக்கம்

இடையறாது தொடர்ந்து நிகழ்வதாலும், மக்கட் குண வளிக்கும் மாநிலம் ஒரு குறித்த தொகையினர்க்கே உண வளிக்கக் கூடிய அளவினதா யிருத்தலாலும், அழிப்புத் தொழிலின்றி ஆக்கத் தொழிலே நிகழ்வதாயின், சிறிது காலத்திற்குள் நிற்க இடமில்லாதபடி மக்கள் நிறைந்து ஒருவரையொருவர் வெட்டிக் கொல்லும் நிலைமையே ஏற் படும் என்க.

"நெட்டிடையிட்டுப் பிள்ளை பெறுகின்றவனும் இரு பத்தைந்தாண்டில் இரட்டித்திருக்கின்றான். இவ்வேகத் திற் செல்லின், ஆயிரம் ஆண்டிற்குள் அவன் எச்சத்திற்கு உண்மையில் நிற்க இடமும் இல்லாமற் போம்," என்று டார்வின் கூறுதல் காண்க.

இடையிடை சில போர்கள் நிகழ்ந்து வந்தும், பத் தாண்டிற்கு முன் 40 கோடியாயிருந்த இந்திய மக்கட் டொகை, இன்று 50 கோடியாகப் பெருகியுள்ளது. சென்ற உலகப்போரில் தொடங்கிய உணவுப் பங்கீடு இன்றும் ஒழியாதிருத்தற்கு, மக்கட் பெருக்கமும் ஒரு காரண மாகும். கள்ளவிற்பனையும் பொருட் பதுக்கமுமின்றி நேர்மை மிக்க இங்கிலாந்திலும், உணவுப் பங்கீடு தொடர்ந்து வருவதற்கு மக்கட் பெருக்கமன்றி வேறெக்காரண மிருத் தல் கூடும்?

அழிப்புத் தொழிலும் உயிரின ஆக்கத்திற்கு வேண்டி யிருத்தல் பற்றியே, அதையும் படைப்புக் காப்பொடு சேர்த்து இறைவனுக்கு முத்தொழில் குறித்ததும்,

> "நீபா ரதமெரில் யாவரையும் நீறாக்கிப்
> பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா!
> கோபாலா! போரேறே! கோவிந்தா! நீயன்றி
> மாபா ரதமகற்ற மற்றார்கொல் வல்லாரே?"

என்று சகாதேவன் கண்ணனைப் புகழ்ந்ததும் என்க.

இதுகாறுங் கூறியவற்றால், இயந்திரத்தால் நன்மையே மிகுதியென்றும், ஆராய்ச்சியிலாதாரும் பிறரை யேமாற் றிப் பிழைப்பவருமே அதன் தீமையை மிகுத்துக் கூறுவ ரென்றும், அறிந்து கொள்க.

### பயிற்சி

பின் வருபவற்றைப் பற்றித் தருக்கக் கட்டுரை வரைக :—

1. கடவுள் உண்டா? இல்லையா? 2. ஆங்கில ஆட்சியால் இந்தியாவிற்கு நன்மையா? தீமையா? 3. மாந்தன் வாழ்க்கை நடைபெறுவது விதிப்படியா? விருப்பப்படியா? 4. கணியம் பார்ப்பது நல்லதா? தீயதா? 5. தன் மூப்பாட்சி (Autocracy or Dictatorship) எல்லாவிடத்துந் தீயதா? 6. இரப்போர்க் கீதலெல்லாம் அறமாகுமா? 7. சரித்திரம் பொது இலக்கியத்தைச் சேர்ந்ததா? தனிக்கலையா? 8. ஒரு மக்களினம் தொகுதியாக முன்னேறும்போது தனிப்பட்டவன் நிலை அதைத் தாக்குமா? 9. மாணவர்க்குப் பரிசளிப்பது நன்றா? தீதா? 10. நூலாக்கத்திற்கு வேண்டும் தூண்டுதல் அகத்ததா? புறத்ததா? 11. மாணவர்க்குத் தேர்வு நடாத்துதல் தக்கதா? தகாததா? 12. கொலை எல்லாவிடத்துங் குற்றமா? 13. பழமொழிகள் எல்லாம் நன்னடத்தைக்குத் தூண்டுமா? 14. இந்தியாவிற்குப் பொது மொழியாகத் தக்கது ஆங்கிலமா? இந்தியா? 15. தமிழிற் பிறமொழி கலத்தல் நன்றா? தீதா? 16. மதம் மக்கள் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையா? 17. மரக்கறியூண் அருளுடைமையின் அறிகுறியா? 18. தமிழிற் பிறமொழி யெழுத்துக்களைச் சேர்த்தல் வேண்டுமா? வேண்டாமா? 19. உடன் கல்வி (Co-education) தகுமா? 20. இனவுணர்ச்சி நல்லதா?

## (7) ஆராய்ச்சிக் கட்டுரை

### தமிழன் பிறந்தகம்

உலகத்திற் பல மக்களினத்தின் பிறந்தக வரலாறுகள் வரையப்பட்டும் ஒப்புக்கொள்ளப்பட்டும் உள்ளன. தமிழன் பிறந்தக வரலாறு, இன்னும் பலரால் அறியப்படாமலும், சிலரால் அறியப்படினும் பிறரால் ஒப்புக்கொள்ளப் படாமலும், உள்ளது. தமிழன் பிறந்தகம் பற்றிய வரலாற்று நூல் இதுவரை எதுவும் இல்லாவிடினும், அதை அறிதற்கு வேண்டும் சான்றுகள் தமிழ்மொழியிலும் இலக்கியத்திலும் இல்லாமலில்லை.

தமிழ்மொழியானது, திரவிடம் என்னும் குடும்பத்தைச் சேர்ந்ததாகும். இக்குடும்பம் இந்தியாவிலேயே உள்ளது. இந்தியாவுள்ளும், தெற்கே செல்லச் செல்லத

தூய்மையாகவும், வடக்கே செல்லச் செல்லத் திரிந்தும், உள்ளது. தென் கோடியிலுள்ள தமிழுங்கூட, தென்பாற் செல்லச் செல்லச் செந்தமிழாகவும், வடபாற் செல்லச் செல்லக் கொடுந் தமிழாகவும், வழங்குகின்றது. பண்டை நாளில் முத்தமிழ் நாடுகளுள்ளும் பாண்டிநாடே தமிழ்நாடென்றும், முத்தமிழ் வேந்தருள்ளும் பாண்டியனே தமிழ்நாடனென்றும், சிறப்பித்துச் சொல்லப் பட்டனர். பாண்டி நாடு செந்தமிழ்நாடா யிருந்ததினாலேயே பாண்டியர் சிறந்த தமிழ்ப்பற்றுடையராயிருந்து, முத்தமிழ்க் கழகங்களையும் வளர்த்து வந்தனர்.

பழந் தமிழிலக்கியத்திற் கூறப்பட்டுள்ள முதல் கருவுரியென்னும் மூவகைப்பொருள்களையும் நோக்கின், அவை யாவும் இத் தென்னாட்டிற்கே யுரியவையா யிருக் யிருக்கின்றன. அதோடு, பிற நாட்டிற்குச் சிறப்பாயுள்ள எதுவுங் கூறப்படவில்லை.

முதலாவது, முதற் பொருளை நோக்குவோம். குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்னும் ஐவகை நிலமும், இளவேனில் முதுவேனில் கார் கூதிர் முன்பனி பின்பனி என்னும் அறுவகைப் பெரும்பொழுதும், தொல்காப்பியத்திற் சொல்லப்பட்டுள்ளபடியே இன்றும் நிலவுகின்றன.

இரண்டாவது, கருப்பொருளை நோக்குவோம். குறிஞ்சி நிலத்துச் சேயோன் என்னும் (முருக) வணக்கமும், முல்லை நிலத்து மாயோன் என்னும் (திருமால்) வணக்கமும், பாலை நிலத்து மாயோள் என்னும் காளி வணக்கமும், மருதநிலத்து வேந்தன் (இந்திரன்) வணக்கமும், நெய்தல்நிலத்து வாரணன் (வருணன்) வணக்கமும், ஆரிய வருகைக்கு முந்திய தொன்றுதொட்டு இத் தென்னாட்டிற்கு அல்லது பனிமலைவரை பரவியுள்ள திரவிட இந்தியாவிற்கு உரியவையே. இவை ஆரிய நூல்களிற் கூறப்பட்டிருப்பதுபற்றி, இவற்றை ஆரிய வணக்கமெனக் கொள்ளுதல் தவறாகும். இவற்றுள், முன்னைய மூன்றும் இத் திணைமயக்கக் காலத்தில் பல நிலத்தும் பரவியுள்ளன; பின்னைய விரண்டும் வழக்கிறந்தன. தமிழரின் பழைமை

யான இடப்பெயர் குடிப் பெயர்களும், உணவுப் பொருள்களும் ஆடையணிகளும் தொழில்களும பலவகைக் கருவிகளும் பழக்க வழக்கங்களும்; தமிழ் நாட்டு மரஞ் செடி கொடிகளும், நீருயிரிகளும், ஊர்வனவும் விலங்குகளும், பறவைகளும்; இன்னோரன்ன பிறவும்; தொன்னூல்களிற் சொல்லப்பட்டபடியே, இன்றும் தமிழ்நாட்டிலிருந்து வருகின்றன. அசுணம் யாளி முதலிய விலங்குகளும், ஆண்டலைப்புள் எண்காற்புள் முதலிய பறவைகளும், இறந்துபட்டன.

மூன்றாவது உரிப்பொருளை நோக்குவோம். காதற் பருவமும், களவு கற்பு என்னும் கைகோள் முறையும், இல்லற வாழ்க்கைக் காதற் செயல்களும், முதனூலெழுந்த அன்றும் இன்றும் ஒரேபடியா யுள்ளன.

இனி, பழந்தமிழிலக்கியத்தில் ஆங்காங்குள்ள வரலாற்றுக் குறிப்புக்களை நோக்கின், அவையாவும், இத்தென்னாட்டையும் இதற்குத் தெற்கில் அமிழ்ந்துபோன குமரிநாட்டையுமே, தமிழ் நாடாகக் குறிக்கின்றன. தலைச்சங்கமிருந்தது தென்மதுரை யென்றும், அந்நகர் பஃறுளி யாற்றங்கரையி லிருந்ததென்றும், முச்சங்க வரலாறுகளெல்லாம் குறிக்கின்றன. தெற்கே பஃறுளி என ஓர் ஆறிருந்தமையைக் கடைச்சங்கக் காலத்துப் புலவரான நெட்டிமையாரும் குறிக்கின்றார் (புறம். 9.) பஃறுளியாற்றிற்கும் அதற்கு வடக்கில் கடல் கொள்ளப்பட்ட குமரியாற்றிற்கும் இடையே உள்ள தொலைவு, எழுநூற்றுக் காதவழி யென்று சிலப்பதிகார விரிவுரை யாசிரியரான அடியார்க்கு நல்லார் கூறுகின்றார். ஒருகாதம் மூன்று கல்லாகக் கொள்ளின், அவ் ஈரியாற்றிற்கும் இடையே 2100 கல் தொலைவிருந்ததாக அறியப்படும். பதினெட்டு நூற்றாண்டிற்கு முந்தியவரும், சேரன் செங்குட்டுவனின் இளவலாரும், நடுநிலைதிறம்பாத முற்றததுறந்த முழு முனிவருமாகிய இளங்கோவடிகள்;

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள

வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி"

என்று கூறியிருப்பதால் (சிலப்பதிகாரம், 11: 19-22) பஃறுளியாற்றுண்மை வலியுறுவதோடு, அது சங்கை போலும் ஒரு பெரியாறு என்பதும், அது பிறந்த மலை பனிமலைபோலும் ஒரு பெருமலை யென்பதும் பெறப்படும்.

தலைச்சங்கமிருந்த பாண்டியன் தலைநகரான தென்மதுரை பஃறுளியாற்றங் கரையிலிருந்ததாயின், அதற்குத் தெற்கிலும், நிலமும் பாண்டிநாட்டுப் பகுதியும் இருந்திருத்தல் வேண்டும். அங்ஙனமாயின், கிளேற்றர் (Sclater) வாலேசு (Wallace) முதலிய மேனாட்டாராய்ச்சியாளர், சரித்திரத்திற்கு முந்திய பழங்காலத்தில் இந்தியாவையும் ஆத்திரேலியாவையும் ஆப்பிரிக்காவையும் இணைத்துக் கொண்டிருந்து, பின்பு மூழ்கிப்போனதாகக் கூறும் 'லெமுரியா' (Lemuria) என்னும் பெரு நிலப்பரப்பும்; குமரி நாடாகிய பழம் பாண்டிநாடும்; ஒன்றேயாதல் வேண்டும். பெரும்பாணாற்றுப் படையில், யவனர் பாய்மரத்திலிட்ட விளக்கிற்கு உவமை கூறப்பட்டுள்ள காரன்னம, இன்று தமிழ் நாட்டிலில்லாமலும் தாசுமேனியா (Tasmania) த் தீவிற்கே யுரியதாயுமிருப்பது; பழங்காலத்தில் அத்தீவிற்கும் தமிழ்நாட்டிற்கு மிருந்த தொடர்பைப் புலப்படுத்தும்.

இனி, குமரி நாட்டையே மாந்தன் பிறந்தகமென்று மேனாட்டாராய்ச்சியாளர் குறிப்பதாலும், தென்னைக் கோளப் பழங்குடி மக்களெல்லாம் முந்தியல் (Primitive) மாந்தரா யிருப்பதாலும், தமிழரும் பழைமையான இனமாயும் பல முந்தியற்கூறுகளுடையராயு மிருத்தலாலும், தமிழன் பிறந்தகம் குமரிநாடே என்று துணியப்படும். எளிய மொழியொலி யுடைமையும், இயற்கைப் பேதைமையும், மகளிர் காது வளர்த்தலும், பிறவும், தமிழரின முந்தியன்மைக் கறிகுறியாம். இன்றும், பாண்டிநாட்டுத்

தமிழர்க்கு 'ஜ ஷ க்ஷ' முதலிய வடமொழி வல்லொலிகள் பலுக்க (உச்சரிக்க) வருவதில்லை. இலக்கியத்தில், வள்ளைத் தண்டை மகளிர் காதிற்கு உவமை கூறியிருத்தலும், கனங்குழை கொடுங்குழை எனக் காதணிகள் குறிக்கப் பட்டிருத்தலும், தமிழ்மகளிர் பண்டைக்காலத்திலும் காது வளர்த்திருந்தமையைத் தெரிவிக்கும்.

தமிழர் வடநாட்டினின்று வந்தவராயின், வந்த புதிதி லாவது வெள்ளையரா யிருந்திருத்தல் வேண்டும். மேலும் அவ் வடநாட்டிலேயே தூய தமிழ் வழங்குவதாயும், தமிழின் தொன்னிலைகளை யறியக்கூடிய நிலைமை யுள்ள தாயும், இருத்தல் வேண்டும். அங்ஙனமில்லாமையானும், தென்னாட்டிற்கும் வெப்ப மண்டலத்திற்கு முரிய பொருள் களே பண்டையிலக்கியத்திற் கூறப் பட்டிருத்தலானும், குமரிநாடே தமிழன் பிறந்தகம் என்பது முடிந்த முடிபாம்.

## பயிற்சி

பின் வருபவற்றைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை வரைக :—

1. அகத்தியர் வரலாறு. 2. தொல்காப்பியர் இனம். 3. வள்ளுவர் மதம். 4. இந்திய நாகரிகம் தமிழரதா? ஆரியரதா? 5. இராமா யணம் உண்மைக் கதையா? கட்டுக்கதையா? 6. சேரன் வஞ்சி எது? 7. வீணை தென்னாட்டுக் கருவியா? வடநாட்டுக் கருவியா? 8. வடமொழிக் கலப்பால் தமிழ் தளர்ந்ததா? வளர்ந்ததா? 9. 'கல்வி யிற் பெரியவன் கம்பன்' என்பது சரிதானா? 10. மாணிக்க வாசகர் காலம்.

குறிப்பு :—ஆராய்ச்சிக் கட்டுரைகள், வகுப்பறையிலும் தேர்வுக கூடத்திலும், ஒருமணி நேரத்திற்குள் எழுதப் பெறுந் தரத்தனவல்ல; நீண்டகாலங் கொடுக்கப்பெற்று ஆய்ந்தோய்ந் தெழுதபபெறும் பரிசுப் போட்டிக் கட்டுரை களாகும்.

## (8) அங்கதக் கட்டுரை

### i. செம்பொருளங்கதம்

### மறுமலர்ச்சி

மறுமலர்ச்சியாவது திரும்ப மலர்தல். ஒரு நாட்டில் இலக்கியக்கல்வி முற்றும் வழக்கற்றுப் போய்ச் சில பல நூற்றாண்டின்பின் மீண்டும் புத்துயிர் பெற்றெழுமாயின், அது மறுமலர்ச்சி யெனப்படும். 14-ஆம் 15-ஆம் 16-ஆம் நூற்றாண்டுகளில், ஐரோப்பிய நாடுகளில், சிறப்பாக இங்கிலாந்தில், பழைய இலத்தீன் கிரேக்க இலக்கியக்கல்வி புதுப்பிக்கப் பெற்று மறுமலர்ச்சி (Renasence) எனப் பெயர் பெற்றது. தமிழ்நாட்டில் இதுபோது ஒருவகை மறுமலர்ச்சி தோன்றியுள்ளது. பழந்தமிழிலக்கியக் கல்வி இன்று புதுப்பிக்கப் பெற்றுப் பலராலும் கற்கப்பெறின் அதற்கு மறுமலர்ச்சி யென்னும் பெயர் பொருந்துவதாகும். ஆயின், பழந்தமிழிலக்கியத்திற்கு மாறான போக்கில் புததிலக்கியம இயற்றப்பெறுவதே, இன்று மறுமலர்ச்சி யென்னும் பெயர் பெற்றுளது.

ஒரு நாட்டில் இலக்கியம் சிறந்த முறையில் வளர வேண்டுமாயின், அது சிறந்த புலவர் பொறுப்பிலிருத்தல் வேண்டும் தமிழ்நாட்டில், மறைமலையடிகள், திருவாளர் கலியாணசுந்தர முதலியார், பண்டிதமணி கதிரேசன் செட்டியார், இளைசைகிழார் சோமசுந்தர பாரதியார், திருவாளர் ஆறுமுக முதலியார், டாக்டர் வரதராசனார், டாக்டர் சிதம்பரநாதன் செட்டியார், சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை முதலிய பல பெரும்புலவரிருந்தும், அவரைச் சற்றும் மதிக்காமல், தமிழுக்குத் தாமே அதிகாரிகள் என்று சொல்லிக்கொண்டு ஒரு தான்றோன்றிப் புலவர் கூட்டம் கிளம்பியுளது.

சிலர் தமிழெழுத்துக்களைக் கற்ற அளவிலேயே தமக்கு எழுத்தாளர் என்று பட்டஞ்சூட்டிக் கொண்டு, சில மாதகாலம் ஒரு சிறு செய்தித் தாளாசிரியரா யிருந்து, பின்பு சிறந்த தமிழதிகாரிகளாகி விடுகின்றனர்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்"

என்று ஔவையாரும்,

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்று வள்ளுவரும் கூறியவற்றில், எழுத்து என்பது ஆகு பெயராய் இலக்கியத்தைக் குறிக்கும். இலக்கிய நடையில் இலக்கணப் பிழையின்றி எழுதுபவர், எழுத்தாளர் (Men-of Letters) எனப் பெறுவர். ஆனால், மறுமலர்ச்சி யெழுத் தாளரோ, இலக்கணங் கற்காமலே நூலாசிரியராகி, வேண்டாத வடவெழுத்தும் வட சொல்லுங் கலந்தும், வழூஉச் சொற்புணர்த்தும் மரபைச் சிதைத்தும் ஒரு வாக்கியத்தை ஒரு சொல்லாற் குறிக்கும் தொலைவரி (தந்தி) நடை இடையிடை யமைய எழுவாய் பயனிலை யிசை வின்றிப் புணர்ச்சிப் பிழைபட வரைகின்றனர்.

சிலர் மோனையெதுகை யறிந்தவுடனும், சிலர் அகவல் யாப்பும் விருத்தயாப்புங் கற்றவுடனும், தம்மைப் பாவேந் தராக மதித்துக் கவிஞர் என அழைத்துக்கொண்டு, பெரும் புலவரையும் பொருட்படுத்தாமல், வாய்க்கு வந்த படி உரைப்பதும கைக்கு வந்தபடி வரைவதுமா யிருக் கின்றனர்.

சிலர் சுவைஞர் (ரசிகர்) என்னும் ஒரு புதுக் கூட்ட மாகச் சேர்ந்து தமிழிலக்கணத்திற்கு மாறாகச் சொற்களைப் புணர்ப்பதும், பண்டையிலக்கியத்தில் தமக்கு வேண்டாத செய்யுட்களை யெல்லாம் விலக்குவதும், தொழிலாகப் பூண்டுள்ளனர்.

சிலர் தமிழ்ச் சீர்திருத்தாளராகக் கிளர்ந்து, எழுத் தைச் சீர்திருத்துவாரும் நடையைச் சீர்திருத்துவாரும் இலக்கணத்தைச் சீர்திருத்துவாரும் இலக்கியத்தைச் சீர் திருத்து வாருமாய்ப் பல்வேறு குழுவினராய்ப் பிரிந்து, தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம தமிழைக் குலைத்து வருகின்றனர். இதை நோக்கும் போது,

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண் டியனில்லை குறும்பியளா
வாக்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லியில்லை யிரண்டொன்றாய்
முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை விளையாட்டாய்க்
கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகளுண்டு புலவரெனத்
தேசமெங்கும் திரிய லாமே"

என்னும் படிக்காசுப் புலவர் செய்யுளே நினைவிற்கு வருகின்றது.

ஒருவர் ஒருமொழியின் இலக்கண இலக்கியப் பயிற்சியின்றியே அதில் சிறப்பாக எழுதும் ஆற்றல்பெற முடியுமேனும், இது எல்லார்க்கும் இயல்வதன்றாகலின், முறைப்படி அப்பயிற்சியைப் பெறுவதே தக்கதாம். மேலும், ஒரு மொழியில் தேர்ச்சிபெற்றுத் தேறுதற்குரிய தேர்வொழுங்கு இருக்கும்போது, அதைப் பொருட்படுத்தாதது போற்றத் தக்கதன்று. ஆங்கிலத்தில் மட்டும் தேர்ச்சியைக் காட்டுதற்குத் தேர்வுகட்டாயமாய் வேண்டப்படும்போது, தமிழில் ஏன் அது புறக்கணிக்கப் படல வேண்டும்? ஒருவர் தாமாக எவ்வளவுதான் கற்றிருப்பினும், தேர்வுக்கல்வி வேறு; தேர்வு நோக்காத கல்விவேறு ஆதலால், ஆங்கிலத்திற்போன்றே தமிழிலும் தேர்ச்சிபெற விரும்புவார், அதற்குரிய தேர்வுகளைத் தேறல் வேண்டும் இல்லாவிட்டால் அவர்களைச் சிறப்பாக மதித்தலும் அவர்கட்கு அலுவலளித்தலும கூடாது.

தகுந்த இலக்கண விலக்கியப் பயிற்சி யிருந்தாலன்றித் திருந்திய கருத்துத் தோன்றாதாகலின், மறுமலர்ச்சி யாளரெல்லாம் அதைப் பெறும்வரை, அதைப் பெற்றவரின் வழியே நிற்றல் வேண்டும். பயிற்சிக்கும் தேர்விற்கும் விலகியோடிப் பல குறுக்குவழிகளில் எழுத்தாளரும் மொழி நடையதிகாரிகளுமாகப் பெயர்பெற விரும்புவது, தலைக்கடைக் கதவை யுடைத்தும் புறக்கடைவழியாய்க்

குதித்தும் ஒரு வீட்டிற்குள் திருட்டுத்தனமாய்ப் புகுவதையே ஒக்கும். அத்தகை மறுமலர்ச்சியெல்லாம் மறுவின் மலர்ச்சியே (வழுவின் விரிவே) ஆதலால், பல்லிலக்கியமும் தொல்லிலக்கணமும் பயின்று அதற்கேற்ப மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்க நெறிப்பட்ட இலக்கணவிலக்கியப் பயிற்சியில்லாத எழுத்தாளரெல்லாம் எழுத்தை ஆள்பவரே (Alphalet-men)யன்றி இலக்கியத்தை ஆள்பவரல்லர்.

## ii. பழிகரப்பங்கதம்

### குடியின் பெருமை

இவ்வுலகத்தில் மிகப் போற்றப் படவேண்டிய செயல்களுள் குடியும் ஒன்றாகும். ஒரு சிலர் இதன் பெருமையை உணர்வதில்லை. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத காற்று நீர் உணவு ஆகிய முப்பொருளையும் உட்கொள்ளுதல், முறையே, உயிர்ப்பு (மூச்சு விடுதல்) குடிப்பு உண்பு எனப்படும். குடிப்பு என்னும் வினைப்பெற்ற தொழிற்பெயர், குடி என முதனிலைத் தொழிற்பெயராகவும் நிற்கும். "நீரின்றமையா துலகம்." இயல்பான வெறுநீரே இத்துணைச் சிறப்புடையதாயின், சில அருஞ்சத்துக்களையுடைய மதுநீர் எத்துணைச் சிறப்புடையதா யிருத்தல் வேண்டும்! தண்ணீர் போன்றே கண்ணீரும் (கள் நீர்) உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத தென்பதை உணர்த்தற்கே, அதனை யுட்கொள்வதை வேறு சொல்லாற் குறியாது குடி யென்னும் சொல்லாலேயே குறித்தனர் மூதறிஞர். யூதரும் பிறமக்களும் மதுநீரைக் குடிநீராகவே பயன்படுத்தி வருகின்றனர். பண்டைத் தமிழ் மக்களும் ஊணினும் விருந்திலும் மதுவுண்டு மகிழ்ந்தமை, பழந் தமிழிலக்கியத்திற் பரக்கக் கூறப்பட்டுள்ளது.

மதுநீர் உணவாவதுடன், சில நோய்கட்குச் சிறந்த மருந்துமாகின்றது. இருமல் நோயாளிகட்கு முந்திரிச் சாராயத்தை அல்லது பட்டைச் சாராயத்தைக் கொடுப்பது வழக்கம். குழந்தைகட்குச் சிற்றளவாக அதைக்

கொடுத்து வந்தால், நெஞ்சு உரம்பெறும் என்பர் நாட்டு மருத்துவர். மதுவிலக்குள்ள இந்நாட்டிலும், மதுவானது மருந்தாக விற்கப் பெறுமாயின், அதன் அருமையைச் சொல்லவும் வேண்டுமோ?

இவ்வுலகத்தில் குடிகாரன்தான், தான் தேடியதை முற்றும் நுகரக் கொடுத்து வைத்தவன்,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது"

என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவர். ஒருவன் நெற்றியின் வேர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுத் தேடுவது எதற்கு? நுகரத்தானே? தான் தேடியதைத் தானும் நுகராது பிறரையும் நுகர்விக்காது போர்காத்த நாய்போற் போகின்றவன், கழிபெரு மூடனல்லனோ? வருந்தித் தேடியதை வருந்திக் காத்து வருந்தியிழப்பவன் எத்துணைக் கொடும்பாவியா யிருத்தல் வேண்டும்?

குடிகாரன் ஈகையாளியுமாகின்றான். குலமத வேறுபாடு நோக்காதும் கைம்மாறு கருதாதும் பெற்றதைப் பிறரொடு சேர்ந்துண்ணும் பெருந்தகைமை, குடியினால் உண்டாகின்றது. செல்வத்துப பயன் ஈதலன்றோ?

குடியினால் எவருக்கும் மறம் (வீரம்) பிறக்கின்றது. குடிகாரன் தான் விரும்பிய செயலை துணிந்து செய்து விடுகின்றான். இங்ஙனம் விரும்பியதைச் செய்யும் ஆற்றல் இயல்பாகத் தேவருக்குத்தான் உண்டு. மக்களுக்கு இன்றியமையாத குணங்களுள் மறமும் ஒன்றாகும். இது பொதுவாய்ப் பிறப்பில்தான் அமையும். கோழையராகப் பிறந்த மக்களையும் கடுங்கண் மறவராக்கும் ஆற்றல் கட்குடிக்கிருக்குமாயின், கள்ளின் ஆற்றல் கடவுளாற்றலன்றோ?

குடிகாரன் சிறந்த மறவனைப்போதும் தாழ்மையை மேற்கொள்வது, மிகமிகப் பாராட்டத் தக்கது. கல்வி செல்வம் அதிகாரம் முதலியவற்றில் எத்துணைப் பெரியவனாயினும், குடிகாரன் கண்ட விடத்திலெல்லாம் அமர்ந்து

கொள்கின்றான்; சில சமையங்களில், சிறந்த சித்தர்போலக் கள்ளிப் புதர்மேற்கூடக் கண்படை செய்கின்றான்; சிறுவர் குறும்பு செய்யினும் பகைவர் தீங்குபுரியினும், அவற்றைப் பொறுத்துக் கொள்கின்றான். இங்ஙனம் அவன் தாழ்மை, பொறுமை பொறைகளாகவும் முதிர்ந்து விடுகின்றது.

இத்தகைய நிலையில் அவன் சான்றோனாகி விடுகின்றான். அதனால், அவனுக்கு வாய்மை பிறந்து, உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் பகைவருக்கும் சொல்லி விடுகின்றான்.

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு"

என்பது பொய்யாமொழி யன்றோ?

குடியினால் விளையும் பல பயன்களுள் வேதனைவிலக்கும் ஒன்றாம். எவ்வகை உடல்வேதனையும் உளவேதனையும் குடிகாரனுக்கு எள்ளளவும் இல்லாது போகின்றது. அவன் இன்பமே துய்க்கும தேவர்நிலை யடைகின்றான். தன் கவலை குடும்பக்கவலை ஆகியவற்றுள் ஒன்றும் அவனைத் தாக்காது விடுகின்றது. சான்றோன் நிலைக்கடுத்தது தேவர் நிலைதானே?

"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால
மனக்கவலை மாற்ற லரிது"

என்று வள்ளுவர் கூறியது அறியாமை பற்றியதே. அவர் கள்ளுண்ணாமையின், அதன் பயனை அறிந்திலர்.

தேவர்நிலை யடைந்தவுடன் குடியனுக்குப் புலமை தானாக வந்து விடுகின்றது. தேவரைப் புலவர் என்னும் பிங்கலம். உழைப்பாலும் வறுமையாலும் கவலையாலும் மங்கி மழுங்கிக்கிடந்த மதியானது, குடியினால் தீட்டப் பெற்றுக் கூராகின்றது. நரம்பு முறுகவேறித் தசைநார் இறுகி மூளை வேகமாய் வேலை செய்யத் தொடங்குகின்றது. கடன்மடை திறந்தாற்போலக் கடும்பாவெள்ளம் பெருக்கெடுத் தோடுகின்றது. குடியினால் எழுந்துள்ள பாக்கள்

எத்தனை! பனுவல்கள் எத்தனை! இலக்கணம் எத்தனை! இலக்கியம் எத்தனை! மந்திரம் எத்தனை! மறைகள் எத்தனை! இங்ஙனம் இலக்கிய வளர்ச்சிக்கும் குடி காரணமாயிருப்பதை எவர் எண்ணுகின்றனர்?

இலக்கியத்தால் மட்டுமோ? வருவாயாலும் குடியானது ஒரு நாட்டை எவ்வளவு வளமபடுத்துகின்றது! குடியால்வரும் அரசிறை வருமானம் எத்தனை கோடி!

இவ்வாறு கள்ளானது பலவகையிலும் தனிப்பட்டவர்க்கும் நாட்டிற்கும் பெரும்பயன் விளைக்கும் பெற்றி நோக்கியே அதிகமானிறந்தவுடன், 'சிறப்புடைப் பொருளை முற்படக் கிளத்தல்' என்னும் உத்திபற்றி,

"சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே"
(புறம். 235)

என்று கையறை பாடினார் ஔவையாரும். குடியின் பெருமையை உணர்ந்தவரெல்லாம, ஒரு நாட்டிற் குடியிருந்தாற் குடியிருப்பர்; குடிபோனாற் குடிபோவர். கள்ளானது மககட்கு மட்டுமன்று, தேவருக்கும் விருப்பமானதென்று மறைகள் கூறும். 'செங்கண்ணன்' 'செந்தாமரைக் கண்ணன்' என்று தேவரையும அரசரையும், செவ்வரிபரந்த கண்ணார் என்று சிறந்த மகளிரையும், புகழ்ந்துகூறும் மரபு, அவர்க்குக் கட்குடியால் நேரும் கட்செம்மை நோக்கிப் போலும்!

இனி, குலத்தின் நலத்தை உயர்குடி பெருங்குடி முதுகுடி நன்குடி என்னும் சொறகளாற் குறிப்பதும, அவற்றின் இரட்டுறலாற்பெரும் பெருமை நோக்கிப் போலும்!

இத்துணைப் பெருமை வாய்ந்த குடியின் அருமையை உணராது, அமெரிக்கர் மதுவிலக்கினர். பின்பு, தம் தவற்றை யுணர்ந்து அதைத் தவிர்த்தனர்.

"ஊக்கமது கைவிடேல்" என்பது ஔவையார பொன்மொழி. அதைக் கடைப்பிடிகக.

## பயிற்சி

பின் வருபவற்றைப் பற்றி அங்கதக் கட்டுரை வரைக :—

1. சில கடன்காரர் செய்யும் கொடுமை. 2. கையூட்டு (லஞ்சம்) வாங்கல். 3. ஏழையைக் கவனியாமை. 4. செல்வச் செருக்கு.

## (9) புகழ்ச்சிக் கட்டுரை

### i. செம்பொருட் புகழ்ச்சி

### ஆங்கிலர் பண்பாடு

உயிரினத்தில் மாந்தன் உயர்ந்தவன். ஆயின், மாந்தவுடம்பு பெற்றமட்டில் ஒருவன் மாந்தனாகிவிடான். உடம்பில் திருந்தியது போன்றே உள்ளத்திலும் திருந்தியவன் தான், உண்மையான மாந்தனாவன். இவ்வுண்மை யறிந்தே, மாந்தரைப் பண்பாடுடைமையும் இன்மையும்பற்றி மக்களென்றும் மாக்களென்றும், இருவகையாய் வகுத்தனர் பண்டைத் தமிழிலக்கணியர்.

“உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனார் அவரல பிறவே,”

“மாவும் மாக்களும் ஐயறி வினவே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே,”

“மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே,”

என்று தொல்காப்பியரும்,

“விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்,”

“செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்,”

என்று திருவள்ளுவரும், கூறுதல் காண்க.

பண்டைக் காலத்தில் தமிழர் பண்பாடடைந்திருந்தனர். பின்பு, பிறநாட்டார் கலப்பால் அப்பண்பா

டொழிந்தது. இன்று பண்பா டடைந்துள்ளவர் மேனாட்டாரே. அவருள்ளும் சிறந்தவர் ஆங்கிலரே.

இங்கிலாந்தின் தனிநிலையும், அதன் இனிய தட்ப வெப்பநிலையும், அங்குள்ள அழகிய பைம்புல் வெளிகளும் ஆங்கில அறிஞரின் பயிற்றலும், ஆங்கில அரசியலமைப்பின் சீர்மையும், அதனால் ஏற்பட்டுள்ள பல பொதுநலச் சட்டங்களும், இலவசக் கட்டாயத் துவக்கக் கல்வியும், எல்லார்க்கும் வேலையும் ஊணும் கிடைத்தலும், ஆங்கில மக்கள் படிப்படியாகத் திருந்தி இற்றைப் பண்பாடடைந் திருப்பதற்குக் காரணமாயின. அவர் பண்பாட்டுக் குணங்களிற் பல மேனாட்டார்க்கெல்லாம் பொதுவேனும், ஆங்கிலரை இந்தியருடன் ஒப்பு நோக்கியதே இக்கட்டுரை யாதலின், அவற்றைப் பற்றிய கூற்றில் அதிவியன்மை (அதிவியாப்தி)க் குற்றந்தங்கா தென்க.

ஆங்கிலர் எக்காரியத்தையும் காலந்தவறாமற் செய்கின்றனர். குறித்த நேரத்திற்கும் குறித்த வேளைக்கும் குறித்த நாளுக்கும், அவர் கருத்துப்படி வேறுபாடுண்டு. நமக்கோ அவ்வேறுபாடில்லை. காலையிற் செய்யவேண்டியதை மாலையும், மாலையிற் செய்ய வேண்டியதை மறுநாட் காலையும், செய்கின்றோம். நேரந்தவறாமை வேளைதவறாமை நாள்தவறாமை முதலிய பல்வகைக் காலந்தவறாமையை, அவர் வாழ்க்கையில்தான் காணமுடியும். இங்கிலாந்திலுள்ள புகைவண்டி நிலையங்களில், வண்டி வருகிறதற்குச் சற்று முந்தி வழிப்போக்கர் கூடுவதும, வண்டி சென்ற பின் நிலையத்திலுள்ள வேலையாளரைத்தவிர வேறொருவரையுங் காண முடியாமையும், எத்துணை ஒழுங்கா யிருக்கின்றன !

ஆங்கிலர் ஒரு நிமையத்தையும் வீண் போக்குவதில்லை. ஒவ்வொரு வினைக்கும் ஒரு நேரத்தையும் ஒவ்வொரு நேரத்திற்கும் ஒரு வினையையும் திட்டஞ் செய்துகொண்டு அத்திட்டப்படியே தங் காரியங்களைச் செய்து வருகின்றனர். உறவினரோடு அளவளாவி உரையாடுவதைக்கூட, உண்பொழுதிலும் உலாப் பொழுதிலும் நிகழ்த்துகின்ற

னர். பயனில் சொல் பாராட்டுதல் என்பது அவருக்குத் தெரியவே தெரியாது. காலத்தின் அருமையைக் கண்டு வீண் பொழுதையும் மாண் பொழுதாக்கும் வினைத்திறம், அவரிடத்தில்தான் உண்டு.

ஆங்கிலர் ஓரிடத்திற்குச் செல்லுங்காலும் ஒரு கட்டிடத்திற்குள் நுழையுங்காலும், சிறியோர் பெரியோர் என்னும் வேறுபாடின்றி, முன்பின் வரவு முறைப்படி வரிசையாய் நிற்றலும் செல்லுதலும், எத்துணை அழகிய காட்சியாகும்! நாமோ, வண்டி புறப்பட ஒரு மணி நேரமிருந்தும், உள்ளிருந்து வெளியே வருபவரை வரவிடாமல் வழியடைத்து, போர்க்களத்திற் பொருபவரைப்போல, ஒருவரை யொருவர் நெருக்கிக் கொண்டும் தள்ளிக் கொண்டும், வாசல் வழியும் பலகணி வழியும் ஒரே கூண்டிற்குள் நாற்றுக் கணக்கினராய் நுழைவது, எத்துணை அலங்கோலமா யிருக்கின்றது!

நேர்மையென்பது ஆங்கிலரின் பிறவிக்குணம். குற்றவாளி யாராயிருப்பினும் குற்றத்திற்குத்தகத் தண்டிப்பதும், விண்ணப்பக்காரரின் தகுதியறிந்து வேலையளிப்பதும், கையூட்டு வாங்காது கடமையைச் செய்வதும், அவருக்கு இயல்பான காரியங்கள். 'பிரிட்டிஷ் நீதியும் பிரெஞ்சு வீதியும்' என்பது ஆங்கிலரின் நீதியைக் குறிக்கும் பழமொழியாகும். நம்நாட்டிலோ, வேண்டியவனுக்கே வேலை கொடுப்பதும், வேண்டியவன் தகுதிக்கேற்ப விதிகளமைப்பதும், வேண்டியவனை உள்ளத்தில் அமர்த்திவிட்டு வெளித்தோற்றத்திற்கு விளம்பரஞ் செய்வதும், வழக்கமாயிருக்கின்றன.

நேர்மை யுள்ளவர்க்கெல்லாம் வாய்மை தானே அமைந்துவிடும். உண்டிச் சாலைகளில் உண்டவர் தாமாய்க் காசு கொடுத்தாலன்றி அவரைக் கேளாமையும், ஆளில்லாத செய்தித்தாட் கடைகளில் தாள்வேண்டுவோர் தாளை யெடுத்துக்கொண்டு காசை வைத்துவிட்டுச் செல்லுதலும், கல்லூரித் தேர்வுக் கூடங்களில் வினாத்தாளைக் கொடுத்து விட்டு ஆசிரியர் சென்று விடுவதும், இங்கிலாந்திலன்றி

இந்தியாவில் நிகழமுடியுமோ? கோயில்களிலுள்ள காணிக்கைப் பெட்டிக்கும் பல அலிகார்ப் பூட்டுகளிட்டுப் பூட்டிவைப்பது, இந்தியரின் எத்தகைய இயல்பைக் காட்டுகின்றது?

ஆங்கிலர்க்கமைந்துள்ள இயற்கைக் குணங்களுள், அமர்ந்து வினை செயலும் ஒன்றாகும். நிலமும் நீரும் நிலை மாறினும், அண்டங்களெல்லாம் அடுக்குக் குலையினும், ஆங்கிலர் தாம் செய்யவேண்டுவதை அமைந்து எண்ணி ஆற அமரச் செய்கின்றனர். இந்தியரோ, இத்தகைய நிலையில், 'புலனைந்தும் பொறி கலங்கி'ப் பொன்றிவிடுவர்.

ஆங்கிலரின் வேறோர் அருங்குணம் நெறிமுறைமை. கடந்த உலகப்போரில் சர்ச்சிலைத் தலையமைச்சராக்கி, அது முடிந்ததும் அவரை விலக்கியது, ஆங்கிலர் ஆட்களையன்றிக் கோட்பாடுகளைப் பற்றுபவர் என்பதைப் புலப்படுத்தும்.

இங்கிலாந்தில், இலவசக் கட்டாயத் துவக்கக் கல்வி, பள்ளிச்சிறார்க் கிலவசவுண்டி, ஏழையரில்லம், வேலையின்மையை விலக்கல், முதுமைச் சம்பளம், இறப்புவரி, நூலக வாசகசாலைகளிற் பேசாமை முதலியனவெல்லாம், ஆங்கிலரின் பிறர்நலம் பேணுந்திறத்தைப் பெரிதும் விளக்கிக் காட்டும்.

ஆங்கிலருள் சிறப்பாக இலண்டன் மாநகரவூர்காவலர் உண்மை உழைப்பு உதவிசெய்தல் பொறுமை பொறை தாழ்மை சுறுசுறுப்பு முதலிய அருங்குணங்கட்கு, உலகப் புகழ் பெற்றவராவர்.

இத்தகைய உயர்ந்த பண்பாடுள்ள ஆங்கிலரின் நெருங்கிய தொடர்பு, நமக்கு மூன்று நூற்றாண்டுகளாக வாய்த்திருந்தும், பன்னாடைபோல, அவர்களின் உயர்குணங்களைப் பின்பற்றாது, காப்பி குடித்தலையும் காற்சட்டையணிதலையுமே மேற்கொண்டுள்ளோம். இது நமக்கு நாணுத் தருவதாகும். ஆதலால், இனிமேலாயினும், அவர்களின் உயரிய வொழுக்கத்தைப் பின்பற்றுவோமாக.

## ii. வஞ்சகப் புகழ்ச்சி

### காந்தியடிகளின் தேசியத்தொண்டு

இந்தியாவின் தேசியத் தந்தையாரென்றும், இந்திய மீட்பரென்றும், காந்தியடிகளை எல்லாரும் புகழ்வர். ஆனால், உலகில் தேசமீட்பர் அவர் ஒருவர் மட்டுமல்லர்; எத்துணையோ பலர் உண்டு.

காந்தியடிகளைப் புகழ்பவரெல்லாம், அவரது தேசியத் தொண்டையே நோக்குகின்றனர்; அதனால் பல வகுப்பார்க்கு விளைந்த கேட்டையும் வருத்தத்தையும் கவனிப்பதில்லை.

முதலாவது ஆங்கிலரை எடுத்துக் கொள்வோம். இந்தியத் தேசிய இயக்கத்தைச் சேர்ந்தவரெல்லாம கதராடை யணியும்படி காந்தியடிகள் செய்து விட்டதனால், இங்கிலாந்திற் சில நெசவுச்சாலைகள் மூடப்பட்டு, பல தொழிலாளிகள் வேலை யிழந்தனர். தேசிய வுணர்ச்சி காரணமாகப் பல இந்தியர் இந்தியச் செய்பொருட்களையே வாங்கத் தலைப்பட்டதனால், ஆங்கிலச் செய்பொருட்களின் இறக்குமதி குறைந்து, பல ஆங்கில வணிகரின் வருமானங் குன்றிவிட்டது. தேசிய இயக்கம் வலுக்க வலுக்க, இந்திய அரசியல் அலுவல்கள் படிபபடியாய் இந்தியர்க்கே கொடுக்கப்பட்டன. இறுதியில், இந்தியா முழுவிடுதலை யடைந்தவுடன், ஆங்கிலர்க்கு இந்திய அலுவறபேறு அடியோடு நின்றுவிட்டது. இதனால், எத்துணையோ ஆங்கிலர்க்கு அதிகாரமும் வருமானமும இல்லாதுபோயின. அவர்க்கு எத்துணை வருத்தம் உண்டாயிருக்கும்! இங்ஙனம் பொருளிழப்புமட்டுமா? உயிரிழப்பும் ஒரு சிலார்க்கு நேர்ந்ததே! இந்தியப்பேரரசை யிழந்தது இங்கிலாந்திற்கே ஒரு பெருந் துன்பமன்றோ?

இரண்டாவது இந்தியரையே எடுத்துக் கொள்வோம். தேசிய இயக்கத்திற் சேர்ந்ததினால், எத்தனைபேர் அடியுண்டு சிறையுண்டு இடர்ப்பட்டனர்! எத்தனைபேர் படிப்பிழந்தனர்! எத்தனைபேர் வேலை யிழந்தனர்! எத்தனைபேர்

உயிரிழந்தனர்! எத்தனைபேர் கணவனும் தந்தையும்போன்ற களைகண் (ஆதரவு) இழந்தனர்! இனி, அவ்வியக்கத்திற் சேராததினாலும் எத்தனைபேர் இத்தகைய துன்பங்களெல்லாம் உற்றனர்! எத்தனைபேர் அவமானப் படுத்தப் பட்டனர்!

மேலும், காந்தியடிகளாற் கொண்டு வரப்பட்ட மதுவிலக்கால், எத்தனை ஏழையெளியவர் மாலை வேளையிற் கள்ளுண்டு களித்துக் கவலையற்றிருக்கும் இன்பநிலையை இழந்தனர்! எத்தனை கட்கடைக் குத்தகையாளர் வருமானம் இழந்தனர்!

இனி, அரிசன வுயர்த்தம் என்று பெயரிட்டுத் தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றத்தைக் காந்தியடிகள் தோற்றுவித்ததனால், எத்தனை பூசாரியர்க்கு வருத்தம்! எத்தனை மேல் வகுப்பார்க்கு வருத்தம்! பல நூற்றாண்டுகளாகப் பிறருக்குக் கீழ்ப்படிந்து, அவரைத் தெய்வமாக வணங்கி, அவர் இட்ட வேலையெல்லாம் செய்து, அவருக்கு நல்ல பிள்ளைகளாய் நடந்துவந்த எத்துணையோ தாழ்த்தப் பட்டவர்க்கு இலவசக்கல்வியும் அரசியலலுவலுமளித்து, அவர் தோற்றத்தை மாற்றி நிலையையுயர்த்தி, இனிமேல் என்றும் பிறருக் கடங்காதபடி செய்துவிட்டனரே! இது எத்துணைக் குறும்பாகும்! முற்பிறப்பில் செய்த தீவினையின் பயனைத் தாழ்த்தப் பட்டவராகப் பிறந்து, பிறருக்குப் பிறவியடிமையாகவிருந்து தொண்டுசெய்யக் கடமைப் பட்டவர்கள், இன்று, நல்வினையாளர்க்குப் பணியாதிருப்பதோடு, அவரொடு நெருங்கி உறவாடுவதும், அவருக்குச் சரிசமமாக வீற்றிருப்பதும், இவையும் போதாவென்று அவருக்குமேல் அதிகாரஞ் செலுத்துவதும், எத்துணைக் கொடுமை! எல்லாவற்றையும் படைக்கும் முற்றறிஞனான இறைவன், தமக்குப் பிறப்பில் விதித்த நிலை போதுமென்று, சால்வுடன் (திருப்தியாய்) இருந்த தாழ்த்தப் பட்டோரை, உயர்த்தப் பட்டோருடன் என்றும் போட்டியிட்டுப் போராடும்படி செய்துவிட்ட காந்தியடிகள், இந்திய சமுதாயத்தையே சீர்குலைத்துச் சின்னப்படுத்திவிட்டனரே!

இங்ஙனம் நாட்டிற்குக் கேட்டை விளைத்தவர் தம் குடும்பத்திற்காவது ஏதேனும் ஆக்கம் தேடினரா? அதுவுமில்லை. வருமானமிக்க வழக்கறிஞர்தொழிலை விட்டு விட்டு, ஆண்டிபோற் கோலம் பூண்டு, பித்துக் கொண்டவர்போல் வாழ்நாளெல்லாம் தேசவிடுதலை தேசவிடுதலை என்று கூவி, சோம்பேறித்தனமாய்த் தேசமெங்குஞ் சுற்றித் திரிந்து, கையிற் கிடைத்ததை யெல்லாம் பிறருக்குச் செலவிட்டு விட்டு, தம்மக்களை உயர்ந்த பதவியில் வைக்காமலும், அவருக்கு ஒரு காசும் தேடாமலும், இறுதியில் தமமையும் பேணுமல், பலமுறை யெச்சரிக்கப் பட்டும் அவற்றைப் பொருட்படுத்தாது, பாதுகாப்பற்ற வெளி நிலததில் கல்லாரோடும் பொல்லாரோடும் பழகித் தாமே தம் முடிவைத் தேடிக்கொண்டார்.

இங்ஙனம் பொறுப்பற்ற தனமாய்த் தமக்கும் பிறர்க்கும் பலவகையில் அவமானத்தையும் துன்பத்தையும் அழிவையும் தேடிய காந்தியடிகளை, எங்ஙனம் நல்லவரென்று சொல்லுதல் கூடும்? அவர் செய்ததாகச் சொல்லப்படும் நன்மைகளுள், எதுவேனும் தீமையிலாததுண்டோ? இனி, பிறர் செய்தனவாகச் சொல்லப்படும் தீமைகளுள், எதுவேனும் நன்மையிலாததுண்டோ? இங்ஙனமிருப்பவும், காந்தியடிகளைமட்டும் ஏன் நல்லவரென 'விதந்து கூறல் வேண்டும்? என்றும் உள்ளதை உள்ளவாறு கூறல் வேண்டுமேயன்றி, ஒருவர் செய்த நன்மையை யொளித்தும், ஒருவர் செய்த தீமையை யொளித்தும், உண்மைக்கு மாறுகக் கூறுதல் தக்கதன்றும். ஆகவே, காந்தியடிகள் நல்லவரல்லர் என்பதே எமது முடிபாம்.

## பயிற்சி

பின் வருபவற்றைப் பற்றிப் புகழ்ச்சிக் கட்டுரை வரைக :—

1. பண்டைத்தமிழர் பண்பாடு. 2. திருவள்ளுவர். 3. இளங்கோவடிகள். 4. மறைமலையடிகள். 5. சுப்பிரமணிய பாரதியார். 6. பாரதிதாசன். 7. எருது. 8. நாய்.

## (10) நோட்டக் கட்டுரை

### கம்பர் இராமாயணம்

இலக்கணம் தோன்றிய காலத்திலிருந்தே இலக்கிய நோட்டம் (Literary Criticism) அல்லது இலக்கியத்தை ஆராயும் முறையும் இருந்துதான் வருகின்றது. அகத்தியம் தொல்காப்பியம் முதலிய முற்கால விலக்கணங்களில் அது மிகச் சுருக்கமாகவும், தண்டியலங்காரம் மாறனலங்காரம் இலக்கண விளக்கம் முத்துவீரியம் முதலிய பிற்கால விலக்கணங்களில் சற்று விரிவாகவும், கூறப்பட்டுள்ளது. ஆயினும், அதை ஓர் அழகிய தனிக்கலையாக வளர்த்தவர் தற்கால மேனாட்டறிஞரே.

"தன்கோள் கிறீஇப் பிறன்கோள் மறுப்ப(து)
எதிர்நூல் என்பர் ஒருசா ரோரே"

என்னும் இறையனாரப் பொருளுரை மேற்கோட் சூத்திரத்தால, ஒரு நூலின் குற்றங்களை எடுத்துக்கூறுவதே முற்கால இலக்கிய நோட்டமுறை என்பதும், அங்ஙனம் கூறும் நூல் எதிர் நூல் எனப்படும் என்பதும், அறியலாகும். ஒரு நூலின்கண் உள்ள குற்றங்களை மட்டுமன்றிக் குணங்களையும் நடுநிலையில் எடுத்துக் கூறுவதும்; அவ்விரு கூறுகளையும் அழகாக விளக்குவதும்; தற்கால இலக்கிய நோட்டமாகும். இம்முறைப்படி, கம்பரிராமாயணத்தை நோட்டஞ் செய்வாம்.

தமிழ்ச்செய்யுள்: யாப்புவகைப்படி, வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா என நால்வகையாகவும்; பொருள்வகைப்படி, பாட்டு உரை நூல் வாய்மொழி (மந்திரம்) பிசி (விடுகதை) அங்கதம் முதுசொல் (பழமொழி) என எழுவகையாகவும்; பனுவல் (பிரபந்த) வகைப்படி, அம்மை அழகு தொன்மை தோல் விருந்து இயைபு புலன் இழைபு என எண்வகையாகவும்; வகுக்கப்பெறும்.

பனுவல்வகைக் கெல்லாம் பொதுப்பெயர் வனப்பு என்பது. இன்று அதற்குப் பதிலாகக் காவியம் அல்லது காப்பியம் என்னும் தற்பவ வடசொல் வழங்கிவருகின்றது.

சிலர் காவியத்தைத் தொடர்நிலைச் செய்யுள் என்பர். இலக்கண நூலும் அறநூலும் கணியம் மருத்துவம் முதலிய கலைநூல்களும் தொடர்நிலைச் செய்யுளா யிருத்தலானும், தனிநிலைச் செய்யுளும் அடித்தொகையின் மிகுதியால் ஒரு காவியமாதல் கூடுமாதலானும், தொடர்நிலைச் செய்யுள் என்னும் பெயர் காவியத்திற்குப் பொருந்தாது. வனப்பு என்னும் சொற்கு அழகு என்னும் பொருளும் இருப்பினும், அப்பொருட்கு அணி அம் அழகு கவின் யாண என்னும் பிறசொற்களு மிருத்தலின், அப் பொதுப்பொருளில் அச்சிறப்புச் சொல்லை வழங்குதல் நன்றன்று.

ஒரு சிறந்த இலக்கியப் பனுவல், (1) இலக்கணம் வழாமை (2) இன்பமுறுத்தல், (3) திறம்பட மொழிதல், (4) உள்ளது கூறல், (5) ஒழுக்கம் விதித்தல், (6) உலகியல் காட்டல், (7) அறிவை வளர்த்தல், (8) நடுநிலை நோக்கு, (9) இயற்கை யெழிலில் ஈடுபடுத்தல், (10) விழுமியது விளம்பல், (11) அளவறிந்துரைத்தல், (12) தூய்மை பேணல் எனப் பன்னிர் இயல்புகளைக் கொண்டிருத்தல் வேண்டும்.

கம்ப ராமாயணத்தில் இலக்கணம் வழாமையைப் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. கம்பர் செய்யுட்கள், வினைத்திறம் முற்றி விருத்தப்பாநலம் பழுத்தவை; "விருத்த மெனும் ஒண்பாவிற் குயர்கம்பன்," என்னுங் கூற்றை முற்றும் மெய்ப்பிப்பவை; விருத்தயாப்பிற்கு விழுமிய எடுத்துக் காட்டானவை.

இன்பமுறுத்தல், சொல்லாலின்ப முறுத்தலும் பொருளாலின்ப முறுத்தலும் என இருவகை.

"குழலும் வீணையும் யாழுமென் றினையன குழைய
மழலை மென்மொழி கிளிகளிருந் தளிக்கின்ற மகளிர்
சுழலு நன்னெடுந் தடமணிச் சுவர்தொறுந் துவன்றும்
நிழலுந் தம்மையு மெய்ம்மையின் றறிவரு நிலைய"

(ஊர்தேடுபடலம், 6.)

என்பது சொல்லாலும்,

"மருமத்துத் தன்னை யூன்றும் மறக்கொடும் பாவந்தீர்க்கும்
உருமொத்த சிலையினானை ஒருப்படுத் துதவிநின்ற
கருமத்தின் விளைவை யெண்ணிக் களிப்பொடு காணவந்த
தருமத்தின் வதன மென்னப் பொலிந்தது தனிவெண் திங்கள்"
(தைலமாட்டு படலம், 50)

என்பது பொருளாலும், இன்பமுறுத்தும்.

"தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ"
(நாட்டுப்படலம், 4)

என்பது, இருவழியும் இன்பமுறுத்தும்.

திறம்பட மொழிதல் பலதிறப்படும்.

"பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்தம் முள்ள மீர்த்தலால்"
(மிதிலைக்காட்சிப் படலம், 37)

"ஊதைகள் சொரிவன உயிருறும் அமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கவிகள்" (நாட்டுப்படலம், 51)

என்னும் பகுதிகள் மிகுந்த சொல்லாற்ற லுடையவை.

"பஞ்சியொளிர் விஞ்சுகுளிரப் பல்லவம னுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்"
(சூர்ப்பநகைப் படலம், 31)

என்பதின் மெல்லோசை பெண்ணழகின்மென்மையையும்,

"ஆடு கொடிப்படை சாடி யறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனு மிப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்தவென் னுபக னுக்கிவர் நாமாளும்
காடு கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ" (குகப்படலம், 22)

என்பதின் வல்லோசை குகனின் போர்த்துடிக்கையும்,

"உற்றக லாமுன்
கற்ற குரங்கைப்
பற்றுமி னென்றான்
முற்றுமு னிந்தான்"

(இலங்கை யெரியூட்டுப் படலம், 48)

என்பதின் குறளடிச் சந்தம் இராவணனின் ஏவல் முடுக்கையும், உணர்த்துகின்றன.

ஒரு காட்சிப்பொருளை வரணித்தலினும், கருத்துப் பொருளை வரணித்தலே திறப்பாடாம்.

இராவணன் தனக்கு முன்நின்ற உருவெளித் தோற்றத்தைச் சுட்டி,

"மைந்நின்ற வாட்கண் மயில்நின்றென வந்தென் முன்னர்
இந்நின்றவ ளாங்கொ லியம்பிய சீதை"

என்று தன் தங்கையாகிய சூர்ப்பநகையைக் கேட்டதும், அவள் அதற்கு,

"செந்தாமரைக் கண்ணொடுஞ் செங்கனி வாயி னோடும்
சந்தார்தடந் தோளொடுந் தாழ்தடக் கைக ளோடும்
அந்தாரக லத்தொடு மஞ்சனக் குன்ற மென்ன
வந்தானிவ னாகுமவ் வல்வில்லி ராம னென்றாள்"

(மாரீசன் வதைப்படலம், 148, 149)

என்று விடையிறுத்ததும், அவ்விருவரும் முறையே சீதை மீதும் இராமன்மீதும்கொண்ட கரைகடந்த பெருந்திணைக் காதலை, கண்ணாடிபோல் எத்துணை விளக்கமாகக் காட்டுகின்றன!

சூர்ப்பநகை இலக்குமணனால் மூக்கறுபட்டு வந்தவுடன், இராவணன் தனக்கு நேர்ந்த பழியை நோக்கி வருந்திய வருத்தத்தை, அவன் நெஞ்சொடு கூறலாகக் கம்பர் பாடிய,

"புத்துற வுறப்பழி புகுந்ததென நாணித்
தத்துறுவ தென்னை மனனே தளரல் அம்மா

எத்துய ருனக்குள தினிப்பழி சுமக்க
பத்துள தலைப்பகுதி தோள்கள்பல வன்றே"
(மாரீசன் வதைப்படலம், 61)

என்னுஞ் செய்யுள், எத்துணை நுட்பமாக எடுத்துக் காட்டுகின்றது!

" மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்"
(வேள்விப்படலம், 41)

என; தம்பியாகிய இலக்குமணன் ஒரேயிடத்து நின்றும், தமையனாகிய இராமன் சுற்றிச்சுற்றி வந்து அடிக்கடி அவனைத் தட்டி விழிப்பூட்டியும், விசுவாமித்திரனது வேள்வியைப் போற்றிக் காத்தநிலைக்கு; சிறிய கீழிமை இமையாது நின்றும், பெரிய மேலிமை அடிக்கடி யிமைத்து அதனோடு பொருந்தியும், கண்ணைப் போற்றிக் காக்கின்ற நிலையை உவமை கூறியதும்;

" சொல்லு மத்தனை யளவையின் மணிமுடி துறந்தான்
எல்லி மத்தெழு மதியமும் ஞாயிறும் இழந்த
அல்லும் ஒத்தனன் பகலும் ஒத்தனன்"

என; முதல்நாள் இராமவிராவணப் போரில், இராமன் ஏவிய அம்பால் தாக்குண்டு மகுடங்களை யிழந்து நின்ற இராவணனுடைய விளக்கமற்ற பூதவுடலுக்குத் திங்களில்லா இரவையும், அழிந்துபோன புகழுடலுக்கு ஞாயிறில்லாப் பகலையும் உவமித்ததும்; கம்பரின் உவமைத் திறத்தைக் கவினுறக் காட்டும்.

" நினைந்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி அறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்"

என்னும் இடத்தில், 'அறிவன்' என்னும் சொல்லால் விசுவாமித்திரன் எல்லாவற்றையும் நுண்ணிதாய் அறிந்தான் என்பதையும்;

" அல்லையாண் டமைந்த மேனி யழகனும் அவளும் துஞ்ச"
(குகப்படலம், 42)

என்னும் குகன் கூற்றில், 'அவளும்' என்னும் அடை பெறாச் சொல்லால் குகனது பிறன்மனை நோக்காத பேராண்மையையும்; கம்பர் குறிப்பாய்ப் பெறவைத்தமை, நல்லிசைப் புலவர் செய்யுட்கே யியல்பான நோக்கு என்னும் உறுப்பாகும்.

"இந்திரன் சசியைப் பெற்றான் இருமூன்று வதனத் தோன்தன்
தந்தையு முமையைப் பெற்றான் தாமரைச் செங்க ணானும்
செந்திரு மகளைப் பெற்றான் சீதையைப் பெற்றாய் நீயும்
அந்தரம் பார்க்கின் நன்மை யவர்க்கில்லை யுனக்கே யையா!"

"பாகத்தி லொருவன் வைத்தான் பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தி லொருவன் வைத்தான் அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தின் மின்னை முன்னே வென்றநுண் ணிடையை நீயும்
மாகத்தோள் வீர பெற்றால் எங்ஙனம் வைத்து வாழ்தி?"
(மாரீசன் வதைப்படலம், 75, 76)

என்னும் செய்யுட்களால், இராவணன் சீதையைப் பெறுவது ஓர் ஒப்புயர்வற்ற பேறாகும் என்று சூர்ப்பநகை இராவணனுக்கு உணர்த்துவதாகக் கூறி; அதே சமயத்தில், அச்சீதையால் அவனுக்குத் தீமையேயன்றி நன்மையில்லை யென்றும், அவளை வைதது ஒருபோதும் அவன் வாழ முடியாதென்றும், தன்னையறியாமலே விதியா லேவுண்டு அவனுக்குக் கூறியதாக நாம் கொள்ளுமாறு மேற்காட்டிய செய்யுட்களின் ஈற்றடிகளை யிரட்டுறலாக அமைத்துள்ளார் கம்பர்.

சில செய்யுட்கள் எளியன போல் தோன்றினும், ஊன்றி நோக்கின், மிக ஆழமுடையனவாக விருக்கும். இதனாலேயே, கம்பராமாயணச் செய்யுட்களைக் கம்ப சூத்திரம என்பர் முதுபெரும புலவர். இவ்வியல்பிற்கு,

" வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
ஒண்மை யில்லைபல் கேள்வி யோங்கலால் "

என்னும் நாட்டுப் படலச் செய்யுளை (53) எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

ஒரு பொருளை ஓரிடத்திற் பொதிந்து வைத்துப் பின்பு நெடுநாட்சென்று அதனை மீள அவிழ்த்தாற்போல, கம்பர் ஓரிடத்தில் ஒரு செய்தியைக்கூறி வைத்துப் பின்பு பலகாண்டந்தாண்டி அதை விடுவித்துரைப்பது இயல்பு.

" மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்ன நீண்ட
எயிலுடை யிலங்கைநாதன் இதயமாஞ் சிறையில் வைத்தான்"
(மாரீசன் வதைப்படலம், 85)

என்று ஆரணிய காண்டத்திற் கூறியதை,

" கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை
மனச்சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து
தடவியதோ வொருவன் வாளி"

என்று யுத்தகாண்டத்தில் மண்டோதரி கூற்றாக எடுத்து முடித்தல் காண்க.

அறந்தப்பியர் அழிவர் என்பதே கம்பர் வனப்பின் அடிப்படைக் கொள்கையாதலின், அறந்தவறுமையை இயன்ற விடமெல்லாம அவர் வற்புறுத்திச் செல்வர். இது அணிநூலார் கூறும் பாவிகம் என்னும் வனப்பியற் பண்பாகும்.

உள்ளதுகூறல் என்னுங்கூறு, கம்பரிராமாயணத்தில் மிகத்தாழ்ந்துள்ளது. இராமாயணக் கதைக்கு மூலமான தசரத சாதகக் கதை கட்டுக்கதை யென்றும், வான்மீகி யிராமாயணக்கதை அதைத் திரித்து விரிவுபடுத்திய புனை கதையென்றும், கம்ப ரிராமாயணக்கதை அதையுஞ் சில விடத்து மாற்றிய நாடக வனப்புக்கதை யென்றும, ஆராய்ச்சியாளர் கூறுதலால், கதைப் போக்கிலுள்ள நிகழ்ச்சிகளைப்பற்றி யாம் குற்றங் கூறமுடியாது. ஆயின்

"வையம்யா ணண்டவாண் டுங்கள் மாட்சியால்
அய்யமி லறுபதி னாயி ரம்மரோ"

(மந்திரப்படலம், 14)

என்று தசரதன், அறுபதினாயிர மாண்டு ஆண்டதாகவும்;

"அறுபதி னாயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திடையிடை தண்டிற் றூங்கினர்"

(கார்முகப்படலம், 3)

என்று, சனகன் வில்லை அறுபதினாயிரவர் தூக்கிச் சென்றதாகவும்,

"ஆண்டா யிடைதீ யவனு யிழையைத்
தீண்டாமெனு மேலுரை சிந்தை செயாத்
தூண்டா னெனலா முயர்தோள் வலியாற்
கீண்டா னிலம்யோ சனைகீ ழொடுமேல்"

(சடாயுவுயிர்நீத்த படலம், 74.)

என்று, இராவணன் சீதையை மூன்றுகல் தொலைவுள்ள நிலத்தொடு பெயர்த்துத் தன் தேரில் வைத்துக்கொண்டு சென்றதாகவும்; கம்பர் கூறியுள்ளது உண்மைக்கும் உத்திக்கும் பொருந்துவதன்று. பரமார்த்தகுரு மாணவர் ஊசியைப் பனைமரத்திற் செருகித் தூக்கியதுபோலவும், திருவிழாவில் தெய்வச் சிற்றுருவைக் கனத்த சப்பரத்திலிட்டுப் பற்பலர் தூக்குவதுபோலவும், சனகன் வில்லை நீண்ட தண்டகப்படைகள் மேலிட்டு நூற்றுக்கணக்கானவர் தூக்கியதாகக் கொள்ளலாம். ஆயினும், அறுபதினாயிரவர் தூக்கியதாகக் கொள்ளமுடியாது. இனி, அற்றபதினாயிரர் (இரண்டாக அல்லது பாதியாகப்பகுத்த பதினாயிரர்) என்று பொருள்கொண்டு, ஐயாயிரவர் தூக்கியதாகக் கூறினும், அதுவும் உண்மையாகாது. அறுபதினாயிரத்தை அற்ற பதினாயிரம் என்று இங்குக் கொள்ளின், தசரதன் ஆண்ட காலத்தைக் கூறியவிடத்தும் அங்ஙனம் கொள்ளல் வேண்டும் அங்ஙனம் ஒருவரும் கொண்டிலர். அறுபதினாயிரவர் தூக்கிய வில்லை இராமன் எளிதாய்த் தூக்கி முடித்தானாயின், அறுபதினாயிரம் ஆள்வலி அவனுக்கிருந்

திருத்தல்வேண்டும். அது இருந்திருப்பின், வாலி வலியும் இராவண வலியும் அதினும் மிக்கிருந்திருத்தல்வேண்டும்.

இராவணன் மூன்றுகல் தொலைவுள்ள நிலத்தைப் பெயர்த்துத் தன் தேரில் வைத்தானாயின், அத்தேர் எத்துணைப் பெரிதாய் இருந்திருத்தலவேண்டும்! அதன் அடித்தளம் குறைந்தது மூன்று சதுரக்கற் பரப்பினதாய் இருந்திருத்தல்வேண்டுமே! அஃதாயின் அதன் கும்பம் பனிமலைக்கும் மேற்பட்டிருத்தல் வேண்டும். இராவணன் சீதையை மூன்றுகல் தொலைவுள்ள நிலப்பரப்பொடு இலங்கைக்கெடுத்துச் சென்று, அசோகவனத்தில் வைத்ததினால் அதனால், அங்கும், இலக்குமணன் அமைத்த இலைக் குடிலிலேயே சீதையிருந்தாள். என்பதை,

"வேலையு ளிலங்கை யென்னும் விரிநக ரொருசார் விண்டோய்
காலையு மாலை தானு மில்லதோர் கனகக் கற்பச்
சோலையங் கதனின் நம்பி புல்லினாற் றொடுத்த தூய
சாலையி னிருந்தாள் ஐய தவஞ்செய்த தவமாந் தையல்"

(திருவடிதொழுத படலம், 64.)

என்று அனுமன் கூற்றாகக் கூறுகின்றனர் கம்பர்.

இனி, கழுகு (சடாயு) குரங்கு முதலிய அஃறிணை யுயிர்கள் பேசியதாகவும், மக்களுக்கு இனமுறைப்பட்டிருந்ததாகவும், கம்பர் கூறுவதும உண்மையொடுபடாது. அங்ஙனமாயின், சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலியவற்றுள்ளும் நடவாத்தகாத பல செய்திகள் கூறப்பட்டுள்ளனவே! அவற்றைப்பற்றி என் சொல்வதெனின்; அவையுங் குற்றமாகக் கொள்ளத்தக்கனவே. ஆயினும், சிந்தாமணிக்கதை கட்டுக்கதையாதலின் அதனைப்பற்றி ஆராய்ச்சியில்லை. சிலப்பதிகார மணிமேகலைகளுள் கூறப்பட்டுள்ள இயற்கைக்குமாறானவும் இறும்பூதுமான செய்திகள் மதவியற்பட்டனவாதலின், அவையும் ஈண்டெடுத்துக் கொண்ட பொதுமுறை இலக்கிய நோட்டத்திற்குரியன வல்ல. மதவியற் செய்திகளெல்லாம் முற்றும் நம்பிக்கையைப் பொறுத்தனவாதலின், ஏரணமுறைப்பட்ட இலக்கிய நோட்டத்திறகிடந்தரா என்க.

ஆற்றாயின், சீதை திருமகளின் தோற்றரவென்று கம்பர் நம்பியதால், அவளை இராவணன் தொட்டுத் தூக்கிக்கொண்டு செல்லாமல் நிலத்தொடு பெயர்த்துக்கொண்டு சென்றான் என்பதும், மதத்தின்பாற்பட்டதுதானே யெனின்; அது மதத்தின்பாற் பட்டதாயினும், இராவணன் சீதையை நிலத்தொடு பெயர்த்துக்கொண்டு சென்றான் எனக் கூறாது, அவள் திடுமெனத் திருவுருக் கரந்தாளென்றோ, அவளால் அவன் சாவிக்கப்பட்டான் என்றோ கூறியிருக்கலாமே! இதுவன்றோ உத்திக்கும் தமிழ் மரபிற்கும் பொருந்துவதாகும்? எங்ஙனமாயினும் இராவணன் சீதையை இராமனிடத்தினின்றும் பிரித்து இலங்கைக்குக் கொண்டுசென்றமட்டில், அவளது ஆற்றலின்மையல்லவா பெறப்படுகின்றது என்க.

இனி, எச்செய்தியையும் உயர்வு நவிற்சியாகக் கூறுதற்கு இலக்கணம் இடந்தருமேயெனின்: தரும்; ஆயின், அதை மெய்யென்று காட்டற்கு இடந்தராதென்க. கம்பரின் இராமப்பற்று அவர் வனப்பு நெடுகலும் கரைபுரண்டோடும்போது, அவர் கூறிய பொருந்தாச் செய்திகளை உயர்வுநவிற்சியென்று ஆராய்ச்சியில்லார் கொள்வதெங்ஙனம் இயலும்?

ஒழுக்கம் விதித்தல் கம்பராமாயணத்தில் உயர்ந்தபடியாகவுள்ளது. குரவர்ப் பணிதல், அறவோர்ப் பேணல், துறவோர்க் குதவல், இரப்போர்க்கீதல், விருந்தோம்பல், உடன்பிறப்பன்பு, ஒருமனை மணம், பிறனில் விழையாமை, ஆடவர் கற்பு, நன்றி மறவாமை, குலவேறுபாடு கொள்ளாமை, படையிழந்தவனொடு பொராமை முதலிய பல அறங்கள், நேர்வழியாகவும் நேரல்வழியாகவும் விதிக்கப்பெறுகின்றன. 'அறம் வெல்லும் மறம் தோற்கும்' என்பதை உணர்த்துவதே கம்பர் குறிக்கோள். இதன் வாயிலாக, மால்நெறி (வைணவ)ச் சார்பான கடவுட்பற்றை யூட்டுவதும் அவர் நோக்கம்.

கம்பர் சிறந்த அறிஞரேயாயினும், இராமன் அனுமனுக்குச் சீதையின் உடற்கூற்றை வரணித்ததைக்கூறும்

பகுதியில், பல கூற்றுக்களைப் பயனற்ற முறையிலும் இடக்கராகவும் கூறியிருப்பது, பழங்காலப் பேதைமைத் தொடர்ச்சியென்றே கொள்ளவேண்டியிருக்கின்றது. ஆயினும், அது அவர் புலமைக்கிழுக்கே.

உலகியல் காட்டல் கம்பரிராமாயணத்திற்கு ஒரு சிறப்பியல்பென்று கூறலாம். உயர்ந்தோர் ஒழுகக்கடைப்பிடிக்கும் உதவவேண்டிய கடமை, காதலியல்பு, இல்லற வாழ்வு, வாழ்க்கைப் போராட்டம், பொறாமைக்காரர் சூழ்ச்சி, இன்ப துன்பத் துய்ப்பு, பகைவரும் அவரை வெல்லும் வகையும், நட்புக்கோடல், சுற்றந்தழால், உலகப் போக்கு முதலிய பற்பல செய்திகளைப்பற்றிக் கம்பர் கூறி, படிப்போர்க்கு உலகியலறிவூட்டுகின்றார்.

ஆயினும், பிற துறைகளில் அவர் அங்ஙனம் செய்வதில்லை. சிலப்பதிகாரம் சிந்தாமணி முதலிய வனப்புக்களிலுள்ள கலை வரணனைகளைக் கம்பரிராமாயணத்திற் காணமுடியாது; வரலாற்றுச் சான்றுகளையுங் காண்பதற்கில்லை. எங்கெங்கு நோக்கினும், உலகியல் ஒன்றே அவர் வனப்பிற் காணக்கிடைக்கும். இது ஒரு பெருங்குறையே.

நடுநிலை நோக்கும் கம்பர்க்கில்லையென்றே கூற வேண்டும். இராமன் மறைந்து நின்று அம்பெய்து வாலியைக் கொன்றது ஆண்மையென்று, நடுநிலையாளர் ஒருவரும் ஒப்புக்கொள்ளார். அதன் சரிமையைக் காட்ட இராமன் கூற்றாகக் கம்பர் கூறுவது, சற்றும் பொருந்தாது. இராமன் இறைவனின் தோற்றரவாயினும், மாந்தவுடம்பிலிருந்ததனால், மாந்தத்தன்மைக் கேற்ப, மறைந்துநின்று வாலியை வலக்காரமாய்க் கொன்றார் என்று சிலர் கொள்வர். அது தவறு. பிறர்க்கு வழி காட்டவேண்டிய உயர்ந்தோரே ஒழுக்கந்தவறின், தாழ்ந்தோரைப்பற்றி என் சொல்வது? இயல்பான மக்களே சிறந்த பண்பாடுடையரா யிருக்கும்போது, இறைவன் தோற்றரவாயுள்ளவர் எத்துணைப் பண்பாடு சிறந்தவரா யிருத்தல்வேண்டும்? 'ஆபத்திற்குப் பாவமில்லை' யென்று கொண்டு எவ்வழி

யிலும் காரியத்தை நிறைவேற்றிக் கொள்வது ஆரிய வழக்கு. அது தமிழ் மரபிற்கு முற்றும் முரணானது.

இராமன் இலக்குமணனைக் கொண்டு சூர்ப்பநகையின் மூக்கறுவித்ததையும், கம்பர் முற்றும் ஒப்புக் கொள்கின்றார். கடுந்தண்டமாயின் அவளைக் கொன்றிருத்தல் வேண்டும்; எளியதண்டமாயின் அவளது கூந்தலையே அறுத்திருக்கவேண்டும்.

இராவணனை இறப்பப் பழித்தலும் கம்பரது நடுத்திறம்பலைக் காட்டும். மக்கள் தோன்றிய காலத்திலிருந்து பிறன்மனை கவர்ந்தவர் ஒருவரிருவரல்லர்; எண்ணிறந்தோராவர். பாரிசு (Paris) என்ற இளவரசன், மனிலேயசு (Manilaus) என்னும் அரசன் மனைவியாகிய எலனை (Helen)த் தூக்கிச் சென்றான் என்பது கிரேக்க நாட்டுக் கதை. பல நாட்டு மன்னர் தம் மாற்றரசரைக் கொன்று அவர் மனைவியரை மணந்திருக்கின்றனர். பண்டைத்தமிழ் அரசர் சிலர், பகையரசரைக் கொன்றபின் அவர் தேவியரை மணப்பதுஞ் செய்யாமல் வேளம் என்னும் சிறையகத்திலிட்டு வைத்தனர். தாவீது என்னும் யூதவரசன், உரியா என்பவனைக் போர்க்களத்திற் கொல்வித்து, அவன் மனைவியைக் கவர்ந்து கொண்டான். ஆங்கிலக் கடற்படைத் தலைவரான நெல்சன் பிரபு, பிறன் மனையாரான (Hamilton)ஆமில்ட்டன் அம்மையாரை இறுதிவரைமனைவியாய்க்கொண்டிருந்தார். இக்காலத்திலும் பிறன்மனைவியைத் தீர்வை (Divorce) முறையிற் பிரித்து மணந்து கொள்வது அரசர்க்கும் வழக்கமாயிருக்கின்றது. பொது மக்களிடத்திலோ, இது பெரு வழக்கு. உயர்ந்தோர் செய்தி மதியத்தின் மறுப்போல் வரலாற்று வாயிலாய்த் தெரிகின்றது. பொதுமக்கள் செய்தியோ அவர் காலத்திலேயே மறைந்து போகின்றது. இராவணன் சீதையின் பேரழகில் இறப்ப ஈடுபட்டு அவளைச் சிறைசெய்து கொண்டுபோய் வைத்திருந்தனனாயினும், அவள விருப்பின்றி அவளைத்தொடுதல் கூடாதென்னும் கோட்பாடுடையனாயிருந்தமையே, அவன் குணச்சிறப்பைக் காட்டும். ஆயினும், அவன்

குற்றவாளியல்லாமலில்லை. உலகத்தில் அவன் ஒருவனே பிறன்மனை கவர்ந்த பேயன் என்னுங் கருத்துப்பட, அவனை இறப்பப் பழிப்பது அத்துணை நன்றன்று என்பதே யாம் குறிக்க விரும்பிய செய்தி. பண்டைக் காலத்திற் பெண்களை நுகர்பொருளாகவும் செல்வமாகவுமே கருதி வந்தனர். மண் பெண் பொன் என மூவகையாகச் செல்வத்தை வகுப்பது மரபு. ஒரு சிறந்த நாட்டை அல்லது பொருளை ஓர் அரசனிடத்திருந்து மற்றோரரசன் கவர்வது எங்ஙனம இயல்போ, அங்ஙனமே ஓர் அழகிய பெண்ணையும் கவர்வது இயல்பாம். இதை யுணரும்போது, இராவணன் கறை கம்பர்காட்டும் அளவினுஞ் மிகக் குறைந்தே காண்கின்றது.

விபீடணனை இறப்ப வுயர்த்தியும் கும்பகருணனை இறப்பத் தாழ்த்தியும் கூறுவதும், நடுநிலையானதாகத் தோன்றவில்லை.

“ கருத்துற நோக்கிப் போந்த காலமு நன்று காதல்
அருத்தியு மரசின் மேற்றே யறிவினுக் களவை யில்லை
பெருத்துயர் தவத்தினானும் பிழைப்பில னென்னும் பெற்றி
திருத்திய தாகு மன்றே நம்வயிற் சேர்ந்த செய்கை ”
(விபீடண னடைக்கலப் படலம், 107)

என்னுஞ் செய்யுளால், கம்பரே, விபீடணன் இலங்கை யரசை வேட்டதாகக் குறிப்பிடுகின்றார். அவ்வேட்கைப் படி, ‘கொள்ளார் தேஎங் குறித்த கொற்ற’மாக, அவனுக்கு முடிகலமும் இராமனால் முன்னரே சூட்டப் பெறுகின்றது. இதனாலேயே, காட்டிக் கொடுப்பவரை விபீடணாழ்வாரென்று அவைணவர் குறிக்கின்றனர். விபீடணன் நல்லோன் என்றும் கும்பகருணன் தீயோன் என்றும் கம்பர் கூறினும்,

“ கருத்திலா விறைவன் தீமை கருதினா லதனைக் காத்துத்
திருத்தலா மாகி னன்றே திருத்துதல் தீரா தாயின்
பொருத்துறு பொருளுண் டாமோ பொருதொழிற் குரிய ராகி
ஒருத்தரின் முன்னஞ் சாதல் உண்டவர்க் குரிய தம்மா ”

'தும்பியந் தொடையல் வீரன் சுடுகணை துரப்பச் சுற்றம்
வெம்புவெஞ் சேனை யோடும் வேறுள கிளைஞ ரோடும்
உம்பரும் பிறரும் போற்ற ஒருவன் மூவுலகை யாண்டு
தம்பிய ரின்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண்மேல்''

" செம்பிட்டுச் செய்த விஞ்சித் திருநகர்ச் செல்வந் தேறி
வம்பிட்ட தெரிய லெம்மு னுயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னங் கொண்ட புண்ணுடை நெஞ்சோ டைய
கும்பிட்டு வாழ்கி லேன்யான் கூற்றையு மாடல் கொண்டேன்.
(கும்பகருணன் வதைப்படலம், 156, 157, 159)

என்னும் செய்யுட்களால், விபீடணன் நன்றி கொன்றவன் என்பதைத் தம்மையறியாமலே குறிப்பாய்த் தோன்றச் செய்கின்றனர். இங்ஙனம் அவர் மனம் இருவேறு கருத்திடை யூசலாடி யிடர்ப்படுவதற்குக் காரணம், அவர் இராமாயணக் கதையையும் இராமன் திருமாலின் தோற்றரவென்பதையும் முற்றும் நயப்பதே. வால்மீகி தம் வனப்பில் ஒரோ விடத்துக்கூறிய இராமத் தோற்றரவுக் கருத்தை, கம்பர் தம் வனப்பில் நெடுகலும் கூறியுள்ளார். மட்டிறந்த மதப் பற்றுடையாரெல்லாம பகுத்தறி விழந்து நடுநிலை திறம்புவதை நோக்கும்போது, 'மக்கள் முன்னேற்றத்திற்கு மதம் முட்டுக்கட்டை' என்று நம்பா மதத்தார் கூறுவதும், பொருளுள்ளதென்றே தோன்றுகின்றது.

இனி, "காவிரி நாடன்ன கழனி நாடொரீஇ" என நாட்டுப் பற்றும், "என்றுமுள தென்றமிழ்" என மொழிப் பற்றும், கம்பர் காட்டியிருப்பது குற்றமாகக் கொள்ளத் தக்கதன்றாம். அவர் இளங்கோவடிகள் போல முற்றத் துறந்த முழு முனிவரல்லர் என்பது மட்டுமன்று; காவிரி நாடும் தமிழும உண்மையில் சித்தரும் புகழக்கூடிய சிறப்பு வாய்ந்தனவாம்.

கம்பர் வனப்பு இயற்கை யெழிலில் ஈடுபடுத்தும் திறத்தைக் காட்டற்கு,

" பம்புதேன் மிஞிறு தும்பி பரந்திசை பாடி யாட
உம்பர்வா னகத்து நின்ற வொளிவளர் தருவி னோங்கும்

கொம்புகள் பணைக்கை நீட்டிக் குழையொடு மொடித்துக் கோட்டுத்
தும்பிகள் உயிரே யன்ன துணைமடப் பிடிக்கு நல்கும் "
(வரைக்காட்சிப் படலம், 32)

என்னும் செய்யுளே போதுவதாகும்.

" அரனதிக னுலகளந்த வரியதிக னென்றுரைக்கு மறிவி லோர்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோல் "
(நாடவிட்ட படலம், 24)

" தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை யொத்தார் "
(உலாவியற் படலம், 19)

என்னும், பகுதிகள் விழுமியது விளம்புவன. இவற்றுள், 'தோள்கண்டார்' என்னும் ஒரு செய்யுளே, கம்பர் வனப்பின் குறையை யெல்லாம் மறைக்கத்தக்க அருமை வாய்ந்ததாகும். இது பட்டைதீர்ந்த முழுவயிரம் போல் ஒளிரும் குற்றமற்ற விருத்தச் செய்யுள்.

" குமுத னிட்ட குலவரைக் கூத்தரில்
திமித மிட்டுத் திரியுந் திரைகடல்
துமித மூர்புக வானவர் துள்ளினர்
அமுத மின்னு மெழுமெனு மாசையால் "
(சேதுபந்தனப் படலம், 42)

என்பது போன்ற வரையில் உயர்வு நவிற்சிகளும்; சுந்தர காண்டத்தில், கிங்கரர் வதைப்படலம், சம்புமாலிவதைப் படலம், பஞ்சசேனுபதிகள் வதைப்படலம், அட்சகுமாரன் வதைப்படலம், இலங்கை யெரியூட்டுப் படலம் முதலியவற்றால், இராமவிராவணப் போருக்கே இனித் தேவையில்லை யென்று படிப்போர் கருதும்படி, அனுமானின் மறச்செயல்களை மிகைப்படுத்திக் கூறியிருப்பதும்; அளவறிந்துரைத்தலாகா.

இனி, கம்பரிராமாயணத்தின் ஆறு காண்டங்களுள் ஒன்றான யுத்தகாண்டம், அவ்வனப்பின் 10459 செய்யுட்

களுள் 4358-ஐக் கொண்டிருப்பது, பொருத்த வீதத்திற் கேற்றதன்று எனச் சிலர் கூறுவர். இராமன் வாழ்க்கையில் அவன் இராவணனோடு செய்தபோரே முசகியமான தாகலானும், கம்பரும் அதை வரணிப்பதையே சிறப்பாகக் குறிக்கொண்டதினாலும், அது பதினெட்டு மாதம் நடந்ததாகச் சொல்லப்படும் விரிவுடையதாகலானும், அவர் கூற்றுப் பொருந்தாது.

இனி, தூய்மைபேணலை நோக்கின், கம்ப ரிராமாயணம் குற்றமுடைய தன்றென்பது, மேற்காட்டிய செய்யுட்களானேயே விளங்கும். கடைச்சங்கக் காலத்திலேயே சில வடசொற்கள் இலக்கியத்தில் இடம பெற்று விட்டமையால், கம்பர் காலமாகிய 12-ஆம் நூற்றாண்டை நோக்க, அவர் வனப்பில் வந்துள்ள வடசொற்கள், அதன் நடைத் தூய்மையைக் குலைக்கும் அளவு பெருந்தொகையின வல்ல.

இதுகாறும், ஒரு பருக்கைப் பதமாக ஒவ்வோ ரியல் பிற்கும் ஓரிரு செய்யுளை யெடுத்துக்காட்டிக் கமப ரிராமாயணத்தை நோட்டம் செய்ததின் பயனாகு, அது சிலப்பதிகாரத்திற் கொத்த சிறப்புடைய தன்றாயினும், தள்ளத்தக்கதன்றிக் கொள்ளத்தக்க இலக்கியமே என்பது, நடுநிலையான முடிபென்க. கதைவேறு; இலக்கியம் வேறு. இராமாயணக்கதை பழங்கதையாதலின், ஈண்டையாராய்ச் சிக் குரியதன்று. கம்பர் இராமாயணக் கதையைத் தெரிந்து யகாண்டதற்குக் காரணம், அது சங்கக் காலத்திலிருந்து தமிழ்நாட்டில் இடையறாது சொல்லப்பெற்று, திருமால் வழிபாட்டுத் தமிழருள்ளத்தில் இராமன் திருமாலின் தோற்றரவு என்னும நம்பிக்கை ஆழமாக வேரூன்றியதே. ஆதலின் கதைக்குற்றம் முற்றும் கம்பருடைய தன்று. பகுத்தறிவாளர் கதையைநோக்காது, கம்பர் செய்யுளைமட்டும சுவைத்தின்புறல் வேண்டும்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

## பயிற்சி 1.

பின் வருபவற்றைப் பற்றி நோட்டக்கட்டுரை வரைக :—

1. பெரியபுராணம். 2. புராணக்கல்வி. 3. தமிழிலக்கியம். 4. பாரதிதாசன் பாடல்கள்.

## பயிற்சி 2.

பின் வருபவற்றைப் பற்றிப் பொருத்தமான கட்டுரை வரைக :—

1. செய்தித்தாளின் செல்வாக்கு. 2. இந்தியா விடுதலை யடைந்ததால் விளைந்துள்ள நன்மைகள். 3. மனமுண்டானால் இடமுண்டு. 4. காலந்தவறாமை. 5. சிக்கனம். 6. என் கடன் பணிசெய்து கிடப்பதே. 7. நீர் விரும்பும் தொழில். 8. மொழிவாரி மாகாணப் பிரிவு. 9. 'பள்ளிககணக்கு புள்ளிக் குதவாது'. 10. நற்பழக்கங்கள். 11. பன்மொழியறிவின் பயன். 12. சிறியோரெல்லாம் சிறியோரல்லர். 13. அரசியல் மதத்தில் தலையிடலாமா? 14. நடைச சுற்றுப்போக்கு (Walking tours). 15. ஏழை படும்பாடு. 16. படியாதவன் படும்பாடு. 17. உலக வொற்றுமைக்கு வழிகள். 18. மேனாட்டாரிடமிருந்து நாமும் நம்மிடமிருந்து அவரும் கற்றுக் கொள்வன. 19. போரை ஒழிப்பது எப்படி? 20. அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாம். 21. 'எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது'. 22. கூட்டுறவுக் கழகம். 23. பழக்கங்கள் அமையும் வகை. 24. மாணவர் முக்கியமாகக் கற்கவேண்டியவை. 25. முற்காலம் பொற்காலமா? 26. இளமையின்பம். 27. வாழ்நாளை நீட்டிக்கும் வழிகள். 28. என் வாழ்க்கையில் ஒரு முக்கியமான நாள். 29. ஆண்டிற் சிறந்த பருவம். 30. மறுமையைப் பற்றிய உம் கருத்து.

## 8. சுருக்கி வரைதல் – (Precis writing)

### முன்னுரை குறிப்புக்கள்

ஒரு விரிவான உரைநடைப்பகுதியைப் பொருள் கெடாதவாறு சுருக்கமாய் எழுதுவது, சுருக்கி வரைதல் எனப்படும்.

ஒரு பகுதியை எவ்வளவு வேண்டுமாயினும் சுருக்கலாம். ஆயின், பொருள் கெடாதவாறு சுருக்கவேண்டி

யிருப்பதால், பொதுவாய் மூன்றிலொரு பங்காகச் சுருக்குவதே, மாணவர் சுருக்கிவரைதற் பயிற்சியாகும்.

## சுருக்கி வரைதலின் பயன்கள்

### (1) வாசகப் பயிற்சி

ஓர் உரைநடைப் பகுதியைச் சுருக்கி வரைதற்கு அதை ஊன்றிப் படிக்க வேண்டியிருப்பதால், சுருக்கி வரைதல் சிறந்த வாசகப் பயிற்சியாகும். கவனமின்றிப் படிப்பதால் எளிய பொருளும் உணரப்படாமற் போவதும், கவனித்துப் படிப்பதால் அரியபொருளும் உணரப் படுவதும், இயல்பு. அதோடு, கவனித்துப் படிக்கும் பகுதியே நினைவிலுமிருக்கும். கவனியாது படிக்கும் பகுதியில், ஒரு புதுவரிக்குச் சென்றவுடன், அதற்கு முந்திய வரிகூட மறந்து போவதுண்டு. ஆதலால், ஒரு பகுதியைக் கருத்தூன்றிப் படிக்கும இயல்பு அமைவதற்கு, சுருக்கிவரைதற் பயிற்சி ஏதுவாகின்றது.

### (2) கணிசப் பயிற்சி

ஓர் உரைநடைப் பகுதியைக் குறித்த அளவிற் சுருக்கிவரைவது எளிதன்று. முதலாவது அதன் பொருள் முழுவதையும் தெளிவாக அறிந்து, பின்பு முக்கியப் பொருளையும முக்கியமல்லாத பொருளையும பிரித்துணர்ந்து, அதன்பின் மூன்றிலொரு பங்காகச் சொற்களை அளந்துகொண்டு, சுருக்கமாகவும தெளிவாகவும் வலிமைபெறவும் எழுதுவது, பல்வகைத் திறன்களைப் பயன் படுத்தவேண்டிய பயிற்சியாகும. இங்ஙனம், சொல்லையும் பொருளையும் குறித்த அளவிற் கணித்தறிவது, சிறந்த கணிசப் பயிற்சியாம்.

### (3) வரைவுப் பயிற்சி

வரைவு வகைகளுள். சுருக்கியெழுதுதலும் ஒன்றாதலின், அதன் பயிற்சி வரைவுப்பயிற்சியுமாகின்றது.

(4) வாழ்க்கையிற் பயன்படல்

சுருக்கிவரைதல், பலர் வாழ்க்கையிற் பலவகையிற் பயன்படுகின்றது. விரிவுரையாளரும் சொற்பொழி வாளரும் உரை நிகழ்த்தும்போது மாணவரும் பிறரும் குறிப்பெடுத்துக் கொள்ளற்கும், நூல் நிலையங்களிற் படிப் போர் நூல்களினுள்ள முக்கியப் பொருள்களை வரைந்து கொள்ளற்கும், வழக்குத் தீர்ப்பில் வழக்கறிஞரும் தீர்ப் பாளரும் வழக்குப்பற்றிய செய்திகளைச் சுருக்கமாய்க் குறித்துக் கொள்ளற்கும், செய்தித்தாள் அறிக்கையாளர் செய்திகளைச் சுருக்கமாய் வரைந்தனுப்பற்கும், புகை வண்டிகள் நிலையங்களை விட்டு நீங்குமுன் அவ் வண்டிகளி னுள்ள நண்பருடன் சுருக்கமாய் அளவளாவுதற்கும், வானொலி நிலையங்களினும் பிறவிடங்களினும் குறுகிய நேரத் தில் ஒருவர் தம் முக்கியக் கருத்துக்களை யெல்லாம் கூறி முடித்தற்கும், சுருக்கிவரைதற் பயிற்சி மிகமிகப் பயன்படு வதாகும்.

ii சுருக்கி வரையும் முறை

(1) முதலாவது உரைநடைப் பகுதியைக் கருத் தூன்றிப் படித்து அதன் பருப்பொருளை அறிந்துகொள்க. முதன்முறையிற் பொருள் விளங்காவிடின், விளங்கும் வரையும் மீண்டும் மீண்டும் பலமுறை படிக்க.

(2) பருப்பொருளை யறிந்தபின், நுண்பொருளை நோக்கியுணர்க. ஒவ்வொரு சொல்லுக்கும் தொடர் மொழிக்கும் வாக்கியத்திற்கும் பொருள் தெரிந்தாலொழிய, நுண்பொருளை உணரமுடியாது. சில சமையங்களில், ஒரு சொல்லின் பொருளுணர்ச்சியே முழுப்பகுதியின் பொரு ளுணர்ச்சிக்கும் அடிப்படையாயிருக்கும். ஆதலால் பொருள் தெரியாத ஒரு சொல்லையும் விட்டுவிடல் கூடாது. ஒரு சொல்தானே யென்று விட்டுவிடின், முழுப்பகுதி யின் பொருளும் விளங்காமற் போகலாம்; அல்லது பிறழ உணரப்படலாம்.

வீட்டுப் பயிற்சிகளில், அருஞ் சொற்கட்கெல்லாம் அகராதியைப் பார்த்துப் பொருள் தெரிந்து கொள்ளல் வேண்டும். அறிஞரைக் கேட்டுத் தெரிந்து கொள்வதினும், அகராதியைப் பார்த்துத் தெரிந்து கொள்வதே நல்ல பழக்கமாகும். பிறவகையிற் பொருள் தெரிந்து கொள்வதெல்லாம், சோம்பேறித்தனத்தையும் கவலையின்மையையுமே காட்டும்.

வகுப்புப் பயிற்சிகட்குக் கையகராதியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், தேர்வு விடையெழுதும் போது, அருஞ்சொற் பொருளை இடம் நோக்கியும் முன் பின்வரும் சொற்சார்பு கொண்டும் ஊகித்தறிந்து கொள்ளுதல் வேண்டும்.

(3) பொருள் முற்றும் உணர்ந்தபின், அதற்கேற்ற தலைப்பு அமைத்தல் வேண்டும். அது சுருக்கமாகவும் முழுப் பகுதியையுந் தழுவுவதாகவும் இருத்தல் வேண்டும்.

(4) பின்பு சுருக்கிவரைதற்கு வேண்டிய முக்கியமான குறிப்புக்களை அல்லது கூறுகளை, முக்கியமல்லாதவற்றினின்று பிரித்துணர்ந்து கொள்ளுதல் வேண்டும். முக்கியமானவற்றை மூலத்திற் கோடிட்டுக் குறித்துக் கொள்வதைவிட, தனியாக எழுதிக் குறித்துக் கொள்வதே நல்லது.

(5) பின்னர், உரைநடைப் பகுதியின் அளவையும் சொல் லெண்ணிக்கையையும் கவனித்து, அதில் மூன்றி லொரு பங்காக அமையுமாறு, சுருக்கிவரையத் தொடங்குதல் வேண்டும். சொல் லெண்ணிக்கையைக் கவனிப்பதைவிட வரி யெண்ணிக்கையைக் கவனிப்பது, சிலர்க்கு வசதியாயிருக்கலாம்.

மாணவர்க்குப் பெரும்பாலும் முதன் முறையிலேயே திருத்தமாய் எழுத முடியாதாதலின், முதலாவது கரட்டு வரைவு வரைந்து கொள்வது நல்லது.

சுருக்கி வரையும்போது கவனிக்க வேண்டியவை :—

(i) சுருக்கி வரைவு, மாணவனின் சொந்தநடையில் அல்லது சொந்தச் சொற்களைக் கொண்டு அமைதல் வேண்டும். மூலவுரை நடைப் பகுதியிலுள்ள வாக்கியங்களையே தொகுத்து வரைதல் கூடாது.

(ii) சுருக்கி வரைவு ஒரே தொடர்புற்றிருத்தல் வேண்டும். அது பல பகுதிகளாகவும் பாகிகளாகவும் பகுக்கப் பட்டிருக்கலாம். ஆயினும், அவை பிளவுபட்ட கூறுகளாயிராது ஒரே பொருள் தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும்.

(iii) சுருக்கி வரைவு முழுநிறைவுள்ளதா யிருத்தல் வேண்டும். அதாவது, மூலத்தை நோக்காமலே அதன் பொருள் முழுவதையும் தெளிவாக அறிந்து கொள்ளத் தக்கதாய் இருத்தல் வேண்டும்.

(iv) சுருக்கி வரைவு ஓர் உரைநடைப் பகுதியின் சாரமே யாதலால், அதில் எத்தகைய சொந்தக் குறிப்பும் கூற்றுமிருத்தல் கூடாது. மூலத்திலுள்ள கருத்தை மாற்றுதல் திருத்துதலுங் கூடா. புதுச்சேர்க்கை ஒரு சிறிது மில்லாமல், முழுதும் மூலத்திலுள்ளதாயே யிருத்தல் வேண்டும்.

அணிகளையும் நெடு வாக்கியங்களையும் பொருள் கெடாதவாறு மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

(6) கரட்டு வரைவு முடிந்தவுடன் அதிலுள்ள சொற்களை எண்ணிப்பார்த்துக் குறைக்க வேண்டியவற்றைக் குறைத்துக் கொள்ளுதல் வேண்டும்; திருத்தவேண்டியவற்றையுந் திருத்திக் கொள்ளலாம்.

(7) பின்னர், செவ்வைப்படி யெடுத்தல் வேண்டும்.

### iii. மூலத்தைச் சுருக்குவதற்குக் கையாளவேண்டிய வழிகள்

(1) முக்கியமல்லாத பொருள்களை விட்டுவிடல். வேண்டாவிடத்து, எடுத்துக்காட்டு விளக்கங்களையும் விட்டுவிடலாம்.

(2) கூறியது கூறலை விலக்கல்.

எ-டு. "போருக்குச் சென்றவரெல்லாம் மடிந்து விட்டனர். அவருள் ஒருவராவது திரும்பி வரவில்லை"

போருக்குச் சென்றவரெல்லாம் மடிந்து விட்டனர்.

(3) நெடுவாக்கியங்களைக் குறுவாக்கியங்கள் அல்லது தொடர் மொழிகளாகவும், தொடர் மொழிகளைச் சொற்களாகவும், சுருக்குதல். எ-டு.

"பழைய பிரதிகளுட் பல, இனி வழுப்பட வேண்டுமென்பதற்கு இடமில்லாமற் பிழை பொதிந்து, அநேக வருடங்களாகத் தம்மைப் படிப்போரும் படிப்பிப்போரும் இல்லை என்பதையும், நூல்களைப் பெயர்த்தெழுதித் தொகுத்து வைத்தலையே விரதமாகக் கொண்ட சிலபுண்ணிய சாலிகளாலேயே தாம் உருக் கொண்டிருத்தலையும் நன்கு புலப்படுத்தின."

பழம்படிகளுட் பல, பிழைநிரம்பி, தாம் படிக்கப் படாமல் தம்மைப் படியெடுத்தவ ராலேயே உருக்கொண் டிருத்தலைப் புலப்படுத்தின.

"குழந்தையைப் பெறும்போது படுந்துன்பமெல்லாம் அக்குழந்தையைக் கண்ட காலத்திலே மறைந்துவிட, தாய் பெரிய இன்பத்தை அடைகின்றாள். அதுபோலவே...."

குழந்தையைப் பெற்றவுடன் வேதனையை மறக்கும் தாய்போல.

"புலவர் சிந்தித்ததை யெல்லாம் தரும் மணிபோன்ற சிந்தாமணியில்"

சிந்தாமணியில்.

"எவ்வகை யொளியிலும் எவ்வகைக் கருவிகொண்டும் பார்க்க முடியாதவன்"

குருடன்.

குறிப்பு :—ஓர் உரைநடைப் பகுதியில், முக்கியமான பொருள்களையும் அல்லாதவற்றையும் இன்னின்னவென்று நிலையாக வரம்பிட்டுக் கூறமுடியாது. சுருக்கவேண்டும் அளவிற்குத் தக்கவாறு, ஒரு பொருள் முக்கியமானதாகவோ அல்லாததாகவோ கருதப்படலாம். ஒருமுறை சுருக்கி வரைந்ததையே மீண்டும் சுருக்கிவரையின், முன்னதில் முக்கியமாயிருந்தது பின்னதில் அல்லாததாய்ப் போம்.

போலிகை

காலம் பொன்னினும் மணியினும் மதிப்புயர்ந்ததென்பது மட்டுமன்று, உயிரைப்போன்றே அருமையானதென்பதும், இக்காலத்து உணர்ந்தவர் மேனாட்டார். எவ்வினையையும், பொறியின் துணைகொண்டு எவ்வளவு விரைவாகவும் பேரளவாகவும் செய்ய முடியுமோ, அவ்வளவு விரைவாகவும் பேரளவாகவும் செய்து வருகின்றனர், மேனாட்டாரெல்லாரும். அவருள்ளும், அமெரிக்கர் ஓரிரு துறைகளில் ஒருபடி மேற் சென்றுள்ளனர். வாழ்நாட் காலத்தின் அருமையை நன்றாயுணர்ந்து, அதனாற் பெறக்கூடிய முழுப்பயனையும் எல்லாத் துறையிலும் பெற்று வருபவர் அமெரிக்கரே

சமையல், தயிர்கடைதல், அப்பம் (ரொட்டி) சுடுதல் முதலிய உணவாக்க வினைகளும்; வீடுவாசல் கூட்டுதல், சாலை பெருக்குதல், கலங் கழுவுதல், துணி துவைத்தல் முதலிய துப்புரவு வினைகளும்; ஊணுடைகளையும் பிற பொருள்களையும் குளிரவைத்தல் சுடவைத்தல் காயவைத்தல் புலர்த்துதல் முதலிய தட்ப வெப்பப்படுத்து வினைகளும்; மடித்தல் விரித்தல் முதலிய வசதிவினைகளும், அமெரிக்காவில் பெரும்பாலும் மின்சாரப் பொறிகளாலேயே செய்யப்படுகின்றன.

அமெரிக்காவில் மழை பெய்யாவிட்டால் உழவுத்தொழில் தடைப்படுவதில்லை. மழை பிந்திய பெய்யுமட்டும் காத்திராமலும் காலத்தை வீண்போக்காமலும், செயற்கை மழையை வேண்டுமளவு வருவித்துக் கொள்கின்றனர், அமெரிக்க உழவுப் பண்ணையாளர். அவருள் ஒவ்வொரு

வரும் பெருநிலக் கிழவராதலின், ஒவ்வொரு விளையுளிலும் ஏராளமாகப் பொருள் விளைவிக்கின்றனர். மழை பெய்வித்தல் முதல் அறுவடைவரையும் ஒவ்வொரு பயிர் வினையும் பொறியினாலேயே செய்யப் படினும், பருத்தி வெடிப்புப் போன்ற விளையுட்காலத்தில் பெருந்தொகையினரான ஆட்கள் தேவையாயிருத்தலின், மாணவரும் உழவர்க்குதவுமாறு, அக்கம் பக்கத்திலுள்ள பள்ளிகள் சாத்தப்படுகின்றன. அரசியலாரும் அதற்கிசைந்துள்ளனர். இதனால், பயிர்த்தொழில் விரைந்து நடப்பதுடன், மாணவர்க்கும் ஊதியங் கிடைக்கின்றது.

கட்டடவேலையுட்பட எல்லாக் கைத்தொழில்களும் அமெரிக்காவில் பொறியினாலேயே செய்யப்படுகின்றன.

இயங்கிகளிலும் புகைவண்டி நிலையங்களிலும் வழிப்போக்குச் சீட்டுவிற்பதும், சில சிற்றுண்டிச் சாலைகளில் சிற்றுண்டி விற்பதும், வாழ்நாட் பாதுகாப்பகங்களில் ஒப்பந்தமுறி (Insurance policy) தருவதும், அமெரிக்காவில் பொறிகளே. வணிகமும் விற்பனையும் விரைந்து நடைபெறுதற்கு அங்கு பற்பல வசதிகள் செய்யப்பட்டுள்ள நாற்பது ஐம்பது நிலைமாடங்கள் அங்கு பெருந்தொகையாயுள்ளன. ஒவ்வொரு கட்டிடத்திலும், குடியிருப்பகங்கள், பல் பொருட்கடைகள், தையற்கடை, சலவைச்சாலை, முடிதிருத்தகம் (Saloon), மருத்துவசாலை, அஞ்சலகம் (Post-Office), விளையாட்டிடம், பூங்கா, இயங்கிக் கொட்டில் (Garrage) முதலியனவிருப்பதால், ஓரேயிடத்தில் பல வசதிகளையும் ஒருங்கேபெறுவதற் கேதுவாயிருக்கின்றது. பெரும்பாலும் வீடுதொறும் தொலைபேசி (Telephone) இருப்பதால், சிலர் தொலைபேசி வாயிலாகவே கடைக்காரருக்கு ஆணை கொடுத்து, தமக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றுக் கொள்கின்றனர் பண்டிகை நாட்களிலும் விழாக் காலங்களிலும் விற்பனை நெருக்கடியைச் சமாளிப்பதற்கு, மிகைப்படியான ஆட்களைக் கடைக்காரர் அமர்த்திக் கொள்கின்றனர். ஒருவர்க்கு வேண்டிய உடை ஒருமணி நேரத்திற் கிடைக்குமாறு, தையற்சாலைகளில் விரைந்து

வேலை நடைபெறுகின்றது. பெருங்கடைகட் கெல்லாம் நாடுமுழுதுங் கிளைகளிருப்பதால், ஓரூரில் ஒருவர் விரும்பியபடி இன்னோரூரில் இன்னொருவர் ஒரு பொருளை விரைந்து பெறுவதற்கு வசதியா யிருக்கின்றது.

செய்தித்தாட்களை விற்பவர் அவற்றை ஓரிடத்தில் அடுக்கி வைத்து விட்டுச் சென்றுவிட, அவ்வழியாய்ப் போவார் வருவார் தாமாகத் தமக்கு வேண்டியவற்றை யெடுத்துக்கொண்டு, அவற்றிற் குரிய காசை அங்குள்ள பெட்டியிற் போட்டு விடுகின்றனர். இதனால், செய்தித்தாள் விற்பவர் அந்நேரத்தில் வேறுவேலை செய்ய இயலுகின்றது. இதற்கு அமெரிக்கரின் வாய்மையும நேர்மையும் துணை செய்கின்றன.

அமெரிக்க நாணயசாலைகளில் ஒரு நிமையத்திற்குள் காசோலையை (Cheque) மாற்றிவிடலாம். இரவில் பணத்தை இட்டுவைததற்கு வசதியும், வழிப்போக்கர் விரைந்து மாற்றுவதற்கு வானூர்தி நிலையங்களிற் கிளைகளும் அமெரிக்க நாணயசாலைகள ஏற்படுததியுள்ளன.

பொருள்களை விரைந்து அளவிடுதற்கு, எண்ணைப் போன்றே எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும் ஏனை அளவீடுகளையும், பப்பத்து மடங்காய் உயர்கின்ற அல்லது பத்தால் வகுக்கக்கூடிய பதின்முறைத் திட்டததில் அமைத்துள்ளனர் அமெரிக்கர். நூறுசதம ஒரு டாலர். நூறு இராத்தல் ஓர் அந்தர். பத்துப் படைச்சால (Furlong) ஒரு கல் (Mile) இத்தகைய அளவீட்டால் வசதியேற்படுவதுடன் நேரம் மீக்கப்படுகின்றது. இனி, ஆண்டைக்கூட, ஒவ்வொன்றும் இருபத்தெட்டு நாட்களைக் கொண்ட பதின்மூன்று மாதங்களும் மேலொரு விடுமுறை நாளுமாக வகுத்து. இம்முறையையே பல வணிகர் அங்கு கையாண்டு வருகின்றனர். இது நேரத்தை மீப்பதுடன், எத்துணை ஒழுங்கும் வசதியுமாக இருக்கின்றது!

அமெரிக்காவில், 33 இலக்கம் கல் கற்சாலைகளும், 227 ஆயிரம் கல் இருப்புப்பாதைகளும, ஏழாயிரம் வானூர்தி

நிலையங்களும் உள. அங்கு நால்வருள் ஒருவர்க்குச் சொந்த இயங்கி உண்டு; ஐந்திலக்கம் பேருக்கு வானூர்தி இயக்கவும், ஆடவர் பெண்டிர் அனைவர்க்கும் இயங்கி இயக்கவும தெரியும். இயங்கியும் புகைவண்டியும் வானூர்தியுமாகிய பொறியூர்திகளே அங்குள. அவையனைத்தும் பொதுவாய் வேகமாய்ச் செல்கின்றன. வெவ்வேறு வேகமாய்ச் செல்லும் இயங்கிகட்கு, சாலைகளில் வெவ்வேறு பாதைகள் விடப்பட்டுள்ளன. போக்குவரத்துக் கட்டுப்பாடும் மூட்டைகளை இடம் பெயர்ப்பதும் பொறிவாயிலாய் நடைபெறுகின்றன. வேண்டுமிடமெல்லாம் கீழ்ப்பாதைகளும் சுரங்கப்பாதைகளு மிருப்பதால், மட்டக்கடப்பு (Level Crossing) என்பது அங்கில்லை. இதனால், வழியிடை நில்லாமலும் காத்திராமலும் வண்டிகள் நேரே செல்லலாம். இருப்புப் பாதைகளெல்லாம் ஒரே அளவான அகலப் பாதை யாதலால், வண்டிகள் மாறாமல் எங்கும் செல்ல முடியும் பெருவணிகரும் தொழிற்சாலை முதலாளிகளும் சொந்தமாகக் கூண்டுச் சகடுகளு- கட்டைச் சகடுகளும் வைத்திருப்பதால், அவர்கள் தங்கள் பொருள்களை இருப்புப்பாதை வழியாக விரைந்து வேறிடம சேர்ப்பதற்கு வசதியா யிருக்கின்றது.

மாடிக் கட்டிடங்களில் தூக்கியும் (Lift) சுழல் படிக்கட்டும் (Escalator) இருப்பதால், விரைந்து வேண்டும் மாடிக்குச் செல்லமுடியும் கடிதம் முதலியவற்றை மேலிருந்து கீழிடச் சுவர்க் குழாய்கள் அமைக்கப்பட்டுள.

அஞ்சற் போக்குவரத்து விரைந்து நடைபெறும் பொருட்டு, அஞ்சல் முத்திரைகள் பிற கடைகளிலும் விற்கப்படுகின்றன.

தொலைக்காட்சியும் (Television) தொலைக்காட்சி யஞ்சலும் அமெரிக்காவில மிகுதியாக நடைபெறுகின்றன. தொண்ணூற்றெட்டுத தொலைக்காட்சி நிலையங்களும் (Television Transmitters) 23 இலக்கம் தொலைக்காட்சிக் கருவிகளும (Television Sets), இன்று அங்குள. ஒரு

நொடிக்கு 186 ஆயிரம் கல் தொலைவு, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்யலாம்.

அமெரிக்கக் கல்வித் திட்டம் மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளது. அவரவர்க்கு வேண்டிய கல்வியே அங்கு கற்பிக்கப்படுகின்றது. ஒரு தேர்விற்குக் குறித்த கடவைக் (Course) காலத்தை முடிக்கவேண்டுமென்னும் கட்டாய மில்லை. ஒரு மாணவன், தன் திறமைக்குத்தகத் தனக்கு வேண்டுங் கல்வியை எவ்வளவு விரைந்தும் முடித்துக் கொள்ளலாம். அமெரிக்க மக்களுக்குப் போதிய பள்ளி களும் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களுமிருப்பதால், மாணவர் எவரும் இடமில்லாமற் காத்திருக்கவும் காலத்தை வீணாய்க் கழிக்கவும் வேண்டியதில்லை. மாநகர்தொறும் பல்கலைக்கழகமிருப்பதால், மாணவர் மேற்கல்விக்கு நெடுந் தொலைவு செல்லவேண்டியதுமில்லை. விடுமுறைக் காலத் திலும் நாட்களிலும், பயிர்த்தொழிற் பண்ணை, உண்டிச் சாலை, தொழிற்சாலை, அஞ்சலகம், பெருங்கடை, திரைப் படவரங்கு முதலியவற்றில், மாணவர் வேலைசெய்து தம் உயிர்வாழ்க்கைக்கும் கல்விக்கும் வேண்டுமளவு பொரு ளீட்டிக்கொள்கின்றனர். இவ்வகையில், கல்விப் பயிற்சி முடியும்போது தொழிற் பயிற்சியும் முடிகின்றது. பகலில் வேலைபார்க்கும் அலுவலாளர்க்கென்று இராப் பல்கலைக் கழகங்கள் நடைபெறுகின்றன. தேர்வு விடைத்தாட்கள் சுருக்கானமுறையில் திருத்தப்பெற்று, விளைவுகள் விரைந்து விளம்பப்பெறுகின்றன.

புதுமொழிப் பயிற்சிக்கு ஒலித்தட்டுக்களிருப்பதால், ஆசிரியருதவியின்றியே ஒரு புதுமொழியை அமெரிக்கர் விரைந்து கற்றுக்கொள்கின்றனர்.

செய்தித்தாட்கள் பொதுவாய் விரிவுற்றிருப்பதால், அவற்றை முழுதும் படித்தற்குப் போதிய நேரம் பலர்க் கில்லாமைபற்றி, அவற்றிலுள்ள முக்கியமான செய்தி களின் சாரத்தைமட்டும் திரட்டிக்கூறும் செய்திச் சுருக்கம் (Digest) என்னும் தாட்கள், பொருள்வாரியாக அமெரிக்

காவில் வெளியிடப்பெறுகின்றன. சிற்றுண்டியருந்தும் போதே பலர் செய்தித்தாளைப் படித்துவிடுகின்றனர்.

பேச்சும் எழுத்தும்கூட அமெரிக்கர் சுருக்கமாகவே நிகழ்த்துகின்றனர். வேலைநேரத்தில் அவர் பிறபேச்சுப் பேசுவதில்லை. உறவினரொடு உரையாடுவதையும் ஊண் வேளையில் வைத்துக்கொள்கின்றனர். குட்டிக் கதைகள் அவருக்கு மிக விருப்பம். ஆங்கிலச் சொற்களிலுள்ள ஊமை யெழுத்துக்களையெல்லாம் விலக்கி யெழுதவேண்டு மென்பது அவர் கருத்து. ஆயின், அதற்குரிய அதிகாரம் இங்கிலாந்திலிருப்பதால், அவரால் அது செய்ய முடிய வில்லை.

அமெரிக்கத் திரைப்படவரங்குகள் போக்குவரத்து மிக்க இடங்களிலெல்லாம் இருப்பதாலும், அவற்றில் முற் பகல்முதல் பின்னிரவுவரையும் ஒரே படம் மீண்டும் மீண் டும் இடைவிடாது நடைபெறுவதாலும், ஒருவர் அண்மை யிலும் விரும்பிய நேரத்திலும் படம் பார்க்க இயல்கின் றது. அவற்றிற்குரிய கட்டணமும் ஒரேயளவாதலால், சீட்டு விற்பனையும் விரைந்து நடைபெறுகின்றது.

இங்ஙனம் ஒவ்வொரு வினையின் காலத்தையும் குறுக் கிக் குறுக்கி, கடைசியில் உறக்கத்தையுங் குறுக்கிக்கொண் டனர் அமெரிக்கர். இதனால், அவருக்கு அமைதியே யில்லையென்று நம்மவருட் சிலர் குறைகூறலாம். ஆயின், அமெரிக்கர் சராசரி வாழ்நாள் 61 ஆண்டு என்பதையும், இந்தியர் சராசரி வாழ்நாள் 26 ஆண்டே என்பதையும் நோக்கும்போது, அவரது வாழ்க்கை சுறுசுறுப்பும் நமது வாழ்க்கை சோம்பலுமே நிறைந்தனவென்று கொள்ள வேண்டியிருக்கின்றது. ஒழுக்கம் வாய்மை பிறர்மாட் டன்பு முதலிய பண்பாட்டு வகையிலும், அமெரிக்கர் வாழ்க்கை இற்றை யிந்தியர் வாழ்க்கையினும் ஏற்றம் என் பது தேற்றம். ஆதலால், தற்காலக் கல்வியாகிய அறிவியற் கலையில் நாம் எங்ஙனம் அவரைப் பின்பற்றுதல் தகுமோ, அங்ஙனமே சுறுசுறுப்பிலும் வினைவிரைவிலும் அவரைப் பின்பற்றுதலும் தகும் என்க.

## சுருக்கி வரைவு

### அமெரிக்கர் காலத்தைப் பயன்படுத்தல்

இக்காலத்தில், காலத்தின் அருமையை யுணர்ந்து, பொறித்துணையினால் சுருக்கமான காலத்தில் பெருக்கமான வேலையைச் செய்துவருபவர் மேனாட்டாரே. அவருள்ளும், அமெரிக்கர் சிறந்தோராவர்.

பற்பல சமையல் வினைகளும், துப்புரவு வினைகளும், பொருள்களைத் தட்ப வெப்பப்படுத்தும் வினைகளும், பிறவும், அமெரிக்காவில் பொறிகளாலேயே செய்யப்படுகின்றன.

இயற்கைமழை பெய்யாத காலத்தில், அமெரிக்க வுழவர் செயற்கைமழையைப் பெய்வித்துக்கொள்கின்றனர். அவர் பெரும் பண்ணையாளராதலின், பெருவாரியாகப் பொருள்களை விளைவித்து, அறுவடைக்காலத்தில் மாணவரையுங் கூலிக்கமர்த்திக்கொள்கின்றனர்.

கைத்தொழில்களெல்லாம அமெரிக்காவில் பொறியினாலேயே செய்யபபடுகின்றன.

வழிப்போக்குச் சீட்டு சிற்றுண்டி முதலியவற்றின் விற்பனையும், அமெரிக்காவில் பொறியினால் நடைபெறுகின்றது. வானளாவும் மாபெரு மாடிக்கட்டிடங்களில் வாழ்க்கைக்கு வேண்டிய பலபொருள் வசதிகளும் ஒருங்கேயமைந்துள்ளன. சிலர் தொலைபேசிவாயிலாகவும் கடைக்காரருக்கு ஆணைகொடுக்கின்றனர். பொருள்களை விரைந்து பெறுதற்குரிய எல்லா வசதிகளையும் கடைக்காரர் செய்துவைத்திருக்கின்றனர்.

செய்தித்தாட்களை ஒருவரும் அருகிருந்து விற்பதில்லை. அவற்றை வாங்குபவர் தாமே அருகிலுள்ள பெட்டியிற் காசைப் போட்டுவிடுகின்றனர்.

அமெரிக்க நாணயசாலைகளில் ஒரு நிமையத்தில் காசோலையை மாற்றலாம்; இரவிலும் பணத்தை இட்டுவைக்கலாம்.

நால்வகை யளவீடுகளும் பத்தால் வகுக்கக்கூடிய பதின்முறைத் திட்டத்தில் அமைக்கப்பட்டுள. பல வணிகர், ஓர் ஆண்டை, ஒவ்வொன்றும் இருபத்தெட்டு நாட் கொண்ட பதின்மூன்று மாதங்களும் மேலொரு நாளுமாக வகுத்திருக்கின்றனர்.

அமெரிக்காவில், ஏராளமான கற்சாலைகளும் இருப்புப்பாதைகளும் வானூர்தி நிலையங்களும் உள. நால்வருள் ஒருவர்க்குச் சொந்த இயங்கியுண்டு. மட்டக்கடப்பிற்கிடமில்லாதவாறு, வேண்டுமிடமெல்லாம் கீழ்ப்பாதையும், சுரங்கப்பாதையும் அமைக்கப்பட்டுள. இருப்புப்பாதைகளெல்லாம் ஒரே அளவின.

மாடிக் கட்டிடங்களில் தூக்கியும் சுழல் படிக்கட்டும் உண்டு.

அஞ்சல் முத்திரைகள் பல கடைகளிலும் கிடைக்கும்.

தொலைக்காட்சியும் தொலைக்காட்சி யஞ்சலும், அமெரிக்காவில் மிகுதியாய் நடைபெறுகின்றன.

அமெரிக்கக் கல்வித்திட்டம் மிகச்சிறந்தது. எவரும் எங்கும் என்றும் வேண்டிய கல்வியை விரைந்துபெறலாம். மாணவர் கல்வி பயின்றுகொண்டே, விடுமுறைக்காலத்தில் வேலைசெய்து பொருளும் ஈட்டிக்கொள்ளலாம். பகலில் கற்க வசதியில்லாதவர்க்கு இராக் கல்வி நடைபெறுகின்றது. தேர்வு விளைவு விரைந்து தெரிவிக்கப்பெறுகின்றது.

புதுமொழிப் பயிற்சிக்கு ஒலித்தட்டுக்கள் உண்டு.

செய்திச் சுருக்கங்கள் வெளியிடப்பெறுவதால், வேண்டிய செய்திகளை விரைந்து படித்துக்கொள்ளலாம்.

அமெரிக்கர் பேச்சும் எழுத்தும் மிகச் சுருக்கம். உறவினரொடு அளவளாவுவதும் ஊண் வேளையில்தான் நிகழும். குட்டிக் கதைகளைத்தான் அவர் விரும்பிக் கேட்பர்.

அமெரிக்காவில் முக்கியமான இடங்களிலெல்லாம் திரைப்பட வரங்குகளிருப்பதாலும், ஒரே படம் நாள்முழுதும் மீண்டும் மீண்டும் நிகழ்வதாலும், எவரும் என்றும் எப்படமும் பார்க்க இயல்கின்றது.

அமெரிக்கர், பிற வினைகளைப்போன்றே உறக்கத்தையும் குறுகிய காலத்தில் நிகழ்த்துகின்றனர். ஆயினும், அவர் சராசரி 61 ஆண்டு வாழ்வதால், நாம் அச்சமின்றி அவரை வினைசெய் முறையிலும் பின்பற்றலாம்.

## 9. பெருக்கி வரைதல் - (Expansion of Passages)

### i முன்னுரை குறிப்புக்கள்

ஒரு வாக்கியத்தை அல்லது கூற்றை ஒரு பாகியாகவும், ஒரு பாகியைப் பல பாகிகளுள்ள ஒரு சிறு கட்டுரையாகவும், விரித்தெழுதுதல் பெருக்கி வரைதலாகும். இது சுருக்கி வரைதலுக்கு நேர் எதிரான பயிற்சியாம.

நூலாசிரியருக்கும் சொற்பொழிவாளர்க்கும் இப்பயிற்சி மிகப்பயன்படும். ஒரு சிறுகதையைப் பெரிய நூலாக விரிப்பதும் பெருக்கி வரைதலேயாயினும், அது ஆசிரியர்க்கேயன்றி மாணவர்க்குரியதாகாமையின், இங்கு விடப்பட்டுளது.

ஒரு வாக்கியத்தை ஒரு பாகியாக விரிக்கும் பயிற்சியைக் கீழ்வகுப்பு மாணவர்க்கும், ஒரு பாகியை ஒரு கட்டுரையாக விரிக்கும் பயிற்சியை மேலவகுப்பு மாணவர்க்கும், வைத்துக்கொள்ளலாம்.

### ii பெருக்கி வரையும் முறை

(1) முதலாவது, பெருக்கி வரையவேண்டிய வாக்கியத்தை அல்லது பகுதியை நன்றாகப் படித்து, அதன் பொருளைத் தெளிவாக உணர்ந்துகொள்ளல்வேண்டும்.

(2) பொருளுணர்ந்தபின் ஒரு பொருத்தமான தலைப்புக் கொடுத்தல்வேண்டும்.

(3) அதன்பின், விளக்கம் நுண்கருத்துக்கள் ஏது எடுத்துக்காட்டு முதலியவற்றால், குறித்த பகுதியை விரித்து வரைதல்வேண்டும்.

(4) புதிதாகச் சேர்ப்பதெல்லாம் மூலப் பகுதிப் பொருளைத் தழுவியே யிருத்தல்வேண்டும். மூலத்திற்கு மாறானது ஒன்றும் பெருக்கிவரைவதில் இருத்தல்கூடாது.

(5) மூலப்பகுதி ஓர் அணியா யமைந்திருந்தால், அதைத் தெளிவான நடையில் விளக்கி வரைதல்வேண்டும்.

(6) ஒரே வாக்கியமாய் அல்லது கூற்றாயிருக்கும் மூலப்பகுதி, ஒரு படிப்பனைபோன்ற முடிபாயிருக்குமாதலின், அம்முடிபிற்கேற்ற படிமுறைக் கருத்துக்களை வரிசை பிறழாது அமைத்து வரைதல்வேண்டும்.

(7) மூலப்பகுதி ஒரு பாகியாயிருக்குமாயின், அதிலுள்ள ஒவ்வொரு கருத்தையும்பற்றி, ஒவ்வொரு பாகி வரைதல்வேண்டும்.

(8) பெருக்கி வரைந்தவுடன் பிழைதிருத்தி, இன்றியமையாததாயின், செவ்வைப்படியும் செய்துகொள்ளலாம்.

### போலிகைகள்

(1) சொல்வதெளிது; செய்வதரிது.

### பெருக்கி வரைவு

### செய்து காட்டல்

ஒருவன் எதையும் சொல்லிவிடலாம்; ஆனால், சொல்லியவண்ணம் செய்துகாட்டுதல் அரிதாகும். செய்துகாட்டல் என்பது, சொல்லியபடி செய்தலும் சொல்லியபடி ஒழுகுதலும என இருதிறப்படும். ஒரு வேலையிற் குறை கூறுகிறவன், தான் அதைக் குறையின்றிச் செய்யக்கூடியவனாயிருத்தல் வேண்டும். கட்டத் தெரியாதவன் கட்டின வீட்டிற்கு வக்கணை சொல்லக்கூடாது. ஏவுகிறவன் ஒரு சொல்லில் ஏவிவிடலாம்; ஆனால், இயற்றுகிறவனுக்குத்

தான் தலைச்சுவைப்பளவு தெரியும். இங்ஙனமே, ஒழுக்க வகையிலும் கற்பிப்பு எளிது; கைக்கொள்வு அரிது. ஒழுக்கத்தைக் கற்பிப்பவன் ஒழுகியுங்காட்டுதல்வேண்டும். அல்லாக்கால், கற்பிப்பு வலியற்றுப்போவதுடன் பழிப் பிற்கும் இடமாம்.

(2) 'காணியாசை கோடிகேடு'

பெருக்கி வரைவு

பேராசை

ஆசை அனைவர்க்கும் உண்டு. அதுவும் ஓரளவு ஒரு வர்க்கு இருக்கத்தான் வேண்டும். இல்லாவிடின், ஊக்க மும் முயற்சியும் பிறவா. ஆனால், அது அளவிற்கு மிஞ்சி யிருத்தல் கூடாது, அளவுக்கு மிஞ்சிய ஆசை அறிவை மறைத்து மதியை மழுக்கிவிடுகின்றது. அதனால், நாணம் நடுநிலை நன்றியறிவு அன்பு முதலிய நற்பண்புகளையெல் லாம் இழந்து, பிறர் உரிமையில் தலையிடவும் பிறர் பொரு ளைக் கவரவும் நேர்கின்றது. இதுமட்டுமா? மிகச்சிறிய பொருளுக்காக மிகப்பெரிய பொருளை இழக்கவும் நேர் கின்றது. சிறிய பொருளைத் திருடியும் சிறிய கையூட்டை வாங்கியும், உரிய வேலையும் பெரிய பதவியும் இழந்தவர் எத்தனைபேர்! அரைக்காசிற்காக மதிப்பரிய மானத்தை யிழந்தவர் எத்தனைபேர்! இன்னும், இம்மிக்கு ஆசைப் பட்டு இன்னுயிரை யிழந்தவர் எத்தனைபேர்! இங்ஙன மெல்லாம் பொருளும் மானமும் உயிரும் இழப்பதற்கே பேராசை ஏதுவாயிருத்தலின், பேராசை பெருநட்டமென் பதையுணர்ந்து அதை விட்டுவிடுதல்வேண்டும்.

(3) "அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு."

பெருக்கி வரைவு

அன்புடைமை

அன்பானது, உயர்திணையென உயர்த்துச் சொல்லப் படும் மக்கட்கெல்லாம் இன்றியமையாத குணமாகும்.

அன்பில்லாதவர் மக்கள் என்னும் பெயருக்கு உரியவரல்லர். அவர் மாக்கள் என்று பிரித்துக் கூறப்படுவர். மற்ற உயிர்களுக்கல்லாவிடினும், மாந்தர் அனைவருக்குமாவது நன்மைசெய்யுங் குணமே, அன்பு எனப்படும். அன்பு ஒருவர்க்கிருந்தால், அதை வெளிப்படாதபடி உள்ளத்தில் அடைத்துவைக்க முடியாது. சொல் செயல் என்னும் ஏனையிருகரண வினைகளாலும் அது வெளிப்பட்டேதீரும். அன்பில்லாதவர் எல்லாப் பொருள்களையுந் தமக்கே பயன்படுத்துவர். அன்புள்ளவரோ, எல்லாப் பொருள்களையும் தம்மால் அன்பு செய்யப்பட்டவர்க்கே பயன்படுத்துவர். இனி, பிறிதின்கிழமைப் பொருள்களைமட்டுமல்ல, வேண்டுமிடத்துத் தற்கிழமைப் பொருளாகிய தம் உடம்பையும் பிறர்க்களித்துத் தம வாழ்நாளை முடிப்பர் அன்புடையார். உடம்பின்றி உலக வாழ்க்கையில்லாமையின், உடம்பைக் கொடுத்தலும உயிரைக் கொடுத்தலும் ஒன்றே. உயிரைப் போற் சிறந்த பொருள் வேறொன்றுமில்லை. ஆதலால், அன்பானது ஈகை யென்னுங்குன்றேறி, உயிரீகையாகிய கொடுமுடி யடைந்துவிடுகின்றது. என்னே அன்பின் இயல்பு !

(4) "நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்"

பெருங்கிவரைவு.

நன்முயற்சி.

முயற்சியில்லாமல் உலகில் ஒன்றையும் பெறமுடியாது. முயற்சி பெரும்பாலும் வெற்றியே தரும். 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்பது பழமொழி. 'ஊக்கமுடைமை ஆக்கத்திற் கழகு' என்றார் ஒளவையார். 'முயற்சி திருவினையாக்கும்' என்றார் வள்ளுவர். முயற்சி, செய்வாரை நோக்கி, தன்முயற்சி பிறர்முயற்சி என இருவகைப்படும். ஒருவன் தன்முயற்சியின்றிப் பிறர்முயற்சியாலேயே ஒரு

காரியத்தைச் செய்யின், அதில் வெற்றி பெறுவது உறுதியன்று. ஒருகால் மிக நெருங்கிய உறவினரே முயற்சி செய்து வெற்றி விளைவிப்பினும், அது கருதிய அளவு கைகூடியதாயிராது. மேலும, தன்முயற்சியற்றவன் அத்தகைய வெற்றியைக் காத்துக்கொள்வதும் அரிது. இனி, ஒருவன் விரும்பிய பொருளையே அவன் உறவினரும் பெற விரும்பலாம். 'தாயும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறு' ஆதலால், 'அவரவர் அக்கறைக்கு அவரவரே பாடுபடவேண்டும்', எவ்வளவு நெருங்கிய உறவினராயிருப்பினும், ஒருவனுக்கிருக்கும் ஆத்திரம் இன்னொருவனுக்கிருக்க முடியாது. ஒரு காரிய வெற்றிக்கு இடைவிடாத உழைப்பும் விழிப்பும் பொறையும் பொறுமையும் வேண்டும். அவற்றுள் ஒன்று குறையினும் வெற்றிகிட்டாது. ஆதலின் ஒரு பொருளைப் பெற விரும்புகிறவன் அதற்குத் தானே முயலவேண்டும். ஒரு காரியத்தில் பிறர்முயற்சியும் துணை செய்யுமாயினும், தன்முயற்சி இன்றியமையாததாகும். ஒரு பொருளைப் பெறுவதென்பதும், ஒரு நிலைமையை அல்லது பதவியை அடைவதென்பதும், ஒன்றே. தன்னை நல்ல நிலைமைக்குக் கொண்டு வருபவனும், அந்நிலைமையினின்று தன்னைத் தாழ்த்திக் கொள்பவனும், அங்ஙனமன்றி மேன்மேலுந் தன்னை உயர்த்தி இறுதியில் தன்னைத் தலைமையாகச் செய்து கொள்பவனும், தானேயாதலால், ஒவ்வொருவரும் தன்முயற்சியைக் கடைப் பிடித்தல் வேண்டும்.

(5) காதல் என்பது அளவிறந்த அன்பு. அது கணவன் மனைவியரிடை மட்டுமன்று, எந்த இருவரிடையும் நிகழக் கூடியது. அது ஒருதலைக் காதல் இருதலைக் காதல் என இருவகைப்படும். அவற்றுள் இருதலைக் காதல் வாய்ப்பது மிகவும் அருமையானது. காதலுக்குக் காட்சியும் கலந்துறவாடலும் வேண்டியதில்லை. உணர்ச்சியொத்த இருவர் நெடுந்தொலைவிலிருந்துகொண்டே ஒருவரையொருவர் காதலிக்கலாம். காதலர் உலகிலுள்ளவரை ஒருவரையொருவர் நினைத்துக்கொண்டேயிருப்பர். அவர் ஒருவருக்

கொருவர் உயிரையும் உவந்தீவர். காதலர் இருவருள் ஒருவர் இறப்பின் ஏனையவரும் உடனிறத்தல் வேண்டு மென்பது பண்டைக் கொள்கை. அது இன்றைக் கேற்காது.

பெருக்கி வரைவு.

**காதலர் இயல்பு**

காதலைக் கொண்டவர் காதலர். காதலென்பது அளவிறந்த அன்பு. ஒருவரையொருவர் இன்றியமையாமை என்று அதற்கு இலக்கணம் கூறுவது இன்று பொருந்தாது.

அளவிறந்த அன்புடைய கணவன் மனைவியரே, பொதுவாகக் காதலர் என்று குறிக்கப் பெறுபவர். பிறவகையுறவுடையாரும் காதலராயிருக்கலாம். பெற்றோரும் பிள்ளையரும் ஒருவகைக் காதலர். அவர்போல் அளவிறந்த அன்புடைய உறவினரும் ஒருவகைக் காதலர். உண்மை நட்பாளர் ஒருவகைக் காதலர். காதலன் என்னும் சொல், "அறத்தின் காதலன்" (பாகவதம், 1, 6, 1) என்று மகனையும், "தீயின் காதலன்" (கந்தபுராணம், திருவவதாரப் படலம், 10) என்று நண்பனையுங் குறித்தது. "கைம்மகவோடுங் காதலவரொடும்" (பரிபாடல், 15, 47) என்னுமிடத்து, காதலவர் என்னுஞ் சொல் சுற்றத்தாரைக் குறித்தது. ஆகவே, மணம் உறவு நட்பு ஆகிய மூவகைத் தொடர்பு பற்றி, மூவகைக் காதலர் உளர் என்பது தெளிவு.

காதற்கு வேண்டியவர் இருவர். அவருள் ஒருவரிடத்து மட்டுமே காதல் இருப்பினும் இருக்கலாம். அன்றி இருவரிடத்தும இருப்பினும் இருக்கலாம். இவற்றுள், முன்னது ஒருதலைக் காதலென்றும் பின்னது இருதலைக் காதலென்றும் அழைக்கப்பெறும். கோவலன் கண்ணகி ஆகிய இருவருள், கண்ணகிக்குக் காதலிருந்தது; கோவலனுக்கில்லை. 'பெற்றமனம் பித்து, பிள்ளைமனங் கல்' என்னும் பழமொழி, பொதுவாகப் பெற்றோர்க்குப் பிள்ளைகளிடத்துக் காதலிருப்பதையும், பிள்ளைகட்குப் பெற்றோ

ரிடத்து அஃதில்லாமையையும், தெரிவிக்கும். நட்பாளர் இருவருள் ஒருவர் மெய்யன்பராயும் இன்னொருவர் பொய்யன்பராயுமிருப்பதை, நாம் அடிக்கடி காண்கின்றோம். இவ்வொருதலைக்காதல் பெரும்பாலும் துன்பத்திற்கே ஏதுவாகும்.

மணத்தொடர்பு பற்றிய ஒருதலைக்காதல், ஐந்திணை யொருதலைக் காதல் என்றும் பெருந்திணை யொருதலைக் காதல் என்றும், இருவகைப்படும். கோவலனும் கண்ணகியும் போலக் கூடிவாழ்வதற் கிசைந்தது ஐந்திணை யொருதலைக்காதல்; உதயகுமரன் மணிமேகலையைக் காதலித்தது போலவும், இரகுநாத சொக்கலிங்கநாயகரின் தேவி தாயுமானவரைக் காதலித்தது போலவும், இல்லறத்திற்கிசையாத ஒருவரை இன்னொருவர் காதலிப்பது, பெருந்திணை யொருதலைக்காதல். இவற்றுள், முன்னது இன்பமற்றதாயினும் நெறிப்பட்டதாகும். பின்னது நெறி திறம்பியதோடு மன வேதனையையும் சிலவிடத்து உயிர்க் கேட்டையும் விளைப்பதாகும்.

இருதலைக் காதல் இவ்வுலகத்திலிசையின், மேற்கூறிய மூவகைக் காதலரும் பேரின்பந் துய்ப்பவராவர். இங்ஙனம் வாய்ப்பது மிகவும் அருமை. பூதப் பாண்டியனும் அவன் தேவியும் மணக்காதலுக்கும், பிசிராந்தையாரும் அவர் குடும்பத்தாரும் உறவுக் காதலுக்கும், சீநக்கனும் பொய்யாமொழியாரும் நட்புக் காதலுக்கும், சிறந்த எடுத்துக் காட்டாவர்.

காதலுக்குக் காட்சியும் கலந்துறவாடலும் வேண்டியதில்லை.

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும்"

என்றார் திருவள்ளுவர். கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும், ஒருவரையொருவர் கண்டறியாதவராய் இருநூறுகல் தொலைவிலிருந்து கொண்டே, ஒருவரையொருவர் காதலித்தனர். இங்ஙனமே, மணக்காதலரும்

உறவுக்காதலரும், ஒருவரையொருவர் காணுமலே காதல் நிகழ்த்தமுடியும். கலிப்பகையாரும் திலகவதியாரும் போலக் கரணத்திற்கு முன்னரும் காதலிக்கும் மணக் காதலரும், பிறப்பினின்றே காணுமல் நெடுந்தொலைவி லிருந்துகொண்டு ஒருவரையொருவர் காதலிக்கும் உறவுக் காதலரும், என்றுமுளர்.

காதல், ஏனை இம்மையின்பங்க ளெல்லாவற்றினும் இனியதோர் உணர்ச்சியைத் தருதலானும், மனத்தை முற்றுங் கவ்விக் கொள்ளுதலானும், காதலால் இணைக்கப் பட்ட இருவர் ஒருவரையொருவர் நினைக்காமல் இமைப் பொழுதுங் கழித்தல் அரிது.

"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காதலுக் குண்டு."

காதலர், ஒருயிரும் ஈருடலும் என்று சொல்லுமாறு ஒத்த உணர்ச்சியும் ஒன்றிய பிணைப்பு முடையவராதலின், அவர் இருகிழமைப் பொருள்களையும் ஒருவர்க்கொருவர் உவந்தீவர் என்று சொல்லவே வேண்டுவதில்லை.

காதலர் உயிர்வாழும்போது, ஒருவரையொருவர் துன்பத்தினின்று மீட்டற்கு உடம்பையுங் கொடுத்துதவு வது தலைசிறந்த பண்பாயினும்; ஒருவர் இறந்தபின் அவ ருடைய பிரிவாற்றாது இன்னொருவரும் உடனிறத்தல், அத்துணைச் சிறந்ததன்று. கண்ணகி போன்றார், தமக்கு மகப்பேறின்மையானும், தாம் செய்யக்கூடிய பொதுநலத் தொண்டின்மையானும், தம் மெல்லியற் பெண்பான்மை யானும், தம கணவரிறந்தபின் பிரிவாற்றாமைபற்றி உயிர் துறத்தல் ஒப்புக்கொள்ளக் கூடியதாயினும், ஆடவரும் பொறுப்புள்ளவரும் தம் காதலரிறந்தபின் அங்ஙனஞ் செய்தல் இக்காலத்துப் போற்றத்தக்கதன்று. காதலர் உடனிறப்பால், இறந்தவர் மீளாமையானும், சிலவிடத்துப் பொறுப்பும் பொதுநலத் தொண்டும் தவறுதலானும், ஒருவர்க்கோ பலர்க்கோ உதவி செய்யக்கூடியவரெல்லாம் எக்காரணத்தையிட்டும் தற்கொலை செய்யாதிருத்தல், தப்

பாது மேற்கொள்ளக்கூடிய தலையாய கடமையாம். பிசிராந்தையாரும் பொய்யாமொழிப் புலவரும், இன்னுங் கொஞ்சக்காலமிருந்து தம் குடும்பத்திற்கும் தமிழுலகிற்கும் உதவியிருக்கலாம். மகமதுக்கான் இறந்தது கண்டு செயசிங்கும் இறந்ததினால், வெற்றி தோல்வியாகமாறிச் செஞ்சியரசழிந்ததுடன், அரசியுட்பட அரண்மனை மகளிர் பலர் வேதனைப்பட்டு இறக்கவும் நேர்ந்தது. கலிப்பகையார் இறந்தது கேட்டவுடன் திலகவதியாரும் இறந்திருப்பின், திருநாவுக்கரசர் வாழ்ந்திருப்பரோ? அவர் தேவாரமுந் தோன்றியிருக்குமோ? கபிலர் கூடக்கொஞ்சக்காலம் உயிர் வாழ்ந்திருப்பின், பாரி மகளிர்க்கு எத்துணை ஆறுதலாயிருந்திருக்கும்?

ஆதலால், காதலர் உடனிறத்தல் வேண்டுமென்பது, பண்டைக்காலத்து உயரிய கொள்கையாய்ப் போற்றப்பட்டிருந்திருப்பினும், இக்காலத்திற்கேற்காதலின்; ஒருவர் தம் காதலர் பிரிவால் நேரும் எத்துணைத் துயரையும் பொறுத்துக்கொண்டு, தம் கடமையை நிறைவேற்றுவதே தலையாய செயலாம்.

## பயிற்சி 1.

பின்வருபவற்றை ஒவ்வொரு பாகியாகப் பெருக்கி வரைக:—

(1) மரம் நட்டவன் அதன் கனியை நுகர்வது அரிது.

(2) 'தண்ணீரும் மூன்று பிழை பொறுக்கும்.'

(3) 'தன் குற்றந் தனக்குத் தோன்றாது.'

(4) மரம் நல்லதென்பதும் கெட்டதென்பதும் அதனதன் கனியால் அறியப்படும்.

(5) பெற்றோரன்பும் பிள்ளைகளைக் கொல்லும்.

(6) 'காக்கைக்குந் தன் குஞ்சு பொன்குஞ்சு.'

(7) காகங்கள் விதைப்பதுமில்லை; அறுப்பதுமில்லை. ஆயினும், அவற்றையுங் கடவுள் காத்துவருகின்றார்.

(8) 'தன்னை யறிந்தவன் தலைவனை யறிவான்.'

(9) ஆளப்படுகிறவனே ஆளத்தெரிந்தவன்.

(10) வாரியிறைத்தும் வளவனுகிறதுமுண்டு; இறுகப்பிடித்தும் ஏழையாகிறதுமுண்டு.

(11) "தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்; தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்."

(12) பொய்சொல்லி வாழ்ந்தவரும் உளர்; மெய்சொல்லித் தாழ்ந்தவரும் உளர்.

(13) "கல்லாதபேர்களே நல்லவர்கள், நல்லவர்கள்."

(14) "எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாகினு மாகும்."

(15) "மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே."

(16) "—கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்."

(17) "இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது."

(18) "ஒன்றே செய்யவும் வேண்டும், ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும், நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும், இன்றும்
இன்னே செய்யவும் வேண்டும்."

(19) "மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை இகழ்தல் அதனினு மிலமே."

(20) "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அலன் பிறரும
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன் றவன்கை வண்மையே."

## பயிற்சி 2.

பின்வரும் பாகிகளை ஒவ்வொரு கட்டுரையாகப் பெருக்கி வரைக:—

(1) உழவுத்தொழில் ஒரு நாட்டு முன்னேற்றத்திற்கு அடிப்படையானது. உழவர்க்குரிய வசதிகளையெல்லாம் அர

சியலார் செய்துவைத்தல் வேண்டும். பெருவாரியாக உணவுப்பொருள் விளைத்தற்குரிய வழிவகைகளெல்லாம் கையாளப்பெறுதல் வேண்டும். அறிவியல் துறையில் கண்டுபிடிக்கப்பட்ட புதுமைகளை, இயன்ற அளவு உழவிற்கும் பயன்படுத்தல்வேண்டும். உழவுத் தொழிலைக் கவனியாத நாடு பிறநாடுகளைச் சார்ந்தேயிருக்கும்.

(2) மக்கட்பேறு ஒரு காலத்தில் மாபெரும் பாக்கியமாகக் கருதப்பட்டது. பிள்ளைப்பேற்றைப் பெருக்குவதற்கான வழிகளெல்லாம் அன்று கையாளப்பட்டன. இன்று பிள்ளை பெறாதவரே பெரும் பாக்கியசாலிகள். பிறப்புத் தடை ஏற்படுத்தும் காலமும் வந்துள்ளது. காலத்திற் கேற்பக் கருத்துக்கள் எங்ஙனம் மாறுபடுகின்றன!

(3) உலகத்திற் பல அரசும் மக்கட் பெருக்கமும் உள்ளவரை போரும் பஞ்சமும் நீங்கா. உலக முழுவதும் ஒரு குடும்பம் என்னும் உணர்ச்சியைப் பரப்புதல்வேண்டும். ஒவ்வொரு நாட்டிலும் பிறநாட்டு மக்கள் குடியேறிக் கலப்பினம் அமைதல்வேண்டும். உலக முழுவதும் ஒரே ஆட்சிக்குட்படவேண்டும். மக்கட்பெருக்கம் தடுக்கப்பட வேண்டும். உலக விளைவுப் பொருள்களைப் பன்னாட்டு மக்களும் பகிர்ந்துகொள்ளல் வேண்டும். உலக முழுவதிற்கும் ஒரே பொதுமொழியும், ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரே சிறப்பு மொழியும் இருத்தல்வேண்டும். குல மத வரணச் சார்பற்ற கலப்பு மணங்கள் நடைபெறல் வேண்டும். இவற்றால் மண்ணுலகம் விண்ணுலகமாக மாறும்.

(4) செல்வம் திடுமென்று நீங்கிவிடலாம். உயிர் நண்பர் உயிர்ப்பகைவராக மாறலாம். பெற்ற தாய்தந்தையரும் பிள்ளைகளும் கைவிட்டுவிடலாம். இன்பத்திலும் துன்பத்திலும் ஒட்டிநின்று, இறந்தபின்னும் பற்றுவிடாதிருப்பது நாய் ஒன்றே.

(5) தன்னலம் பலதிறப்பட்டது. தனிப்பட்டவன் தன்னலம் ஒன்று. குடும்பத் தன்னலம் ஒன்று. குலத் தன்னலம் ஒன்று. இனத் தன்னலம் ஒன்று. நாட்டுத் தன்னலம் ஒன்று. மதத் தன்னலம் ஒன்று. இவை முறையே ஒன்றைவிட ஒன்று தீமை குறையினும், எல்லாம் தன்னலமே.

# 10. பொழிப்புரை வரைவு - (Paraphrasing)

**முன்னுரை**

ஒரு செய்யுளின் பொருளையெல்லாம் உரைநடையில் திரட்டிவரைவது, பொழிப்புரை வரைவாகும்.

அரிதுணர் பொருளதான உரைநடைப் பகுதியை விளக்கி வரைவதையும், ஆங்கில இலக்கணியர் பொழிப்புரை வரைவின்பாற் படுத்துவர். தமிழில் அதைத் தெளிநடைவரைவு அல்லது விளக்கநடை வரைவு என்னலாம்.

## ii பொழிப்புரை வரைவின் பயன்கள்

(1) ஒரு செய்யுளைக் கருத்தூன்றிப் படித்தல்.

(2) மறைந்தும் அரிதாகவுமுள்ள பொருளை அல்லது கருத்தை உணரப் பழகுதல்.

(3) உள்ளக் கருத்தைச் சொற்களால் வெளிப்படுத்துவதிற் பயிற்சிபெறுதல்.

(4) செய்யுட் பொருளை விளக்குந் திறம்பெறல்.

## iii சிறந்த பொழிப்புரையின் இயல்புகள்

(1) நடை பெயர்ப்பு:

ஒரு செய்யுளும் அதன் பொழிப்புரையும் ஒரே மொழிக்குரியவாயினும், செய்யுளும் உரைநடையும் வெவ்வேறு மொழிபோல் வேறுபட்டிருப்பதால், பொழிப்புரையானது மொழிபெயர்ப்பளவு முற்றும் நடைமாறுதல் வேண்டும். ஒரு மொழியினின்று இன்னொரு மொழியிற் பெயர்ப்பது மொழிபெயர்ப்பு; ஒரு நடையினின்று இன்னொரு நடையிற் பெயர்ப்பது நடைபெயர்ப்பு. மொழிபெயர்ப்பும் நடைபெயர்ப்பும் மொழிவகையில் வேறுபடினும், பெயர்ப்பளவில் ஒரு தன்மையவே.

(2) முற்றக்கூறல் :

பொழிப்புரை, தன் மூலத்திற் கூறப்பட்டுள்ள பொருள்களுள் ஒன்றையும் விடாது, முழுமையுங் கூறுதல் வேண்டும்.

ஆயினும், வேண்டாத சிறுபொருள்களை விட்டுவிடலாம்.

எ-டு. "பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன"

என்னும் அடியில், 'பழம்படு' என்னுந் தொடரை விட்டு விடலாம்.

(3) தொகுதியாய் நோக்கல் :

ஒரு செய்யுள் முழுவதையும் ஒன்றாகக்கொண்டு, அதன் பொருளெல்லாவற்றையும ஒருங்கு நோக்குதல் வேண்டும். ஒரு செய்யுளைப் பல பகுதியாகக்கொண்டு, அதைப் பகுதி பகுதியாகவோ அடியடியாகவோ தொடர் தொடராகவோ பிரித்துப் பொழிப்புரை வரைதல்கூடாது. ஒரு செய்யுளை முற்றும் நோக்கி அதன் பொருள் முழுவதையும் ஒருங்கே யுணர்ந்தாலல்லது, அதற்குப் பொழிப்புரை வரையத்தொடங்குதல் கூடாது.

(4) தனிநிறைவுடைமை :

பொழிப்புரை, தனிப்பட்ட உரைநடைப்பகுதியாகவும், தன்னில் தானே நிறைவுள்ளதாகவும், மூலத்தின் துணை சிறிதுமின்றி விளங்கக்கூடியதாகவும், இருத்தல் வேண்டும்.

மூலத்தை யறியாதவர், பொழிப்புரையை ஒரு தனி யிலக்கியப்பகுதியாகக் கொள்ளுமாறு, அது எளிய இனிய இலக்கிய நடையில் எழுதப்பெறுதல்வேண்டும்.

(5) ஒன்றும் சேர்க்காமை :

மூலத்திலுள்ளதைத் தவிர, வேறொன்றையும் பொழிப்புரையிற் சேர்த்துக்கூறுதல் தகாது.

ஆயின், பொருளை விளக்குதற்பொருட்டு, ஓரிரு சொற்களையோ தொடர்களையோ சேர்த்துக்கொள்ளலாம்.

எ - டு. "பீலிபெய் சாகாடும் அச்சிறும்"

என்பதில், 'பீலி' (மயில்தோகை) என்னும் பெயர்க்குமுன், 'மிக நொய்ய' (இலேசான) என்னும் பெயரெச்சத் தொடர் மொழியைச் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

"எந்நாளும்—காப்பாரே வேளாளர் காண்" என்னும் பகுதிக்குமுன், 'உணவுப் பொருள்கள் ஏராளமாய் விளைப்பதாலும்,' 'இயல்பாக வேளாண்மையுடைமையாலும்,' என்னும் தொடர்களைச் சேர்த்துக்கொள்ளல்வேண்டும்.

"நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்"

என்னுங் குறளுக்குப்பின், 'அதுபோல, ஏற்கெனவே தம் வலிய பகைவரொடு தம திறமைக்கு மிஞ்சிப் பொருதவர், அதன் மேலும் பொரத்துணியின், அழிவையடைவர்,' என்னும் பகுதியைச் சேர்த்துக்கொள்ளல்வேண்டும்.

பிறிது மொழிதலணியாயமைந்த செய்யுட்கள் அல்லது பகுதிகளெல்லாம், (மூலத்திற் கூறப்படாத) உவமேயத்தொடு சேர்ந்தாலன்றிப் பொருள் நிரம்பாவாதலின், அவற்றிற்கு வரையும பொழிப்புரைகளிலெல்லாம், மூலத்திலில்லாத உவமேயத்தையுஞ் சேர்த்துக்கூறுதல் இன்றியமையாததென்பது, அவற்றின் அணிப்பெயராலேயே பெறப்படும்.

## iv பொழிப்புரையிலமையாத செய்யுளியல்புகள்

உரைநடைக்கில்லாத பல சிறப்பியல்புகள் செய்யுட்கிருத்தலின், எத்துணைச் சிறந்த புலவர் பொழிப்புரை வரையினும், மூலத்தின் சிறப்பு முழுவதையும் அதில் அமைத்துக்காட்டல் முடியாத காரியமாகும். செய்யுட் செய்த புலவனே அதன் சிறப்பியல்பனைத்தையும் உரை நடையில் அமைத்துக்காட்ட முடியாதெனின், பிறருக்கு அது முடியாமையைப்பற்றிச் சொல்லவேண்டுவதேயில்லை.

ஓசைக்கும் பொருளுக்குமுள்ள ஒன்றிய இணைப்பும், கேட்டாரைப் பிணிக்குந்தகைய மந்திரவாற்றலும், செய்யுட்கேயுரிய இதனால், உரைநடையிற் காட்டக்கூடிய உணர்ச்சி செய்யுளிற் பன்மடங்கு வலியுறுகின்றது.

ஓசை சந்தம் வண்ணம் என்னும் இசை வரம்புகளும், சீர் அடி பா முதலிய உறுப்பு வரம்புகளும, மோனை எதுகை முதலிய தொடைநயங்களும், மடக்கு பிரிமொழிச் சிலேடை முதலிய சொல்லணிகளும், செய்யுள் மரபான சில சொல்வழக்குகளும், உரைநடையில் அல்லது பொழிப்புரையில் அமையா.

செய்யுள் போன்றே மோனை யெதுகை யமைத்து வரைந்த சில உரைநடை நூல்களும் உளவேனும், அவை செய்யுளைப் பின்பற்றினவேயன்றி உண்மையான உரைநடையாகா.

'வடசொற்களை வரம்பின்றி வழங்குவது வழுவாகும்' என்பது போலும், 'எங்கனூர் பெங்கனூர்' என்பது போலும், ஒரோவிடத்து இயற்கையாய் அமையும் மோனை யெதுகைகள் உரைநடையில் விலக்கப்படா.

## v பொழிப்புரையில் மாற்றப்படவேண்டிய செய்யுளியல்புகள்

### (1) சொற்களும் சொல் வடிவங்களும் :

சில உலகவழக்குச் சொற்கள் நல்லிசைப் புலவர் செய்யுளில் இடம்பெறுவதேயில்லை. அவற்றுக்குப் பதிலாக வேறு சொற்களே வழங்கும். அச்செய்யுட் சொற்களுக்குப் பதிலாக உலகவழக்குச் சொற்களையே, பொழிப்புரையில் அமைத்தல்வேண்டும.

| எ - டு. | செய்யுட் சொல் | உலகவழக்குச் சொல் |
|---|---|---|
| | அணல் | தாடி |
| | குறும்புள் (குறும்பூழ்) | காடை |
| | சிவல் | கதுவாலி (கவுதாரி) |
| | நாவாய் | கப்பல் |

சில செய்யுட் சொற்கள் சிறப்புப் பொருள் குறிப்பன. அவற்றுக்கு நேரான உலகவழக்குச் சொற்கள் இல்லாவிடினும், அவற்றைப் பல சொற்களால் விளக்கி யெழுதலாம்.

எ. டு. வெந்தை - வெந்த கறி
யாணர் - புதுவருவாய்
பறந்தலை - போர்க்களம், பாழ்பட்டவூர், பாலைநிலத்தூர்.

சில சிறப்புச்சொற்கள் நீக்கப்படாமலும் இருக்கலாம்.

எ. டு. அகவுதல் (மயில் கூவுதல்)
பிளிறுதல் (யானை கத்துதல்)

சில சொற்கள் ஒரு காலத்தில் இருவகை வழக்கிற்கும் பொதுவேனும், இன்று உலகவழக்கற்றுப் போய் அவற்றுக்குப் பதிலாக வட சொற்கள் வழங்குகின்றன. பொருளறிந்த மேல்வகுப்பு மாணவர் தென்சொற்களையும், பொருளறியாக் கீழ்வகுப்பு மாணவர் வடசொற்களையும், வழங்கலாம்.

| | தென்சொல் | வடசொல் |
|---|---|---|
| எ. டு. | கூலம் | தானியம் |
| | பொருநை | தாம்பிரபரணி |

சில உலகவழக்குச் சொற்கள் செய்யுளிலும் வழங்குமேனும், சிறிது வடிவுதிரிந்தே வழங்கும். அவற்றை உலக வழக்குவடிவில் மாற்றிக் கொள்ளவேண்டும்.

| | செய்யுள் வழக்கு வடிவம் | உலக வழக்கு வடிவம் |
|---|---|---|
| எ. டு. | என்ப | என்பர், என்பார், என்பார்கள் |
| | கொடுபோ | கொண்டுபோ |
| | செய்யல் | செய்யாதே |
| | நின் | உன் |
| | போந்து | போய் |
| | மண்டை | மொந்தை |
| | மலங்கு | விலாங்கு |
| | யாறு | ஆறு |
| | வேட்டம் | வேட்டை |

புலவர் வகுப்பு மாணவராயின், செய்யுள் வழக்கு வடிவத்தையும் ஆளலாம்.

## (2) சொன்முறையும் தொடர்முறையும்

சொற்களும் சொற்றொடர்களும், செய்யுளில் முன் பின்னாக முறைமாறி யிருக்கலாம். பொழிப்புரையில் அவற்றை உரைநடை முறைப்படுத்திக் கொள்ளல் வேண்டும்.

எ. டு. "கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்"

என்பது, 'சுரிகையைக் கட்டி வாயைக் கடித்துக்கொண்டு' என்று மாற்றப்படல் வேண்டும்.

"சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப"

என்பது,

"சுரைமிதப்ப அம்மியாழ வரையனைய
யானைக்குநிலை முயற்கு நீத்தென்ப"

என்று மாற்றப்படல் வேண்டும்.

"தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து
நெறிமுன்னி முயலா தாரே"

என்பதின், ஈற்றடி முதலடியாயும், மூன்றாமடி இரண்டா மடியாயும், இரண்டாமடி மூன்றாமடியாயும், முதலடி ஈற் றடியாயும், மாற்றப்படல் வேண்டும்.

### (3) அணிநடை

அணியானது செய்யுட்குச் சிறப்பாதலால், பல கூற்றுக்கள் செய்யுளில் அணிநடையாய் அமைந்திருக்கும். அவற்றை இயல்பான முறையில் வரைதல் வேண்டும்.

எ டு. "கரங்கள்மீச் சுமந்து செல்லும்"

என்பது, 'கைகளைத் தலைமேற் குவித்துச் செல்லும்' என்று வரையப்பெறல் வேண்டும்.

சில உருவகங்களை அவற்றின் பொருளைத் தெளிவுபடுத்தற் பொருட்டு, உவமையாக மாற்றிக் கொள்ளலாம்.

எ. டு. "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா — எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நான்முடியு மாறு"

என்பது ஓர் உருவகம். இதை,

இலக்கண இலக்கிய நூலும் இழை நூல் போன்றதே. ஒரு நூலாசிரியன நூல் நூற்கும பெண்டு போன்றவன். நூல்நூற்கும பெண்டு, கதிரையுங் கையையுங் கருவியாகக் கொண்டு, பஞ்சிலிருந்து இழைபிழுத்து நூல்நூற்பது போல; நூலாசிரியன், மதியையும வாயையுங் கருவியாகக் கொண்டு சொற்களாற் சூததிரம அல்லது செய்யுள செய்து நூலியறறுகின்றான் ;

என உவமையாக மாற்றிக் கொள்ளலாம்.

## vi பொழிப்புரை வரையும் முறை

(1) பொழிப்புரை வரையுமுன், மூலப்பகுதி முழுவதையுங் கருத்தூன்றிப் படித்தல் வேண்டும. முதன்முறை விளங்கா விட்டால், மீண்டுமொருமுறை அல்லது பலமுறை படித்து, முதலாவது அதன் பருபபொருள் முழுவதையும் அறிந்து கொள்ளல் வேண்டும.

(2) பருப்பொருள் அறிந்தபின், நுண்பொருளைக் கூர்ந்து நோக்கி யுணர்தல் வேண்டும் பருப்பொருளிடையிட்டுள்ள சிறு செய்திகளும், அடைமொழித் தொடர்ப்

பொருளும், அருஞ் சொற்பொருளும், அணிப் பொருளும், நுண்பொருள்களாம். இவற்றையெல்லாம் உணர்ந்தபின் மூலத்தின் பொருள்முழுதுங் கோவைபட விளங்கித் தோன்றும். வீட்டுப் பயிற்சியாயின், அருஞ்சொற் பொருளையெல்லாம் அகராதியைப் பார்த்தறிந்து கொள்ளல் வேண்டும். வகுப்புப் பயிற்சியிலும் தேர்வு வரையிலும், முன்னறியாத அருஞ் சொற்கள் எவையேனு மிருப்பின், இடம் நோக்கியும் முன்பின் வந்துள்ள சொற்களைக் கொண்டும், அவற்றின் பொருளை ஊகித்துக் கொள்ளல் வேண்டும்.

(3) மூலத்தின் பொருள் முற்றும் உணர்ந்தபின், முற்கூறிய முறையைக் கையாண்டு, தெளிவான நடையில் அளவான வாக்கியங்களை யமைத்துப் பொழிப்புரை வரைதல் வேண்டும். பொருள் கெடாதவகையில், ஒரு நெடு வாக்கியத்தைப் பல குறுவாக்கியங்களாகச் சிதைத்தும்; தெளிவுகெடாத வகையில், பல குறுவாக்கியங்களை ஒரு நெடுவாக்கியமாகப் புணர்த்தும் வரையலாம்,

(4) நடைபெயர்ப்பு பொழிப்புரையின் சிறப்பியல்களுள் ஒன்றென்பதைத் தவறாகவுணர்ந்து, செய்யுளிலுள்ள சொற்களையெல்லாம் பொழிப்புரையில் மாற்றிவிடுதல் கூடாது. எக்காலத்தும் செய்யுட்கே சிறப்பாகவுள்ள சொற்களையும் சொல்வடிவுகளையும் மட்டுமே அகத்திய மாய் மாறறுதல் வேணடும் பொருள தெளிவான சொற்களை எக்காரணத்தையிட்டும் மாற்றுதல் கூடாது. அருஞ்சொற்களையும் கீழ்வகுப்பு மாணவரே பொதுவாய் மாற்றற்குரியர். மேல்வகுப்பு மாணவர், தத்தம் அறிவிற் குத்தக, சில பல அருஞ்சொற்களை மாறாமலே வைத்துக் கொள்ளலாம. சொற்களை மாற்றவேண்டும் என்பதற் காகவே, நிலா என்பதற்குத் திங்கள் என்னும் தென் சொல்லையும, விழா என்பதற்கு உற்சவம் என்னும வட சொல்லையும், (பதிலாக) வழங்குதல் கூடாது.

(5) பொழிப்புரைக்குப் புறம்பாக, குறிப்புரை வடிவிலாயினும் விளக்கவுரை வடிவிலாயினும், எதுவுமிருத்தல்

கூடாது. விளக்கமெல்லாம் பொழிப்புரையின் கூறாகவே யமைந்திருத்தல் வேண்டும். அல்லாக்கால், சரியான பொழிப்புரையாகாது. ஒரு வாக்கியம், குறிப்புரை அல்லது விளக்கவுரை வேண்டுமாறு தெளிவற்றிருப்பின், அதை மீண்டும் திருத்தி வரைதல் வேண்டும்.

(6) நேரல் கூற்றைவிட நேர்கூற்றே தமிழுக்கியல் பாதலின், செய்யுளிலுள்ள நேர்கூற்றுக்களை யெல்லாம் அங்ஙனமே பொழிப்புரையில் அமைத்துக்கொள்வது நல்லது.

(7) ஒரே முறையில் திருத்தமாக எழுதவியலாத மாணவரெல்லாம், முதன் முறையில் கரட்டு வரைவாக (Rough draft) வரைந்துகொண்டு, பின்பு செவ்வைப்படி (Fair copy) எடுத்துக் கொள்ளலாம்.

## போலிகை

### செய்யுள்

### நாரைவிடு தூது

"நாராய்! நாராய்! செங்கால் நாராய்!
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்!
நீயுநின் மனைவியும்
தென்றிசைக் குமரி யாடி வடதிசைக்
காவிரி யாடி யருவி ராயினெம்
சத்தி முற்றத்து வாவியுள் தங்கி
நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லிப்
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டெங்
கோமான் வழுதி கூடல் மன்றத்து
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
கால்து கொண்டு மேலது தழீஇ
அலகுதிர்ந் தன்ன பல்லின ளாகிப்
பேழையுள் ளிருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே."

(சத்திமுற்றப் புலவர்)

## பொழிப்புரை

ஏ நாரையே! பனங்கிழங்கை இரண்டாய்ப் பிளந்து வைத்தாற் போன்றதும், பவளம்போற் சிவந்ததுமான, கூரிய அலகையுடைய செங்கால் நாரையே! நீயும் உன் பெட்டையும், தெற்கேயுள்ள குமரியாற்றில் இரைதேடிய பின் வடகயேயுள்ள காவிரியாற்றிற்குச் செல்வீர்களாயின்; வழியிலிருக்கும் எம் ஊராகிய சத்திமுற்றத்திலுள்ள ஏரியில் ஒருபொழுது தங்கி, அவ்வூரில், மழையில் நனைந்த சுவரையுடைய ஒரு கூரைவீட்டில், பல்லியொலிப்பதைச் சகுனமாகக் கவனித்துக்கொண்டிருக்கும் என் மனைவியைக் கண்டு; எம் பாண்டியவரசனது மதுரைமாநகரில், ஓர் அம்பலத்தில், போர்த்துக்கொள்ள ஒன்றுமில்லாமல் வாடையில் நடுங்கி, கையைக்கொண்டு உடம்பைப் பொத்தி, காலை நெஞ்சில்வைத்து முடக்கிக்கொண்டு, அலகு உதிர்ந்து விடுவதுபோற் பல் பறையடிக்க, பெட்டிக்குள்ளிருக்கும் பாம்புபோல் குறுமூச்சு விட்டுக்கொண்டிருக்கும் உன் ஏழைக் கணவனைப் பார்த்தோம் என்று சொல்லுங்களேன்!

## பயிற்சி

பின்வருபவற்றிற்குப் பொழிப்புரை வரைக:—

### (1) சாமிநாதையர் தமிழ்த்தொண்டு

ஊட்டில் லாமல் உள்ளது நோய
இறந்த குழவியை எண்ணி யழல்போல்
ஆடிப் பெருக்கில் அளவறுந் தமிழ்நூல்
ஓடிச் சென்றதை உணராத் தமிழர்
ஏரண முதலிய எண்ணறுங் கலைநூல்
வாரணங் கொண்டதை வழிவழி சொல்லிக்
கொன்னே புலம்புதல் என்னே மடமை!
கொலம்பசு முதலியோர் கொடுங்கட லோடி
நிலம்பல கண்டில ராயினும் நீங்காப்
பின்னோ அவற்றைப் பின்னே காண்பர்
மன்பே ராசான் தென்கலைச் செல்வன்
பண்டா ரகனும் பைந்தமிழ்ப் பெரியோன்
சாமிநா தையன் சார்ந்தில னாயின்

இற்றைத் தொன்னூல் என்னா யிருக்குமோ !
தமிழுரை யணைக்குந் தமிழ்ப்பெரும் பித்தால்
விடுமுறை யெல்லாம் விடுமுறை யின்றி
ஊர்தொறும் மனைதொறும் ஓயா தேகித்
தாளாய் வேண்டியும் தக்கார் துணையொடும்
பற்பல வகைதிற் பாழ்படக் கிடந்த
தொன்னூ லெல்லாம் பொன்போற் சேர்த்து
விறகுத் தலையன் முறையிற் சுமந்து
வீட்டை யடைந்ததும் ஏட்டைப் பிரித்துச்
சிதலரித் தனவும் சிதர்ந்து போனவும்
மங்கி யிருந்தவும் மாறிக் கிடந்தவும்
பூச்சி துளைத்தவும் புலனா காதவும்
பொறையும் பொறுமையும் புரிவிற் பொலியக்
கங்குல் பகலாய்க் கண்ணொளி மழுங்கப்
படித்துப் படிகள் எடுத்துத் திருத்தி
அருஞ்சொற் பொருளும ஆராய்ச்சிக் குறிப்பும்
முதற்குறிப் புரையுடன முறையாய் அச்சிட்
டுதவி யிலனேல் இதுகால நாமும்
பத்துப் பாட்டைப் பார்த்த லொண்ணுமோ ?
எட்டுத் தொகையும் எய்தல் இயலுமோ ?
சிந்தா மணியொடு சிலம்பு மேகலை
சிந்தையி லேனுஞ் சேர்த லாகுமோ ?
பிறபல நூலும பெறுதல் கூடுமோ ?
இத்தகை யோனை அத்தக வினைய
ஊர்தொறும் உடலள வொண்பொற் சிலையும்
உள்ளந் தோறும் உயிருடைச் சிலையும்
நிறுவி யவன்வழி நிற்றல்
தருவதே யன்றோ தமிழகத் தோரே !

## (2) யாதுமூரே யாவருங் கேளிர் !

"யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும புதுவ தன்றே வாழ்தல்
வினிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவி
னின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்

காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே."

(புறம். 192.)

## 11. செய்யுட்கதையை உரைநடையில் வரைதல்- (Reproduction of a Story Poem.)

### முன்னுரை குறிப்புக்கள்

செய்யுட் கதையை உரைநடையில் வரைதலும், பொழிப்புரை வரைவு போன்றதே. ஆகையால், அதற்குக் கூறியவற்றை இதற்குங் கொள்க. ஆனால், உரைநடைக் கதை ஒரு செய்யுளின் பொழிப்புரையாகவோ நடை பெயர்ப்பாகவோ அமையாமலும், ஒரு செய்யுளிலிருந்து வரையப்பெற்றதென்று தோன்றாமலும், முதன்முறையி லேயே உரைநடையிற் கூறப்பெற்றதுபோல் இயற்கையா யிருத்தல்வேண்டும்.

செய்யுளில் இடம் நிறைக்க வந்துள்ள சிறு வரணனை களையும், புலவன் குறிப்புக்களையும், உரைநடைக்கதையில் விட்டுவிடலாம் ஆனால், கதை முடிவில், அதன் படிப் பனை அகத்தியமாய்க் குறிக்கப்படுதல்வேண்டும். ஒவ் வொரு கதையின் நோக்கமும் ஒரு படிப்பனையை உணர்த் துவதே. படிப்பனை ஓர் உண்மையாகவோ ஒழுக்கவிதியா கவோ இருக்கும். அதுவே கதையின் உயர்நாடியான பகுதியாகும்.

### போலிகை

### நன்றியுள்ள சேவகன்

#### செய்யுட் கதை

(1) தரையுலகில் இருகண்டம் தழுவுபே ரிசியாவில்
உரைபலநற் செல்வமெலாம் ஒருங்குடைய நற்பேற்றுத்
துரையொருவன் ஜங்காதத் தொலைவிலுள்ள உறவினரைக்
கரையறுமெய்க் காதலினால் கண்டுவரக் கருதினனால்.

(2) நாற்கலிமா வையமதில் நாயகன்தன் குடும்பமுடன்
ஏற்கமிக வசதியாய் ஏறியிருந் தமர்ந்ததற்பின்
கோற்கையனாய்ச் சேவகனுங் குதிரைகளை வியங்கொண்டான்
நூற்படுபேர் நளனென்று நோக்கியவர் வியப்புறவே.

(3) நாடிறந்து காடுதனை நண்ணியபின் ஓநாய்கள்
ஓடிவந்து நெருங்கியதும ஒருகுதிரை யவிழ்த்துவிட்டுச்
சாடியதைக் கொன்றவையும் சதைமுழுதுந் தின்னுமுனம்
கூடியதோர் நெடுந்தூரங் கொடுவுய்த்தான் சேவகனும்.

(4) தின்றவுடன் ஓநாய்கள் திரும்பவும்வந் ததுகண்டு
பின்னுமொரு குதிரையினைப் பிணியவிழ்தது விட்டவுடன்
என்றுமிலா வேகத்தில் இயக்கிவிட்டான் சேவகன்தான்
அன்றவனின் அகநிலையை ஆண்டவனே அறிந்தவனும்.

(5) பேயுற்ற கொடுமையொடும் பெயராத யானைத்தீ
நோயுற்ற பசியினொடும நொடியில்மீண் டோநாய்கள்
ஏயுற்ற கடிதில்வந் தெய்தியதைக் கண்டுமனந்
தேயுற்ற சேவகனும் திரும்பவுமொன் றவிழ்த்துவிட்டான்.

(6) விட்டவுடன் வையத்தின் வேகத்தை யாரறிவார்
பட்டறிந்த நிகழ்ச்சிகளின் பயனாகச் சேவகனின்
மட்டறியா வேகமுள மனமேபூண் டுய்த்திடினும்
சட்டமுடன் ஓநாய்கள் சார்ந்தனநா லாமுறையும்.

(7) செலவரிய கடறுமிகச் சென்றுவிட்ட நிலைமையதும்
பலவுயிருக் கோருயிரே படுவதுநன் றெனுநெறியும்
தலைவனது நன்றியையும் தகவெண்ணிச் சேவகனே
விலகருமோ நாய்கட்கு விருந்தானான் விரைகவென்றே.

(8) சேவகனை ஓநாய்கள் தின்றிடுமுன் ஒருமாவின்
தாவரிய கான்கடந்து தலைவனொடும் பிறருய்ந்தார்
ஏவினவை செய்துணைவிற் கீடுசெய்தும் தலைவருக்கே
ஆவியதும் அளித்திடுவோர் அரியவுயிர்க் கொடையரம்மா!

### உரைநடைக் கதை

ஒருகாலத்தில் ரசியநாட்டில் ஒரு பெருஞ்செல்வர் இருந்தார். அவர் ஒருமுறை மிகததொலைவிலுள்ள தம் நெருங்கிய உறவினரைக கண்டுவர விரும்பினார். அதனால் ஒருநாள் தம் குடும்பத்தோடும சேவகனோடும், நான்கு குதிரை பூட்டிய ஒரு வண்டியிலேறிப் புறப்பட்டார்.

சேவகன் வண்டியோட்டுவதில் தேர்ந்தவனுதலால், வேக மாகவும் திறமையாகவும் ஓட்டினன்.

வண்டி கொஞ்சத்தூரம் நாட்டுவழியாகச் சென்றபின் மக்கள் வழங்காத காட்டையடைந்தது. காட்டிலுள்ள ஓநாய்கள் வண்டியைக் கண்டதும், வேகமாக ஓடிவந்தன. சேவகன் கூர்ந்த அறிவுள்ளவனுதலால் சற்றுங் காலந் தாழ்த்தால் ஓநாய்கள் நெருங்கிவந்து வண்டியைத் தடுத்து ஆட்கள்மேற் பாயுமெனவறிந்து, சுருக்காய் ஒரு குதிரையை அவிழ்த்து விட்டுவிட்டு, வண்டியை மிக வேகமாய் ஓட்டினன். ஓநாய்கள் அவிழ்த்துவிட்ட குதிரையைத் துரத்திப் பிடித்துக் கொன்று, அதன் சதையையெல்லாம் விரைவாய்க் கடித்துத் தின்றுகொண்டிருந்தன. அதற்குள் சேவகன் வண்டியை ஒரு காதத்தொலைவு கொண்டுபோய் விட்டான்.

ஓநாய்கள் திரும்பவும் தொடருமுன் வண்டியை எட்டாக்கைக்குள் கொண்டுபோய் விடலாமென்று எண்ணிக் கொண்டிருந்த சேவகன் திகைக்கும்படி, அவை மீண்டும் ஓடிவந்தன. சேவகன் சிறிதும் தாழ்க்காமல் திரும்பவும் ஒரு குதிரையை அவிழ்த்துவிட்டான். அதை அவை துரத்திக் கொண்டிருந்தன. நிலைமை மிக அஞ்சத்தக்கதா யிருப்பதைச் சேவகன் உணர்ந்து, தன் திறமையெல்லாங்காட்டி, முன்னிலும் வேகமாய் ஓடும்படி, குதிரைகளைத் தூண்டி விட்டான். அவை காற்றாய்ப் பறந்தன.

ஆயினும், அவ் ஓநாய்கள், எவ்வளவு தின்றும் பசியாறாத யானைத்தீயென்னும் நோய் கொண்ட பேய்கள் போல, சிறிதுநேரத்திற்குள் அக்குதிரையைத் தின்றுவிட்டு மீண்டும் வந்து விட்டன. சேவகன் பின்னுமொரு குதிரையை அவிழ்த்து விட்டுவிட்டு, ஒரு குதிரையைக் கொண்டே தன்னாலியன்ற அளவு வண்டியை வேகமாய் ஓட்டினன். வண்டிக்குள் ளிருப்பவர்க்கு மிகவும் அச்சமுண்டாயிற்று. ஆனால், சேவகன் சற்று மனந்தளர்ந்தும் நம்பிக்கையை இழக்கவில்லை.

நாடு நெருங்கி வந்தது. ஆனாலும், ஓநாய்கள் விடவில்லை. நாலாம் முறையும் அவை வந்துவிட்டன. குதிரை ஒன்றுதான் உளது. அதை அவிழ்த்து விடமுடியாது. ஆதலால், வண்டியை வேகமாய் விடும்படி துரைக்குச் சொல்லிவிட்டு, சேவகனே திடுமென்று ஓநாய்களிடைக் குதித்து அவற்றுக்கு இரையானான். ஓநாய்கள் அவனைத் தின்று முடிக்குமுன், வண்டி காட்டைக் கடந்து விட்டது. ஓநாய்கள் திரும்ப வரவேயில்லை. துரையும் அவர் மனைவி மக்களும் சேதமில்லாமல் ஊர்போய்ச் சேர்ந்தனர். ஆயினும், நன்றியறிவுள்ள தம் சேவகனை நினைத்து மிகமிக வருந்தினர்.

சேவகன் குதித்தபோது நாடு நெருங்கியிருந்ததனால், சிறிது நேரங் கிடைத்தால் தலைவர் தம் குடும்பத்துடன் ஓநாய்களினின்று தப்பிவிடுவார் என்றும், தான் ஓநாய்களுக்கு இரையாகாவிட்டால் எல்லாரும் இரையாக நேருமென்றும், அவன் அறிந்திருந்தான். ஆயினும், அவன் தன் உயிரைத் தத்தம் செய்ததற்கு இவ்வறிவன்று, அவனது அன்புகலந்த நன்றியறிவே காரணம்.

ஒருவர் செய்த நன்றியை மறத்தல் கூடாது. ஒரு வேலைக்காரன் தனக்குத் தன் தலைவன் அளித்த உணவிற்கீடாக உண்மையாய் உழைத்தபின்பும், தன் உயிரைக் கொடுத்து அவனைக் காப்பானாயின், அதை உயிர்க் கொடை என்னாது வேறென் சொல்வது ?

## பயிற்சி

கீழ்வருஞ் செய்யுட்கதைகளை உரைநடையில் வரைக :

### (1) வழிமுறைப் பண்பு

*செந்தமிழ் நாட்டுச் சிவகங் கைசோ*
*மிதிலைப் பட்டி மேதக வாழ்ந்த*
*அழகிய சிற்றம் பலக்கவி ராயன்*
*உறவினர் மணத்திற் கோளூர் சென்று*
*மீண்ட காலை மூன்றுரு பாவும்*

பழையதுந் தரவே பாங்கா யிசைந்து
வண்டி யொன்றை வாடகை பேசி
இரவில் ஏறி விரைவில் வருகையில்
வண்டிக் காரன் வாயிசை கேட்டு
நன்றெனப் புகழ வண்டிக் காரனும்
உன்றன் குடும்ப வரலா றியாதென
என்றன் முன்னோர் எல்லாரும் புலவர்
அவருள் ஏன்பே ருடையாற் கேயெம்
மிதிலைப் பட்டியை மானிய மாக
வெங்க ளப்ப நாயக்கன் விட்டனன்
அவனுணை வேயின் றூர அருந்துவம்
பிரிவினை யாலவன் பின்னோர் தாழ்ந்தனர்
அவன்வழி யினர்இன் றுருளர் கொல்லோ !
எங்கண் உளரோ எந்நிலை யினரோ !
என்றே யிரங்கி யிருந்துயில் மூழ்கினன்
விடிந்ததும் வண்டி மிதிலை சேர்ந்தது
கவிரா யன்தன் களிமனை புகுந்ததும்
பழஞ்சோ றுண்ணப் பகர்ந்தன னாயினும்
வண்டிக் காரன் உண்டி மறுத்தனன்
வாடகை யும்பின் வாங்க மறுத்தனன்
விடையே வேண்டினன் காரணம் வினவ
வெங்க ளப்ப நாயக்கன் வழியேன்
ஊழ்வினை யாலித் தாழ்நிலை யடையினும்
கொடுத்ததை வாங்குத லெனக்கில்லை
இன்றுனக் குதவிய தென்பெரும பேறே
என்றனன் வண்டி யியக்கினன் சென்றான்
கண்துளி கொளக்கவி ராயன்
பண்புறு வழிமுறைப் பாங்கை நினைந்தே.

(2) பள்ளிக் கணக்கு புள்ளிக் குதவாது

இலக்கணந் தருக்கம் நல்ல இசையொடு கணியம் நோய்கள்
விலக்கிடு மருந்திவ் வைந்து வித்தையொன் றொன்றே கற்றுத்
துலக்குறும் உலகப் போக்கு துளியதும் அறியா ஐவர்
புலக்கலை காணத் தக்க புரவலர் பரிசை நாடி, (1)

வடபுலம் நீங்கித் தெற்கில் வளமுறு வேலூர் ஆங்கண்
திடமிக அரையன் முன்னே திறமைக ளெல்லாங் காட்ட
விடவரு விருப்பின் மன்னன் வியந்துபா ராட்டும் போது
மடவர்இவ் வுலகவாழ்வில் மன்றவென் றமைச்சன் சொன்னான். (2)

எத்திறம் அறிதி யென்றே இறைமகன் வினவ இன்னே
அத்தனை பேருஞ் சென்றூண் அருந்தியே மீளச் சொன்னால்
மெய்த்திறங் காண்பா யென்று மேதகை யமைச்சன் கூற
உத்தர வாகி யன்றே உண்ணுதற் கவருஞ் சென்றார். (3)

தங்கிய மனைக்குச் சென்று தம்முணாச் சமைத்தற் கென்றே
அங்கவர் ஒவ்வோர் வேலை ஆற்றிட இசையில வல்லோன்
வெங்கழி நெருப்பை மூட்டி வேவுறும் உலையு மேற்றிப்
பொங்கியே கொதித்தல் கண்டு பொருந்திடத் தாளம் போட்டு (4)

இன்னிசை பாடிக் கொண்டே இன்பமுற் றிருந்த காலை
முன்னுற இசைந்து பின்னர் முடுகியே உலையுஞ் செல்லத்
தன்னையும் அவமதித்துத் தாளமுந் தப்பிற் றென்று
கொன்னுறு சினத்திற் சோற்றுக் குழிசியை உடைத்துப் போட்டான்.

தயிர்க்கெனச் சென்ற நல்ல தமிழிலக் கணியும் ஆய்சசி
உயிர்க்குறில் நெடிலை நீட்டி ஒலித்ததைத் திருத்திக் கூறிச்
செயிர்த்ததன் பின்னுஞ் சற்றும் செவிக்கொளா திருந்த தாலே
வயிர்த்ததோர் வெறுப்புக் கொண்டு வாங்குத லின்றி மீண்டான். (6)

காய்கறி வாங்கற் கென்று கடைக்குப்போய் மருத்து வன்தான்
நோய்தரு குறைகள் கூறி நுகருதற் குரிய தேதும்
வாய்பட லின்மை கண்டு வாங்குத லொழிந்து வந்தான்
வேய்தர அமைச்சன் விட்ட வினைஞரும் மகிழ்ந்து கண்டார். (7)

நெய்யினை வாங்கச் சென்ற நெடுமொழித் தருக்கி வாங்கிக்
கையினிற் கொணரும் போதே கருதிய நிலைக்க ளத்தின்
ஐயம தொழிக்கத் தொன்னை அடிமிசை யாகச சாய்த்தான்
ஒய்யெனச் சிந்தி நெய்யும் ஒழிந்ததால் உண்மை மீண்டான். (8)

இலையது பறிக்கச் சென்றோர் எழில்மர மேறப் பாதி
நிலையினிற் பல்லி சொன்ன நிமித்தமோ தீதா மென்று
கலையுறு கணியன் ஆங்கே கைசலித் திருந்து பின்னும்
மலைவுதீ ராமை யாலே மரத்தினின் றிறங்கி வந்தான். (9)

ஒற்றரால் அமைச்சன் இந்த உறுசுவைச் செய்தி யெல்லாம்
உற்றபின் அரைய னின்பால் உரைத்தனன் அவனும் அந்தக்
கற்றவர் சொல்லால் உண்மை கண்டவர்க் குரிய தந்து
நற்றிற உழையன் சொல்லை நம்பியே நாட்டை யாண்டான். (10)

சொல்லிய கதைதான் நம்புந் தோரணை யற்ற தேனும்
ஒள்ளிய புலமைக் கிந்த உலகிய லறிவும் வேண்டும்
பள்ளியின் கல்வி யெல்லாம் பயன்படா புள்ளிக் கென்னும்
தெள்ளிய வுண்மை யேனும் தேற்றுதற் குதவு மன்றே. (11)



## இந்நூலாசிரியரின் ஏனைய நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் | 1 | 8 |
| கட்டுரை வரைவியல் | 1 | 8 |
| உயர்தரக் கட்டுரை இலக்கணம் (*முதற்பாகம்*) | 2 | 8 |
| திரவிடத்தாய் | 1 | 12 |
| சுட்டுவிளக்கம் | 1 | 4 |

கழக வெளியீடு—கஎ0அ



*Published by*

**THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,**

1/140, **BROADWAY, : : MADRAS, 1.**

*Head Office :*

**24, EAST CAR STREET : : THIRUNELVELI.**

விலை ரூ. 2-8.

ஹப்பர் அச்சகம், சென்னை-1.